14-1
Acc No. 37884



உ

முருகக்கடவுடுணை :

# திருச்செந்திற்கோவை

# கௌமாரவிஜயம்

## கௌமாரத்தொகை

இவை

முருகதாசசுவாமிகள்-திருப்புகழ்ச் சுவாமிகள்,

என வழங்குகின்ற

மஹான் வண்ணச்சரபம்

**ஶ்ரீலஶ்ரீ தண்டபாணிசுவாமிகளால்**

அருளிச்செய்யப்பட்டு

தஞ்சாவூர் ஷாப்பு

ப. வெ. வெங்கட்டராமராஜா அவர்கள் குமாரரும்

சிதம்பரம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் ஆகிய

**ப. வெ. பழனிசாமிராஜாஅவர்களது**

பொருளுதவிகொண்டு

திருவாமாத்தூர்

**கௌமார சபையாரால்**

பதிக்கப்பட்டன

குரோதனஹு இடபரவி.

உ

குருவேதுணை :

இந்நூலாசிரிய சுவாமிகளின்மீது

உரிமை மிகுந்தவரும்

சுப்பிரமணியமூர்த்தியின் உபாசகருமான

தூத்துக்குடி

**முத்துசாமி பிள்ளை ஐயா அவர்கள்**

இயற்றிய செய்யுள்.

சத்தியஞ் சத்தியஞ் செந்தூரிற் கந்தன் றரணிமிசை
சித்த னருண கிரியே திருவவ தாரஞ்செய்திட்
டெத்தி சையுமு ருகதாச னென்ன வியங்குவதான்
முத்தியுந் தந்துல கத்தோரை யாள்குரு மூர்த்தமிதே.

குருபாதமேகதி.

உ

குருவே துணை.



மஹான் வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள் - முருகதாசசுவாமிகள்

என வழங்கும்

ஸ்ரீலஸ்ரீ - தண்டபாணிசுவாமிகள்.

கேசரி அச்சுக்கூடம், சென்னை.

குருவேதுணை

திருச்செந்திற்கோவைநூலின்

# உபோற்காதம்.

வெண்பா

சேந்திற் குமரன் றிருவருளார் சேந்தமிழ்ப்பா
வந்தித்தன்பிற்பகரு மாதவனுஞ்—சந்தச்
சரபன் றிருப்புகழோன் றண்டபா ணிப்பேர்
வரமுருக தாசனேந்தே வாம்.

வசனம்.

"திருச்செந்திற்கோவை" என்னும் இந்நூற் பெயரானது, தெய்வீகச் சிறப்புள்ள செந்திலம்பதியின் கண் எழுந்தருளி விளங்கும் ஸ்ரீ முருகப்பெருமானைக் குறியாகக் கொண்டு கோத்துச் சூட்டப்படும் பனுவல் என்னும் பொருள் தந்து நின்றது. ஏழனுருபடியாகப் பிறந்த அன்மொழித்தொகை.

இதனையியற்றிய ஆசிரியராவார், "திருமலிபுவியிற் பொருவருசெந்தமிழ், வியனது பொலியு நயமலிபாண்டி, நாடதன்றலையாம் பீடவிர்நெல்லை, யூரின் வேளாளர் சீரியகுலத்திற் றூயவன்செந்தி னுயகப் பெயரோன், செயுமுயர் தவத்தின் பயனெனத்தோன்றி, யெட்டாம்வயதிற் றட்டாத்தமிழ்வாக், கடைந்துசண்முகன்பா னிடைந்த நல்லன்புற், றனந்தநூலியற்றி மனக் தினமுருகி, யுபாசனைத்தவத்தி லபாரமெய்க்காட்சி, கண்டுசற்குருவாக் கொண்டுளசேவை, முருகன்காட்டிப் பெருகருண்ஞானச், சண்மதமாகு மூண் மதக்கூட்டும், புறமதமாகும் பிறபலவிதமுந், தன்னருளாட்டே யென்னகன் கியம்பி, யத்துவிதத்தகை நத்துகௌமார, சித்தாந்தத்தினில் வித்தாம்பொற் பினை, யுதவும்புகழ்பெற் றிதமொன்றிய மனக், கருணையிற்சிறந்தே யருணையின்கிளிதா, னுத்தமவிரத மித்தரைமுழுதுங், கொள்ளுதற்குரியநூல் விள்ளுதற்கென்னவுஞ், சமையவாதத்தொழிற் சுமையொழிந்துண்மைக், குமார நிச்சயத்திற் சமானமற்றனைவருங், கவுமாரங்கொடு பவுராணிகநெறி, சவுபானமாக மவுனங்கநிட்டை, யுற்றிடற்பொருட்டும் பெற்றதிப்பிறப்பென் றறிந்துலகியல்பின் முறிந்தருட்டவம்புரி, முருகதாசன் பெருகருணீதித், திருப்புகழ்க்காரன் பொருப்புறழ்மேன்மைத் தண்டபாணி விண்டபல்விதமாம், வண்ணச்சரப னென்னத்தகுமவர், கொண்டவிருப்பங் கண்டருள்வோனே" என்ற சிறப்புத்தன்மை வாய்ந்த பெரியாரென்க.

இவர் ஒரு காலத்தில், திருச்செந்திலடைந்து கந்தக்கடவுளைத் தெரிசித்துக்கொண்டு தவஞ்செய்து தங்கியிருந்தனராக, முருகக்கடவுள் இவரது நிட்டையிற் காட்சி கொடுத்து, நீ, இந்தத் தலத்தைக் குறித்துப் பதினறு தமிழ்ப்பிரபந்தங்கள் பாடினல் உனது விருப்பத்தை நிறைவேற்றுவோமென்றும், பதினேராவது பிரபந்தம் சொல்லும்போது, நமது பதமாகிய கந்தலோகத்திலுள்ள விபூதியும் உருத்திராக்கமும் உனக்குத் தந்தருள்வோமென்றும், ஓதினர். அதுகேட்டு, சுவாமிகள் மனமகிழ்ந்து தம்மைச் சூழ்ந்த புத்திமான்களிடம் இவ்விவரந் தெரிவித்தனர். அவருள் மிகுந்த அறிஞரும் உருகிய அன்பினருமான முத்துசாமி ஐயா அவர்கள்மீது செந்திலாதிபன் ஆவேசித்து, நான் குமரன் பன்னிரண்டு பிரபந்தங்களெனக்கும், வள்ளி தெய்வயானைக்கு ஒவ்வொன்றும், வீரவாகுக்கு இரண்டும், பாடுகவென்றும், திருநெல்வேலிக்குச் சென்று வைகாசி மாதத்தில் வருகவென்று மோதி அந்தர்த்தானமாயினர்.

சுவாமிகள் அவ்வாறே சென்று பாடத் தொடங்கிப் பத்துப் பிரபந்தங்கள் முடித்துப் பதினெராவது கந்தமாலை பாடியபோது, முன்சொன்ன வுத்தரவின்படி முருகன் கொடாமலிருந்தமையால் மனம் வருந்தி அவை முழுவதையும், தாம் பிரவன்னிரிற் கிழித்தெறிந்தனர்.

அவ்வாறு சில நாள் கடந்த பின் அன்பு முதிர்ந்து செந்திலாதிபனுக்குப் பதினறு பிரபந்தங்களும் உத்தரவின்படி பாடி முடித்தால் அநுக்கிரகத் திருவுள்ளம் வரக்கூடுமென் றெண்ணித் திருச்செந்திலடைந்து முருகப் பெருமான் சந்நிதானத்தில் வணங்கித் திருவுள்ளக் குறிப்புணர்ந்து

“ முன்னமென்னே டுரைத்தபடி யுன்னை நம்பு
முத்துசுவா மிப்பெயர்மா முனிவ னுவோன்
றன்னருள்வாக் கிடத்திருந்து குமர னுனென்
றனக்குப்பன் னிரண்டுசெழுந் தமிழ்ப்பா மாலை
வன்னமுலைக் குஞ்சரிக்கொன் றேனல் காத்த
வள்ளிக்கொன் றிரண்டுவிறல் வாகுக் கின்ன
சொன்னவக்கா லுன்விருப்பைத் தருவே னென்ற
சொற்புரந்தாள் செந்திநகர்ச் சுடர்வே லானே ”

என்ற செய்யுள் ஓதி விண்ணப்பித்து, பின்பு முருகப் பெருமானுக்கு, வெண்பாவந்தாதி, சிலேடைவெண்பா, திரிவந்தாதி, யமகவந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி, சேந்திலயகசதகம், உலா, நவரசமஞ்சரி, அகப்பொருட்கோவை, தசாங்கவகுப்பு, கௌமாரவிஜயம், சந்தமாலிகைத்திருப்புகழ், ஆகிய பன்னிரண்டு பிரபந்தங்களும், தெய்வானை யம்மைக்குக் குஞ்சரிமாலையும், வள்ளி நாயகியம்மைக்குப் பிள்ளைத்தமிழும், வீரவாகு மூர்த்திக்கு வாளலங்காரம்,

வண்ணப்பதிகம் ஆகிய, இரண்டும் ஆகப்பதினைறு பிரபந்தங்களும் பாடி முடித்தனர்.

அவ்வாறு கூறியதில் அகப்பொருட்கோவையாகிய இந்நூல் பாடத் தொடங்குந் தினத்தில் முருகக்கடவுள் சுவாமிகளது மனவெளியிற் காட்சி தந்து நீ நமக்குக் கோவைப் பிரபந்தம் பாடுவதில் முந்திய புலவர்கள் சென்ற வழியே முற்றுஞ் சொல்லாமல் உனது மனத்தில் உதிக்கின்றபடி பாட வேண்டுவது, என வுத்தரவளித்தருளினர். அவ்வாறே துவக்கித் தமது அநுபூதி யுண்மைகளையும் முன்னோர் விதியிலிணையச் சேர்த்துத்தான் சாட்சியாய் நின்று கலைமகளருளால் இந்தப் பனுவலைப்பாடி முடித்தனர் என்பது கீழ்க் கண்ட குருபர தத்துவக் காவியத்தின் திருச்செந்தூர்ச் சருக்கக் கவியினால் விளங்குகின்றது.

அது வருமாறு "அகப்பொருட்கோவை யொன்றையத்துவக்கு மந்நாள், செவ்வண்ண வேள்வந்து முன்னொருவர் சொன்னபடி செப்பேலுனதுளத்தி, லெவ்வண்ணம் வருமோவ வண்ணமோ தென்றுனிசைத்தேன்" என்றபடி.

அன்றியும், இந்நூலின் பாயிரத்தில், "மின்னோடுறமும் வைவேற் செந்திலானருள் வேட்டு முன்னஞ், சொன்னோர் வழியிலகப் பொருட்கோவை சொலத்துணியு, முன்னோர் விதந் தெரித்தானந்தவாறு முடிப்ப தனுக், கென்னோடு நீ துணையாவாய் வெண்டாமரை யேந்திழையே" எனக் கூறியமையாலும் அக்கருத்து விளங்கும்.

பொது விதியாகிய நூலிலக்கணங்களைக் கொண்டு சொல்வதோடு சிறப்பு விதியாகிய அநுபவ லட்சியங்களையுங் கொண்டு பாடுதல் வேண்டுமென்னுங் குறிப்பை முருகன் சுவாமிகளுக் கருளிச்செய்து தானுடன்றுணை நின்று பரம்பரை யன்பினருக்குப் பயன்படுமாறு சுவாமிகளைக் கருவியாக வைத்து இக் கோவைநூல் செய்ததென்றே கொள்வது சால்பாம். அதனைவிடுத்து நூலாசிரியர்மீது பழியேற்றி, ஆன்றோ ராட்சிக்குமாறு படக்கூறினரென்றும், தமது கொள்கையை நாட்ட விரும்பி முருகனுத்தரவெனச் சிறப்பித்தன ரென்றும், அங்ஙனமாயினும், கனவு நிட்டைகளிற் காண்பது சங்கற்பவிகற்பமே யன்றி யுண்மையாகாதென்றும், முரண்கொண்டு பலவாறு தூற்றுதல் அறிஞர் கடமையாகாது. சாமானியர் கூறும் பிதற்றுரை மேலோர்களது நிச்சயத்தைப் பீடியாதென்ப துண்மை.

அகப்பொருளென்றும் புறப்பொருளென்றும் பிரிக்கப்படுமவற்றுள் அகப்பொருளாவது பெண்களினுறுப்புகளைக் குறித்ததும் புறப்பொருளாவது கடல்மலை முதலியவற்றைக் குறித்ததுமெனக்கொள்வது *மரபாயினும் அது

* "மலைவளமுங் கடல்வளமு நகர்வளமு முதலா, வயங்கு புறப்பொருளமைப்பு மங்கை நல்லார்கும்ப முலைவளமுந் தலைவளமு நிலைவளமு முதலா மொழியுமகப் பொருள் வியப்பும்" என்றமையாற் காண்க.

பொது விதியேயாம். சிறப்புவிதியாக நோக்குமிடத்து, சடதேக விஷயவிவகாரமான சிற்றின்பமும் புறப்பொருளென்றே கொள்ளற்பாற்று.

சித்தாகிய ஆன்மாவுக்குரிய வுபாசனை மார்க்கத்தினிலேத்தவர்கள் மனமறியக்காணும் அநுபூதிப் பொருள்களை, ஆண்டானடிமைத்திறத்தின்பாற்படுத்தி, நாயகநாயகிபாவனையினும், நாயகிநாயகபாவனையினும் அமைத்து, மனம், அறிவு என்னுமவற்றைப் பாங்கிபாங்கனாக விசைத்துச் சமயபுராண சம்பிரதாயங்களையு மிடையிடைவிரவி வெளிக்குச், சிங்காரரசமாகிய சிற்றின்பப்பொருளும் உள்ளில் அநுபூதிரசமாகிய பேரின்பப் பொருளும் கசிந்து பெருகும்படி சொல்லப்படுவதுதான் அகப்பொருளென்றோதற் சிறப்பினதாகும்.

திருவாதவூரடிகளருளிச் செய்துள்ள திருச்சிற்றம்பலக்கோவை முதலிய வேதங்கள் அத்தகையனவே. வேறு பலவாறு ஏற்பட்டுள்ள அகப்பொருட்கோவைகள் சிற்றின்பவிஷய வர்னனையளவிற் கூறியொழிவனவாகி, அரசர், செல்வர் முதலியோர்க்குத் தலைமைகூறியமைவனவாம். அவை ஈங்கு அகப்பொருளென்றுபசரிக்கப்படுதலன்றி ஆராயுமிடத்துச் சிறிதும் அநுபூதிப் பொருளின்றி விவகாரக்குப்பைகளேயிருக்கும்.

"சீரணங்காயசிற்றம் பலக்கோவையைச் செப்பிடின், ஆரணங்காணென் பரந்தணர் யோகியராகமத்தின், காரணங்காணென்பர்" எனப் பெரியோர்களாற் புகழ்ந்தோதப் பெற்ற திருச்சிற்றம்பலக்கோவையானது சாமானிய சிற்றின்பப் பொருளளவிலமைந்த தாகுமோ? அதனிலுள்ள அநுபூதிப் பொருள்கள், வத்திராபரணவாகன சயனாதிபோகப்பயன்களைக் கருதிப் புலமைவலியாலிலக்கண விலக்கியங்களைத் துணைக்கொண்டு கற்பனையாகப் பலர்கூறும் அகப்பொருளிற் பொருந்துவது எப்படிக்கூடும்.

அவ்விருபகுப்பினுள் ஈண்டெடுத்துக் கொண்ட திருச்செந்திற்கோவையானது அநுபூதிலட்சியப் பொருள்களைப் பெரும்பாலு முட்கொண்டு சிறுபான்மை சமயபுராணசாரங்களைத்தழுவி,

சித்தினோசைபிசைச் சந்தனுசலமற்
செந்தின்மாநகரிற் கந்தநாயகன்முற்
சொந்தமாமுரிமைச் சிந்தையாலுருகிச்
சந்தமார்தமிழிற் றந்தகோவையெனப்,

பத்தர்கள் புலவர்களனைவரும் புகழ்ந்தோதும்படி சொல்வளம் பொருள்வளம் பொலிந்து நானூற்று முப்பத்தாறு துறைகளைக் கொண்டு விளங்குகின்றது. பழமையினர் கூறாதபுதுத்துறைகள் பல இந்நூலில் விரவிவருவது காணலாம்.

இவாற்கூறப்பட்டுள்ள அறுவகையிலக்கணத்துப் பொருளிலக்கணத்தின் துறையியல்பில்,

"காண்டலை யுறன்மெய் தொட்டுப் பயிறல்
கலவி மகிழ்தல் கான்முளைப் பழித்த
ஞணிக்கண் புனதத்த னற்று யிரங்க
றழைவியந் துரைத்த லாதிய நானா
றென்றே பற்பல ரியம்பினர் சிலர்தா
மிம்மக ளின்னுற் காமென விசைதலுங்
காதலற் றெழுதலுங் காட்டி மயக்கலுந்
தலைவன் றேடலுந் தன்னுரு மாற்றலு
மாதிய நவின்றன ரன்றியு மொருவன்
பெண்மட லேறிய பெற்றிகூ றினனே" என்றும்,

"துறைத்தொகை யொருவிதஞ் சொல்வார் சொல்லினு
நூறுதொட் டாயிரம் வரைநுவன் றதன்பெயர்
வேறிடத் தருமென விளம்ப லென்னிசை
வுயர்த்தினுந் தாழ்த்தினு மொண்பொருட் சுவைகண்
டெடுத்தலு மிகழ்தலு மியல்பா மன்றே" என்றும்,

"இன்ப வெள்ளத் திசைவுறு மொவ்வோர்
நிகழ்ச்சியுந் துறைக ளாமென னெறியே"

என்றும் கூறியதாலிவ் வாசிரியர் கூற்று நன்கு புலப்படுகின்றது.

இன்பமாவது சிற்றின்பம், பேரின்பம், என இருபகுதியானவாறும், அவை தனித்தனியாவாய்நுபவிப்போர்க்கு, அளவுபடாது பலபடவிரியும் பண்பினவாதலிற் கடல்போன்றவாறும், கடலினிடத்துக்கண்ட துறைகள் பல, இனிக்காணற்பால துறைகள் பலவாகிக் கணக்கிலடங்காமைபோல், இவ்வின்ப அநுபவத்துறைகளும் பலவாதலும், அது பற்றி அவ்விருவகையின்பப்பொருள்களையும், ஒருங்கே தம்முட் கொள்ளுங் கவிகளையுடைய இந்தக் கோவை நூலைப் பலவாறு துறைகளமைத்து நூலாசிரியர் கூறியுள்ளாரென்பதும் உண்மை. இதனை விளக்கி, இவர், "இன்பக்கடலின்றுறை கோடியென்னு மியல்பறியாத் துன்பக்கவிஞர்க்கும்" எனப் பாயிரத்திற் கூறினர்.

பொருள் கொள்ளுமிடத்து நூலாரம்பமுதல் முடிவுகாறும், உள்ள துறைகள் முழுதும் ஒரே தலைமகன் தலைமகளுக்கெனக் கொண்டு கூறாது, அவ்வப் பகுதித் துறைகட்கேற்ப வெவ்வேறு தலைமகன்றலைமகள் பாங்கன் பாங்கியாகக்கொண்டுணர்தலே சால்பாகும். பாட்டுடைத்தலைவனும் பதியும் வேறுபடாது துறைத்தலைமகன் தலைமகளைப் பேதித்துக்கொள்ளுதல் பிழையாகாது பொருத்தமேயாம். என்னை?

முன்னொரு கவியிற் கலவி மகிழ்தல் கூறிப் பின்னொருகவியில் மடலூர் தல் கூறின், கூடிப் பிரிந்த தலைமகளின் புலவிகண்டழுங்கி அதனை நீக்குந் திறமை போதாத தலைமகன் மடலூர்ந்து பலரறிய விதிப்படி யவளைக்கொள் ளத் துணிந்தமை பெறப்படும். அநுபவித்த பெண்ணின்மீது மீண்டும் விருப் பெழின் இனிதினிசைபக் கொள்வதை விடுத்து வலிதின் மடலூர்ந்து கொள் வது பேதைமையாகும், ஆதலினென்க.

இக்கருத்தை விளக்கியிவர், பாயிரக்கவியில், "தொந்தங்கருதி முன் றோய்ந்தகன்ற, பின்பக்க லெய்தமடலூர்வ ரென்கின்ற வீணர்" என்று கூறி னர் அன்றியும், தலைமகன் கூற்றாக இந்நூலின் றொன்னூறாவது கவியில்

"சுரும்பவிர்கூந்தலக் தோகைநல்லாண் முலைதோயச் செய்யக், கரும் பனைவார்மடலன்றி மற்றோர்துணை கண்டிலனே" என்றும், கூசவது கவியில்,

"பொன்சேர்க் தசெந்திற் பதியான் பொருப்பிலப் பூவைதன்னை, முன் சேர்ந்த நில்லைநின் னுணைமெய் காண்டொட்ட மொய்குழலைப், பின்சேர்தற் கித்தனை வாறு வருந்துறும் பேயனல்லேன்" என்றும் கூறு-வது கவியில்,

"கலந்தாடிக் கொண்டான், முற்றுன் மடற்பனை யூர்வதென்கின்ற முறை தவறு, கற்று ருரைப்பினுங் கான்றமைக் கேங்குங் கனைக்சொக்குமே" என் றும் விதந்துள்ளார். கஎ-வது கவியில்,

"சித்தர் குழாம்புகழ் செந்தூர்க் குமரன் சிலம்பிடத்திற் பைத்த வரா வுறமூல்குன்மின் னுன்முலைப் பாரந்தொட்டுப் புத்தமிழ் தன்ன விதழுண்டு கொஞ்சிப் பொருவில்கவுன், முத்தமிட் டின்பமுற் றேனும்பர் மாதரு மோகிக் கவே" எனக் கூறி மகிழ்ந்த தலைவனே பின்புமடலூர்வ னென்பது பொருந் திய தன்றன்றோ அறிஞர் ஆராய்ந்து மகிழ்வார்களாக. இதுநிற்க.

---

# கௌமாரவிஜயம்வருமாறு

வெண்பா

மிக்ககவு மார விசயத் தமிழ்ப்பனுவ
றக்க திருச்சேந்திற் சண்முகன்மேற் — றேக்க
தமிழ்த்தண்ட பாணிகுரு சாற்றியமெய் யோரிற்
சிமிழ்க்கோங்கை வாணிசேயல்.

வசனம்

கௌமார விஜயம், என்னும் இந்நூற் பெயரானது ஆறனுருபு படியாகப் பிறந்த அன்மொழித் தொகையா யிதனுக்கோர் காரணக்குறியா யிற்று. கௌமாரத்தினது பெருமையை விளக்கு நூலென்னும் பொருளைத் தந்து நிற்றலானென்க.

## பொது.

கௌமாரம், குமாரசம்பந்த முள்ளது. அது வைதிக சமையங்களாறனு ளொன்று யெண்ணப்படுவ தென்றல் பொது விலக்கணம். அதாவது பரமசிவனது குமாரனைத் தோன்றிய முருகன் எமது கடவுளெனக்கொள்ளு நெறியாம். இந்நெறி நின்றோர் தமது கடவுளுக்காதிக்கங் கூறி, அஃதல்லாது வேறு பல தெய்வங்களுண் டென்றும் அவை கீழ் நிலையன வென்றும் வாதித்துப் பேதித்துச் சாதித்துப் பிறருக்குப் போதித்துத் திரியுநிலையாற் சமயவாதரெனப்படுவர். இது பௌராணிகப் பகுதி. இந்நிலை, உலக கௌமாரம், மகாவிரத கௌமாரமென இருதிறப்படும் என்க.

## பொதுச்சிறப்பு.

குமாரனென்பான் சுயம்பான கருணைத் திருவுருவுடையான், சர்வ சத்தி சொருப வேலாயுத முள்ளவன் அவனை விட முதன்மைப் பொருளாவாரியாருமிலர் அவனுடைய கிருபையாற் பலர் சிவன் முதலிய மூர்த்திகளாய் விளங்கியொடுங்குவ ரெனவும், அகண்ட சச்சிதானந்த பரம்பொரு ளொன்றேயாகும், தன் பயன் கருதலின்றிப் பொதுநலங் கருதி அறக்கருணை மறக்கருணை பொருந்தி ஞானவேலினல் உலகத்தைச் சீர்திருத்தம் புரிந்து முத்தியிற்புகும் சொருப சித்தர்களையே அறிஞர் குமாரனென்று கூறுவர். அத்தகைய குமாரனே யெல்லாப் பொருள்களுமாவன் அவனுக்குப் பகையான சூரனென்றோதப்படுவது குருகடாட்சமல்லாத எவ்வகையாலும் நீங்காத ஆணவவிருளே, எனவும் கூறுவது பொதுச் சிறப்பிலக்கணம் இது வுபாசனைப் பகுதி, இந்நிலை துவித கௌமாரம், அத்துவித கௌமாரம், என இருவிதப்படும்.

## சிறப்பு.

குற்றமற்ற பண்டிதத் தன்மை பாவலத் தன்மையுடை யோராய், முழுநீறு பூசித்தண்டங் தரித்து வேற்பூசை விரும்பி, நின்று, உலக சம்பிரதாயக் கதைகளின் மயங்காமல் அருளில் நிலைத்து, மனித வுடம்பெடுத்தவருள் யாவரும், கொலை புலையின்றி விளங்கக் காண்பவன் எவனோ அவனே குமாரனெனவும்,

உபாசகனது நிலைத்த பாவனைப்படி பரம் பிரதிபலிக்கிற சகளத்திருமேனியே அதனது குமாரனென்றோதப்படுவது, மன்மதன் முதலிய இழி தெய்வங்களாகச் சொல்ல நிகழ்வதும் அந்தக் குமாரனையன்றி யில்லை அத்தகைய குமாரதெரிசனம் பெற்றுச் சாதகநிசையாகிய கௌமாரத் தன்மை முதிர்ந்த மேனிலையாகிய குமாரத் தன்மையை யடைந்து சிவகற்பிதச் சிறுமதங்களையழித்து வைதிக சமையஷட்கம் வலுக்கச் செய்து பொருளொன்றென்னும் நிச்சய வுணர்ச்சியைப் பலருக்கும் விளைப்பவனே குமாரனென்றும் கொள்வது சிறப்பிலக்கணம். அது சமரச கௌமாரம், அதீத கௌமாரம், என இரு திறப்படும்.

அங்கி.

இவ்வாறு கூறப்பட்ட இலக்கணங்களின், உட்பிரிவான அங்கங்களை யுடைய அங்கியான கௌமாரமாவது, தமது நூலதிட்டிக்குக் காரியமாய்த் தம்போன்ற நூல வடிவத்துடன் விளங்கித் தவமார்க்கத்தைச் சொல்லியரு ளிய குருவினது திருமேனியை அகண்ட சைதன்ய வஸ்துவின் கருணைச் சகளமென்றும் அதனது வல்லவ முழுவதுந் தன்னிடமிருக்கவும், தம் பொருட் டினம்போல நின்று நடிக்கும் லீலையையுடைய குமாரனென்றும் அகத்தும் புறத்தும் நிலைக்கக்கொண்டு வழிபட்டுச் சிறிதும் மனித பாவனை தோன்றுவாறமைந்து, எக்காலத்திலும் குருவின்றிச் சமயங்களில் லாமையால், எல்லாச் சமயங்களுக்கும் குருத்தன்மை வகித்து நிற்பது ஒரே பரம் பொருளென்றும், பலபடத் திரிவுபடுதல் ஆன்ம பக்குவ பேதங்களைக் காரியப் படுத்துங் கருணையும் நீதியுமெனவுங் கொண்டு அவைகளைப் பழிக்காமலும், அவற்றி லமிழாமலு நிற்கு நிலையாம்.

மேற்கூறிய பகுதியேழினுள் இந்நூலாசிரிய சுவாமிகள் கைக்கொண்ட சத்தியக்கொள்கை பிந்திய மூன்றையும் அழுந்தப்பற்றியமைந்து முந்திய நான் கையும் பொதுவுஞ்சிறப்புமாகத் தழுவி நின்றதெனக் கொள்ளலாம்.

இந்நூலைத் திருச்செந்திலாதிபன் முன்னிலையிற் சமர்ப்பிக்கப்பட்ட பதி னறு பிரபந்தங்களில் ஒன்றாக அமைத்து, அவதாரம், தெரிசனம், விளையாடல், கருணை, வென்றி, உபதேசம், ஈகை, அபிமானம், ஐயமறுத்தல், திருவாய்மலர் தல், சத்தியம், சேவிகோவினவல், வல்லபம்வேண்டல், புகழ்வேண்டல், திருவடிவேண்டல், காப்புக்கூறல், என்னும் பதினறு பருவங்களாகவும், பருவ மொன்றுக்குக்கவி பன்னிரண்டாகவும் ஆக, நூற்றுத்தொண்ணூற்றிரண்டு கவி களாலியற்றிக் கௌமாரவிஜய மென்னும் பெயரால் முடித்துள்ளார்.

அந்தரங்கத்திற் சமயச்சார்பான பேதபாவனையும், பௌராணிசப் பகுதி யான கண்டபாவனையும், இன்றிச் சரியையாதி பாதங்களிற் பிரவேசிக்கும் பக் குவ ஆன்மாக்கள் படிப்படியா யடையும் நிச்சய விவரங்களை ஆங்காங்கு விர விப் பரோபகார தருமமாகக் கருணையினலெடுத்துக் காட்டி, முடிந்த தமதநுபவ நிச்சயத்தைப் பலருக்கும் பயன்படச் செய்யவேண்டுமென்ற வுறுதிப்பாடு கொண்டே யியற்றியுள்ளாரென்பது இந்நூலின் எட்டாம் பருவம் மூன்றாவது கவியாலும் பிற சில கவிகளாலும் பெறப்படுகிறது.

"குருவுற்றசமையங் களத்தினையுமுட்கொண்டு குலவுகவுமாரநெறியைக், குவலயத்தினர்களுஞ் சித்தகோடிகளெனக் கொள்ளப்புரிந்துவக்கும், பெருமைக் கவாவுற்றும் வாடுகின்றேன்" என்றபடியாம்.

இந்தக் கௌமார நிச்சயத்தை யின்னும் கௌளமாரமுறைமை, கௌமார லகிரி, கௌமாரநூல், கௌமாரதீபம், கௌமாரவிநோதம், சுப்பிரமணியம், குருமுதற்பாசுரம், பதிகவந்தி, சதகவந்தி, நானிலைச்சதகம், ஞானவந்தாதி,

பிரணவாநுபூதி, தியாநுபூதி, முதலிய விதி நூல்களாலும் நன்கு விளங்கக் காட்டியுள்ளார்.

இதனிற் காட்டப்பட்ட, உலகம், மகாவிரதம், துவிதம், அத்துவிதம்' சமரசம், அதிதம், ஆகிய அங்கலக்ஷணங்களும், சகள நிட்கள சமரச குருப ரத்துவ நிச்சயவிவேகாநுபவமாகிய அங்கிலக்ஷணமும் பக்குவத்துக்கேற்ற வாறு பொருந்தியிருப்பன வென்பதுண்மை. பெயர்கள் வேறு வகையாகத் தோன்றினும், முன்னூல்களிற்றரந்தரமாகக் குறிக்கப்பட்ட விஷயங்களை யமைந்துள்ளன வென்பதும், அவற்றை ஆசிரியர் சாத்திரக் கல்வியாகிய அபர ஞானத் தெளிவை மாத்திரம் கொண்டு எழுதினாரல்லரென்பதும், அவைதவம் என்னும் விருட்சத்தின்வேர்முதல் நுனிவரையுள்ள பேதம் பலபோலத் தோன்றினும் மரம் ஒன்றேயாதல்போல, சரியைமுதல் ஞானமீறாகிய விஷயங் களையே பொருளாகக் கொண்டு கௌமாரம் அமைந்துள்ளவாற்றைத் தமது அநுபூதியால் அறிந்து விளக்கியுள்ளாரென்பதும், அன்பர் அறிவுக்கொப்ப முடிந்த வுண்மையாம்.

இத்தகைய கௌமாரவிஜயநூலையிவர் பாடிமுடிக்குமுன் செந்திலரதிபன் இவரது மனவெளியிற் காட்சியளித்து இதனது முடிவான பதினாறுவது பரு வத்தை முற்றிலும் அறுபத்து நான்கு கலைவண்ணக் கவிகளாகச் சொல்லுக வென்றாக் ஞாபித்தனராக அந்தப்படி செய்து முடித்தனரென்ற விஷயம், "கவுமாரவிசயச், சொற்பனுவலொன்று பதினாறு பருவத்ததாச் சொல்லிவங் கிடு நாளையில்" "வீரவேலாயுதக் கடவுள் வந்திதன்முடிவில் விண்டிடும் பருவ மொன்றுஞ் சாரமுறு மென்னெண்கலைக்கவிகளேயான சந்தமாச் சொல்க வென்றான்" என்னும் குருபாதத்துவக் காவியக்கவியால் விளங்குகிறது.

இவ்வாறு கோவை கௌமாரவிஜயம் முடித்து மற்றை நூல்களையும் நிறை வேற்றிய சுவாமிகள் செந்திலாதிபன் சந்நிதியிலரங்கேற்றக் காலங்குறித்துப் பத்திரிகையிட்டுப் பலவூர்ப்புலவர்கள் பத்தர்கள் செல்வர்கள் சகிதம், அத் தலத்துத் திரிலோக சுதந்தரப் பிராமண சிலர்களின் விருப்பப்படி யானையின்மீது புத்தகமமைத்துத் திருவீதி வலம்புரிவித்துச் சந்நிதியிலிறக்கி முருகன்றிருவடியிற் சாத்தியாராதித்தபின் சண்முகவிலாசத்திலமர்ந்து பதி னாறு தினங்களிலரங்கேற்றி முடித்தனர்.

அப்போதுடனிருந்து கண்டு கேட்ட அன்பினர் ஆனந்தமடைந்தனர். முருகக்கடவுள் சந்நிதியில் பிராமண வுத்தமர்கள் இலை விபூதி சந்தனபுஷ்பாதி பிரசாதங்கள் சுவாமிகளுக்குக் கொடுத்தாசிர்வதித்தனர்.

முருகன்சொன்னபடி அநுக்கிரகிக்கவில்லை யென்று மனம் வருந்திக் கொண்டு சுவாமிகளிருந்தனர். ஸ்ரீ செந்திலாதிபன் சுவாமிகளது மனவெளி யிற் காட்சி கொடுத்து, நானும் உன்னைப்போல முருகன் றொண்டர்களி லொருவனே, ஆனால் உன்னிலும் கொஞ்சம் பெரியவனென்றோதினர்,

இது விஷயத்தைக் குருபர தத்துவக் காவியத்திற் கீழ்க்கண்ட கவிகளால் விளக்கி யுறுத்தியுள்ளமை காண்க. - அது வருமாறு.

அன்றியம் பியபேறியா தசத்தியம் புரிந்திட்டாலும்
பொன்றிர ளேனுநல்கிப் புகழ்க்கடல் விளைத்தானில்லை
குன்றிய மனத்தனுகிக் கூறருந் துயர்மேற்கொண்டு
கன்றினே னெருகனுவிற் கவின்கொள்செந் தூரான்வந்து
யானும்வேன் முருகனுளே யென்னினின் றன்னிற்சற்றே
வேனுறும் பெரியனென்றுன் வெட்கமோர் சற்றுமின்றித்
தானுரைத் திடும்மாற்றஞ் சாதமா னுனுந்தாழு
நானுவப் புறவேதேனு நல்கிடக் கடனுண்டம்மா.

இம்மொழி யவன்சொல்லாம லியான்சொனு னரகில்வீழ்வே
னம்மொழிப் பயனியாதோவென் றறைகுவார்க் கலக்கணில்லை
பொய்ம்மொழி தானேயென்னப் புகன்றிகழ்பொல்லாரெல்லாம்
வெம்மொழிக் காலதூதர் வினையிடை மெலிவார்மெய்யே. என்றபடி.

பலருமறியப் பகிர்முகமாகச் சித்திகளியற்றும் பேறுகொடுக்காமை பற்றிக் கூறினரேனும் அநுபூதிச்செல்வத்திற் குறைவிலரே யாவர்.

"அவ்வச்சமயத் தேவர்களு மகண்டபரமியா னென்றிடனு
மெவ்வத்தடியார் களிலொருவ னென்றிடலுங்கேட் டுள்ளேன்மெய்
யிவ்வற்புதங்கண் டநன்பின்னர் யானும்பொதுவா யிலகுற்றேன்
பவ்வப்புனல்சூ ழுலகுணரும் படியாடிடுஞ்சீர் படைத்திலனே"

எனக்குருபரத்துவச் சமயாதிதச் சருக்கத்திற் கூறியதால் மேற்சொன்ன கருத்து விளங்குவதாம். என்னை ?

எந்தச் சமய மூர்த்திகளாயும் பாவனைப்படி சகளீகரிப்பது பரம்பொருளே யென்று திருவருளுணர்த்தப் பெற்றதே கந்தலோகத்து விபூதியும்.

மூர்த்தி சகளங்களிலொன்றை யுபாசித்து அது முதிர்வுழி அவ்வடிவுந்தன்மையும் பெற்று விளையாடி மறையுஞ் சொருப சித்தர்கள் பரம்பொருளே யென்றுணர்த்தப் பெற்றதே கந்தலோக வுருத்திராக்கமும்.

இத்தகைய அநுபூதியிலமைந்து தாம் ஒருவகையில், அடிமைத்திரமும் ஒருவகையில், தலைமைப் பரமும் பப்பாதிகலந்த நிலையில் விளங்கியதே அவற்றைத் தரித்துக் கொண்டமையும், கௌமாரத்தன்மையுங் குமாரத் தன்மையுங் கலந்த நிலைமையே ஞான நிலையென்பதும் சத்தியம்.

பெற்றது கொண்டு திருத்தியுறுமல் உலகினர்காண அச்சிறப்பைக் காட்டவேண்டிய கருணைக்குத் திருவருணிதி ஒத்துவர வில்லையென்னும் ஊடல் பற்றிப் பலவாறு சுவாமிகள் பாடல்களிற் கூறியுள்ள விவரங்கள் சிலருக் கொருவாறு விளங்குவனவும் பலருக்குச் சிறிதும் விளங்காதனவுமா யுள்ளன. நிற்க,

இந்தச் செந்திலாதிபனது பன்னிரண்டு புயங்களிலும் பதிந்து விளங்கும் அங்கதங்களென்னத் தகும் பெருமை யமைந்துள்ள பன்னிரண்டு பிரபந்தங்களேயும், மாதம் ஒன்றுக்கு ஒன்று வீதம் நியதிவைத்து நித்தியபாராயணத்துதியாகக் கொண்டநுட்டிக்கும் பக்குவிகள் எய்தும் பயனளவற்றதென்பது திண்ணம். அவ்வாறநுட்டித்தற்குரிய பக்த சிகாமணிகளின் விருப்பப்படி எல்லா நூல்களும், வல்லிதேவசேனு வீரவாகு மூர்த்திக்குரிய பிரபந்தங்கள் நான்கும் வெளியாகுமாறு முருகக்கடவுள் நிறை வேற்றும் காலத்தை யெதிர் நோக்கியுள்ளேன்.

ஆண்டானடிமைத்திரத்தைச் சிற்றின்பப்பொருள் வாய்பாட்டிலமைத்துச் சொல்லும் திருச்சிற்றம்பலக்கோவையும், பேரின்பப்பொருள் வாய்பாட்டிற் கூறும் திருவாசகமும்போல, ஈங்கு, திருச்செந்திற் கோவை நூலேயும் கௌமாரவிஜயநூலேயும் ஒருங்கே சேர்த்து அச்சிடுமாறு திருவருட்குறிப்பின்படி, கோயமுத்தூருக்கடுத்த சிரவணபுரம் கௌமாரமடாலயத்தி லெழுந்தருளியுள்ளவரும், இந்நூலருளிச்செய்த மஹான் வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகளென்ற ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகளது அருளநுபூதி பெற்ற பிரதம மாணுக்கருமான ஸ்ரீமத்-இராமானந்த சுவாமிகள் செய்தவுத்தரவைச் சிரமேற்கொண்டு சிதம்பரம் போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் ப. வெ. பழனிச்சாமி ராஜா அவர்கள் அச்சிடப் பொருளுதவிப் பெரு நன்மைகளெய்தப் பெற்றனர். இந்த நூலாசிரிய சுவாமிகள் திருவுரு மறைத்து இருபத்தேழு வருடங்களாகின்றன. விழுப்புரத்துக் கடுத்த வடமேற்கு இரண்டரை மயிலிலுள்ள திருவாமாத்தூரென்னும் பிரபலசிவக்ஷேத்திரத்தில் ஞானசமாதிக்கொலுவமர்ந்ததன் அங்கமாகத் திருப்புகழ்த் தண்டபாணிசுவாமி ஆலயம் அமைக்கப்பட்டு நித்திய நைமித்திகங்கள் முறையாகக் கௌமாரர்களாலியற்றப்பட்டு வருகின்றன. ஷை சந்நிதானத்தில் அமைந்துள்ள சதுர்வேதசித்தாந்தசண்மத சமையாதீத அத்துவித கௌமார சபையாரால் இப்புத்தகம் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

சுப்பிரமணிய பக்தியும் அழுக்காறு முதலிய துர்க்குண நிவிர்த்தியும் தமிழ் விற்பத்தியுமுடைய ஒவ்வொருவருக்கும் இந்நூல் மகிழ்ச்சி விளைக்காமலிராதென்று அடியேன் உறுதிகூற முன்வருகின்றேன்.

மேலாங்கௌமார விசயமுங்கோவை வியன்றுறையுங்
கோலாகலத்திருச் செந்தூர்க்குகன்மனங் கொண்டுவப்பத்
தோலாப்புகழ்த்தண்ட பாணிக்குருபரன்சொன்னவற்றை
மாலாந்தஞ்சைப்பழனிச்சாமி யச்சிடன் மாதவமே

குரோதன௵ இடபாவி }

இந்நூலாசிரிய சுவாமிகளின் மாணுக்கனுங் குமாரனுமான
தி. மு. செந்திநாயகம்பிள்ளை,
கௌமாரமடாலயம், திருவாமாத்தூர்.

குருபாதமேகதி

உ

குருவேதுணை

இந்நூலாசிரியசுவாமிகளது மாணாக்கரும் குமாரருமான

தி. மு. செந்தினாயகம்பிள்ளை யியற்றிய

# பதிப்புப்பாயிரம்

அறுசீர்விருத்தங்கள்.

கந்தநாயகன்புயத்திற் கிளியாகிச்சேர்ந்துசந்தக் கவிதைபாடுஞ்
சொந்தமாருணகிரி தனைக்குகவேள்கருணையினாற் றொடுநீர்ப்பாரில்
வந்தநான்மறைச்சமய மாறிலொன்றுமென்றுகவு மாரந்தன்னை
மைந்தரோர்தாப்பலவாம் விளையாடலியற்றியென்பால் வந்துள்ளாய்நீ. (க)

திசையாறேமுகமாகிச் சமயங்கள்பன்னிரண்டுந் திருத்தோளாகி
யிசைவேதாகமமுடிவே பதந்துணையாயிச்சைதொழி லிரண்டுந்தானே
நசைமேவுசத்திகளாய்க் குண்டலிசெஞ்சிகியாகி ஞானம்வேலாய்
வசைதிரத்தொனித்தபர நாதமேசேவலென வயங்கக்கொண்டு. (உ)

சுப்பிரமண்ணியமாகித் திகழகண்டபரமேமெய்த்தொண்டராசான்
செப்பியவாய்மையிற்றிறம்பா தொருவழிப்பட்டியற்றுதவஞ் சிறந்தகாலை
யப்பிரிவின்படியருளாற் றடிக்குமதேகுமாரனென்று மதனைக்கண்டு
கைப்பில்பெருஞ்சித்தியற்று மவனேமெய்க்குமாரனென்றுங் கதிசேர்மார்க்கம்.

சொல்லாலுங்குறியாலு நடையாலுங்காட்டவந்த தோன்றலுனே
யெல்லாமாகியபரமாங் குமாரனென்றும்பலமதமு மியற்றலந்த
வல்லானேயென்றுமுயிர்ப் பக்குவங்கட்கேற்றமுறை வழங்கலென்றுங்
கொல்லாமைதசையுணவு புல்லாமையுள்ளனமேற் கூறுமென்றும். (ச)

மற்றவைகீழ்க்கூறென்று முணர்ந்தவற்றி லுழலாமன் மறந்துநீசக்
குற்றமுளவென்றிகழ்ந்துபேசாம லிரக்கமொன்றே குறியாக்கொண்டு
நிற்றலெனுங்கவுமார நெறியையுலகினில்விளக்கு நிமித்தநின்னோர்
நற்றவைபகலைபுவியி லவதரிக்கவிடுகவென நவின்றதாலே. (ரு)

நெல்லைநகரிடைதோன்றிச் சிறுவயதிற்கவிமாலை நிலவச்சாற்றி
யெல்லையில்பூசனைதவங்க ளியற்றிமிகுதலம்போற்றி யிலங்குநாளிற்
குல்லைமலர்த்தொடையுறழ்சந் தப்பனுவல்கவுமாரங் கூறுநூல்கள்
செல்லையுறழப்பொழிந்து முழுநீறுங்கண்டிகையுஞ் சிகையுந்தண்டும். (சு)

கோவணம்வெண்கீளொடுகல் லாடையெழிற்பாதுகையுங் குறைதீர்தொண்டர்
பாவனையிற்பதிந்திருமார்த் திடுமோனமுத்திரையும் பற்றிவாசப்
பூவகைகொள்பொழிற்பொதியைக் குகையிலருந்தவமியற்றிப் புரையில்காட்சி
மேவவடைந்தருட்சருவ பிரசாதங்கொண்டினிது விளங்குநாளில். (௭)

மறைமுழங்குந் திருச்செந்திற் குமரேசன் றிருவடித்தா மரைகண்மீதே
கறைதவிர்செந் தமிழ்ப்பனுவ லொருபதினு றவனுரையாற் கழறினனெங்
குறையறுக்குங் குருபரனு கியமுருக தாசனிசை குலவும்வண்ணத்
துறைசொறிருப்புகழ்முனிவன் றண்டபாணியன்பெருமை சொல்லப்போமோ.

அப்பனுவல் களிற்கோவை கவுமார விசயமிரண் டரியநூல்கள்
செப்பமுறு தஞ்சைநகர்ச் சத்திரிய குலத்துதித்த சீலன்மேலாந்
துப்பவிர்மே னிக்குகனன் புடையோன்வெங் கடாரமத் தோன்றன்னோன்பின்
மெய்ப்பயனுத் துலங்கியருட் பழனிச்சாமித்திருப்பேர் வேய்ந்ததூயன். (௯)

தனதுபிதாவாமவன்முன் றண்டபாணிக்குரவன் சாற்றுநூல்க
ளினதருமை யறிந்துபல வகையினிதச் சியற்றும்வித மெண்ணியோர்ந்தே
யுனலரிய தந்தைமதி மகற்குறுமென் மறைமொழியை யுறுதியாக்கிக்
கனமுடனச் சியற்றவிழைந்தெழிற்செந்தூர்க் குகன்றிருமுன் கண்டுபோற்றி.

கொங்குவள நாட்டிலவிர் சிரவணமா புரத்தில்வளங் குலவுசீர்த்தி
தங்குகவு மாரமடா லயக்கனக சபையிலுயர் தவஞ்செயுண்மைத்
துங்கமிகு மிராமானந் தப்பெரியோன் றனையுமவண் டொழுதிட்டன்னோன்
செங்குமுதக் கனிவாயி னருளுரைபெற் றன்புநிறை சிந்தையாலே. (௧௧)

அச்சியற்றற் கானபொருள் வலிதளித்திட் டனன்றிருவா மாதையூரிற்
பச்சிலையிட் டார்க்கும்வரந் தருமபிரா மேசனருள் பரவுமாறு
மெச்சிடுசெந் தமிழ்மழைபெய் மேகமெனுந் திருப்புகழோன் விளங்குங்கோயி
னச்சியகௌ மாரசபைத் தொண்டர்வெளி யாக்கிமிகு நலம்பெற்றாரே. (௧௨)

அருளின்வளப் பயனடைந்த தண்டபாணிச்சரப னறைந்தநூலாற்
றெருளின்முழுப் பயனடைந்தார் கவுமாரத் தொண்டர்பலர் திரண்டசெல்வப்
பொருளினெழிற் பயனடைந்தான் பழனிச்சாமிப்பெயரும் பொருந்திமாயா
விருளின்வினைப்பயனடைந்தோர்க்கயலாய்நற்றவரடித்தொண்டியற்றுவோனே.

திருச்செந்திற் கோவைகவுமார விசயத்தினைப் போற்றிகழீரேழ்நூல்
கருச்சிந்திக் கதியடையு மன்பினர்க்கோர் துணையாகிக் கவினச்சேறத்
தருச்சொந்தப் பயன்மகவா னுறக்கொடுத்த கதிர்வேற்கைச் சண்முகேச
னுருச்சிந்தித் தேத்திவணங் குவனடியே னவனுளப்பாங் குணர்கில்லேனே.

முற்றிற்று

குருபாதமேகதி.

---

குருவே துணை.

## திருச்செந்திற்கோவையிலுள்ள

# துறைகளின்விவரக்குறிப்பு

### பாயிரம்.

விநாயகர்துதி, சரசுவதிதுதி, செந்திலாதிபன்றுதி.

### நூல்.

### தலைவன் வாய்பாடு.

காண்டல், ஐயுறல், தேற்றம், நெஞ்சொடுகிளத்தல், மதன்றொழிற்கிரங்கல், பிரமனைப்பழித்தல், விழிவலி கூறல், பார்வைக்கிரங்கல், அணுகற்கஞ்சுறல், குறிப்பறிந்துவக்கை, காணிக்கண் புதைத்தல், நாண்வியந்துரைத்தல், மடனறிந்துவத்தல், அச்சக்குறியறிதல், பயிற்பெடுத்தோதல், வண்டோச்சல், கலவிமகிழ்தல், கொங்கைத்திறங்கூறல், கலைநலஞ்சொல்லல், இன்பநலங்கூறல், மாதுலன்மாமியைப்பழிச்சல், காமன்வலியுறுத்தல், மனவலிகருதியேங்கல், ஒருமைகண்டுவத்தல், உரித்தெடுத்தோதல், நடை நலம்பயிறல், மொழிநலம்புனைதல். ஆ (உஎ)

### தலைவன்றலைவிமுற்பகர்தல்.

புனைந்துரைவிளம்பல், பொய்பகர்ந்தடுத்தல். இடனிரந்துநிற்றல், இரங்குமாறியம்பல், தன்றிறங்கூறல், வலிதணைதற்கிரங்கல், நிச்சயங்கூறல், அடைக்கலம்பகர்தல், துயிற்சோர்வுகூறல், கைத்தொழிற்கிளத்தல், அலந்தமைதெரித்தல், நிலைகண்டிரங்கல், பொருள்வயிற்பிரிவுணர்த்தல், போர்வயிற்பிரிவுணர்த்தல், துறவரைப்பழித்தல், ஊருறவுபேர்வினவல், தன்பதியுணர்த்தல், மணங்கருதிவினாதல், கருத்துவினாதல், விழைவுரையென்கை, மடல்கண்டிரங்கல் வெறுப்புவிலக்கல், இடமணித்தென்றல், வேழங்கண்டயர்ந்தமைவிலக்கல், கள்வர்பயநீக்கல், உறையுழிக்கிரங்கல், வேளைவினாதல், இடன்வினாதல், அவாமிகைகூறல், இரவுபகனமக்கேதென்றல், கடுத்துக்கூறல், சினந்தவிர்த்தல், முடிவின்மைகூறல், சோர்வின்மைமதித்தல், உயர்ச்சிகூறல், தன்றன்மைசாற்றல், துயராமாற்றல், புறங்காட்டன்மறுத்தல், முதுமையினுமறவேனெனல், கைக்கிளைகூறல், மருந்துசொல்லென்றல், நெஞ்சொடுகலந்தமைநிகழ்த்தல், கண்ணுறாற்றுக்கிரங்கல், இன்பத்தளவுரைத்தற்கிசையாமைகூறல். ஆ (சச)

### தலைவன்பாங்கன்முற்பகர்வன.

பாங்கனைக்கண்டுடன்கூறல், ஊமர்கனவொத்தமைகூறல், இயல்பமைத்தியம்பல், மனவலிவியத்தல், குறிகுணம்வினவல், அடையாளங்கூறல், அன்றெனமறுத்தல், மாண்புறப்புனைதல், கருத்தளவோர்தல், கனவுகூறல், சொல்லரிதென்றல், உண்மைகூறியுவகைவருத்தல், பழமைபாராட்டல், மருந்துவினாதல், உறைவயினுரைத்தல், இடையின்மைவியத்தல், அலர்விரும்பல், அலர்கண்டுமகிழ்தல், மடல்கருதிக்கூறல், உடன்பாடுவினாதல், மடல்பிழையாமைகூறித்தேற்றல், ஐயந்திருமாறுரைத்தல், சோராமையுணர்த்தல், பிறர்கோண்மறுத்தல், இதழ்ச்சுவைகூறல், தனிநலம்பயிறல், கவிழ்ந்து சென்றமைக்கிரங்கல்,

புன்னகைக்குவத்தல், நாணலம்பயிறல், தவத்தினைப்புகழ்தல், சுவர்க்கம்விழையாமை, சித்தியின்மைகருதியேங்கல், கலையாதிவியத்தல், சிற்றழுகைக்கிரங்கல், பொய்த்துயில்வுகூறல், உடன்பாட்டுக்குறிப்புணர்தல், உடன்பாடின்மைக்குறிப்புணர்தல் இரங்காமைக்கேங்கல், தன்னைப் பழித்தல். ஆ (௯௯)

தலைவன்பாங்கிழன்னிலையிற்பகர்வன.

கண்டுணர்ந்தமைகூறல், அன்றுகொலென்றல், நவின்றமைவினுதல், பொறுப்புக்கூறல் கண்டுகளித்தமைகூறல், நன்றிமறவேனெனல், வலியின்மைகூறல், ஆற்றுமைகூறியுபாயம்வினுதல், தாம்போதாதோவென்றல், புண்ணியமும் புகழுங்கூறல், மணமறுத்தல், பருவம்வினுதல், பருவமுண்டெனல், பிழையாமைகூறல், பொய்மைகண்டிரங்கல், இடையூறுவினுதல், வஞ்சமுறுத்திக்கூறல், வெறுத்துக்கூறல், உரிமைவேண்டல் ஐயுற்றுவினுதல், வணங்குமாறுரைத்தல், கள்ளங்காட்டல், தன்னிலைதெரித்தல், அடிமைத்திறங்கூறல், இயல்படுத்துவினுதல், சொல்விரத்தல், கூச்சந்தீர்க்குமாறுகூறல், கைம்மாறறியாமைகூறல், அருமைபாராட்டல், வாழ்த்திக்கூறல். ஆ (௩0)

தலைவிதன்மை.

கண்டுநினைந்தமைகூறல், கொங்கைப்பொலிவுகூறல், கண்ணுெடு புலம்பல், கொங்கைகட்கறிவுணர்த்தல், இதழுடனியம்பல், கைந்நலங்கருதியேங்கல் மதியினைப்பழித்தல் கடலொடுபுலம்பல், செக்கரைச்சினத்தல், தென்றலைப்பழித்தல், குயிலொடுபயிலல், அன்றிற்ருெனிக்கிரங்கல், முத்தொடு மொழிதல், களபங்கழித்தல், பூவெறுப்புரைத்தல், மதனனைப்பழித்தல், மதன்ருெழில்வியத்தல், கார்கண்டுகலங்கல், பனிக்கொடுமைபகரல், வேனிற்பெருமைகூறல், காற்றினைக்கருதிக்கூறல், வண்டுவிடுதூது, கிள்ளைவிடுதூது, அன்னம்விடுதூது, நாரைவிடுதூது, மேகவிடுதூது, நெஞ்சுவிடுதூது, தூதுபிழைத்தமைக்கிரங்கல், பழமொழிக்கயர்தல், குறிநினைந்தயர்கை, சகுனங்கண்டுவெத்தல், சகுனங்கருதியேங்கல், தலைவன்றன்மைகருதிக்கூறல், வினைத்திறங்கூறல், மறவாமைக்கிரங்கல், நகைநினைத்திரங்கல், தலைவனைப்புகழ்தல், கனவைப்புகழ்தல், கனவைப்பழித்தல், வரவுநினைத்திரங்கல், சொன்னினைந்தயர்தல், தலைவன் பொருண்மேற் பிரிதற்கிசையாமைகூறல், பொருள்வயிற்பிரிந்ததலைவன்வராதலின்காரணங்கருதல், தலைவன்போர்விழைந்தமைகண்டு புலர்தல், போர்மேற்சென்ருர் வருமுன்னிகழ்வது புகலல், தலைவன்போர்வெல்லுமாறுணர்தல், கருப்பக்குறிகண்டயர்தல், கருப்பங்கண்டுவெத்தல், கருப்பவாதைக்கிரங்கல், மகப்பேற்று மகிழ்ச்சி, பாலனைப்பழித்தல், மனத்தேற்றங்கொள்ளல், பாத்தையர்க்கருதியேங்கல், பாத்தையர்க்கறுவல், தூதியைமறுத்தல், பாணனைப்பழித்தல், பாணனைப்புகழ்தல் விதிப்புகழ்ச்சி, தற்புகழ்ச்சி, அயற்பழிப்பு. ஆ (சுO)

தலைவிபாங்கிழற்பகர்வன.

மோகமுற்றமைமொழிதல், வருந்திக்கூறல், உடன்படுத்தல், உத்திவினுதல், தூதுசெல்லென்பிரத்தல், களிப்புஞ் சலிப்புங்கலந்துகூறல், தலைவன்சுபாவங்கூறல், நாணுெடுபகர்தல், கவன்றுகூறல், வெறுப்புக்காட்டல், தன்மருளுணர்த்தல், வியந்துகூறல், அழுக்காறுகாட்டல், தூதிவந்தமைசொல்லல், வைகறைக்கிரங்கல், புதுமைகண்டுரைத்தல், வலிவினுதல், மருத்திடுகூறல், நாட்சென்றமைக்கிரங்கல், நகக்குறிப்புகழ்ச்சி, தலைவன்பிழைப்புரைத்தல், பெற்றமையுரைத்தல், சொற்றவாறுணர்த்தல், மேலிடுவிளம்பல் உரிமைக்காரணம்வினுவல், வஞ்சனைவிலக்கல், சின்னங்கூறல், தன்னிசைவியம்பல், இகல்வினுவல், அணித்திறம்வினவல், தன்னிறைதெரித்தல், முன்னிலைப்புகழ்ச்சி. ஆ (௩௨)

### தலைவிதலைவன்முற்பகர்வன.

உள்ளக்கவர்ச்சிக்கிரங்கல், நியாயங்கூறி யுடன்படுத்தல், அச்சுறுத்தல், வீரங்கூறல். பாரெனவிரத்தல், தழுவெனவிரத்தல், வஞ்சர்யாரெனவினவல், கனவாடல்வேண்டல், நனவாடல்வேண்டல், வசைநாணிக்கூறல், இசைநலம்பகர்தல், பிழைப்பொறுப்பிரத்தல், இயல்பலவென்றல், சொந்தமை நவலல், புகழ்ந்துடன்படுத்தல், பழித்துடன்படுத்தல், காரணங்கூறல், வஞ்சமெடுத்துக்காட்டல், நியாயங்கேட்டல், ஈரமின்மைக்கிரங்கல் நிந்தாத்துதிகூறல், பின்வரவுவினுதல், பொய்நினைந்தயர்தல், பொய்யுமெய்யுங்கலவாமை வேண்டல், நம்பிக்கை கூறல், விதிநினைந்திரங்கல், மறவேலெனல், இன்பங்கைப்போவெனல் பிறர்க்கஞ்சிக்கூறல் மானமிக்குரைத்தல் பொய்யூடல்காட்டல், செட்டெடுத்தியம்பல் கொடுமைகூறல், எற்றமின்றெனல், எண்ணவேற்றுமையாதெனல், சொற்பிறழ்ச்சி வினுவல், நீங்காமைவேண்டல், பிரிதற்கிசைவின்மைகூறல், ஆணையறிவுறுத்தல், காலங் கருதிக்கூறல், மிகைபொருளுரைத்தல், குறைபொருளியம்பல், கைந்நலம்பகர்தல், மெய் நலம் பகர்தல், உவப்புக்கூறல், தன்னலம்பகர்தல். தன்னைத்தாழ்த்தித்தலைவனையுயர்த்தல், தன்னையுயர்த்தித்தலைவனைத்தாழ்த்தல், கள்ளங்கண்டுணர்த்தல், திருத்திகூறல், நிட்டூரம் விலக்கல், பெரியது நல்கிச்சிறியதுபோற்றற்கிரங்கல். ஆ (௫௨)

### தலைவிபாங்கன்முற்பகர்வன.

வேட்கையளவுவினுதல், தவத்தினுமின்பமுயர்வெனல், தலைமகன்றன்மைகூறல், குணவேற்றுமைகூறல் வேண்டுகோள்விழைதல், பயன்வினவல், தலைவன்மொழிக்குறிப்பு வினுவல், தலைவன் சொல்கவற்றினமைகூறல், உண்மையுசாவல், வழக்கம்வினுவல், யாரெனவினவல், உரிமைவருத்துமுபாயமுரையென்கை, போயதுவருதற்கிரங்கல், வருமக்குறிப்புணர்த்தல், பொதுநிலைவிழைதல், நல்வஞ்சமுணர்த்தல். ஆ (௧௬)

### பாங்கன்றன்மை.

இடைநிலைக்கயர்தல், தலைவனைப்புகழ்தல், தலைவனைப்பழித்தல், தலைவியைப்பழித்தல், தலைவியைப்புகழ்தல், தலைவியைப்பழித்தல், முறையுணர்ந்துவத்தல், இசைவுணர்ந்தியம் பல், தலைவன்மயன்மிகைகருதிக்கூறல், தலைவன்வாஞ்சையளவறிந்திரங்கல், தலைவன் வெறுப்புணர்ந்திரங்கல், தலைவியைக்கறுவிக்கூறல், கொடுந்தன்மைகூறல், வஞ்சநன் குணர்தல்,புகழுணர்ந்துவத்தல், இம்மகளின்னுற்றாமெனல். ஆ (௧௫)

### பாங்கன்றலைவன்முற்பகர்வன.

தலைவியைக்கண்டமைகூறல், நெறிநலம்பகர்தல். தன்றுயர்கூறல், துணைவரேனென்றல், பிரிவின்மைவியத்தல், மடலூர்தற்றடுத்தல், அவையவமெழுதலரிதெனல், வியந்துரைவினுதல், உண்மையின்மையுரையெனல், தன்னுணர்ச்சிகூறல், தகுதியின்மையெடுத்துக்கூறல்,சொற்சுவைவினவல், தலைவியருட்பான்மைவினவல், தூதியுடனெத்துக்கூறல், பெண்மடலூர்தற்காணெனுறதென்றல், தலைவியின்றொடர்ச்சிகண்டியம்பல், ஆ (௧௭)

### பாங்கன்றலைவிமுற்பகர்வன.

தலைவனைத்தலைவிக்குணர்த்தல், ஒத்தமைகூறல், தலைவனுயர்ச்சிகூறல், பெறு நலம்பகர்தல், செய்தவம்புகழ்தல், தலைவனுட்குறிப்புணர்த்தல், ஐயந்தீர்த்தல், மறுமொழி கூறல், மொழிவழிதேற்றல், செவிலவுணர்த்தல், தன்பழிநீக்கல், சினந்தகாதென்றல், பொறைவியந்துரைத்தல், தலைவனைத்தாழ்கொன்றென்கை, தலைவன்செய்கைவிலக்கரி தென்றல், தலைவனைக்கப்பிவாழ்வைதகுமெனல். ஆ (௧௮)

### பாங்கன்பாங்கிமுற்பகர்வன.

சந்திப்புவியத்தல், உயர்ச்சிவினவல், பொருத்தங்கூறல், குறிப்பறிவித்தல், ஒருமைபாராட்டல், அறிந்தமட்சொலல், பின்னியல்புரைத்தல், வலியின்மைகருதிக்கூறல், தலைவியைத்தாழ்த்திக்கூறல், தன்னையுயர்த்திக்கூறல், வெட்குறப்பகர்தல், உறவளவுசாவல், திகைப்பறல்வினவல், நட்பருமெனறல். ஆ (கச)

### பாங்கிதன்மை.

தலைவிபுலப்புமாறியம்பல், தலைவிமையல்கண்டிரங்கல், கண்டுளம்வருந்தல், தலைவன்மீது நிட்டூரங்கூறல், ஏசல்கண்டிரங்கல், சுரம்போக்குவிளம்பல், நற்றுயிரங்கல், துயிற்காரணங்கூறல், துயிலன்றுசோகமெனல், வெறிவிலக்கல், வெறியாட்டால் விபரீதமுண்டெனல், தலைவனையுயர்த்திப்பிறரைத்தாழ்த்தல், பருவங்கண்டிரங்கல், மாலையாதோவெனல் பிரமையைப்பெருமையென்கை. ஆ (கரு)

### பாங்கிதலைவிமுற்பகர்வன.

புதுமைகூறல், பயனின்மைகாட்டல், தேற்றல், ஆத்திரமாகாதெனல், பேரவாநீக்கல், ஏக்கங்கண்டிரங்கல், தலைவன்வேட்கைகூறல், செல்லனன்றென்கை, தவஞ்செய்யெனல், புத்திகூறல், வலிதுவருங்கொலென்றல், கேட்டமையுணர்த்தல், என்செய்தாயெனல், குறைவருமாறுகூறல், தருக்கூட்டல், மகிழ்வுறவாழ்த்தல். ஆ (கசு)

### பாங்கி தலைவன்முற்பகர்வன.

மணமெடுத்துரைத்தல், பருவங்காட்டல், இயைபுரைத்திரத்தல், ஓலிட்புக்கூறல் முற்றும்பொய்யன்றெனல், தழைவியந்துரைத்தல், வயிற்றினைப்புகழ்தல், அடைக்கலங்கூறல், நெறியெடுத்தியம்பல், உய்வதெவ்வண்ணமெனல், நினைத்திலாயென்றல், முரசொலிவினவல், சங்காழியிரத்தல், மாலிகைவேண்டல், விலகாயைவேண்டல், மகணலம்பகர்தல், வருநாள்வினவல், ஏமாற்றேனென்றெனல், கோதிலாளென்றல், மகன்பேறுவியத்தல், கரையேற்றம்வினவல், உணர்வொடுமொழ்கல், ஒப்புக்கேட்டல், ஏழைக்கிதஞ்சொல்வதேனெனல், அலுப்பொடுசினத்தல், உறுத்திக்கூறல் இகழ்ச்சிகண்டிரங்கல், புணர்ப்புரையென்றல், இழிவுனக்கென்றல், நிசமொழிவிழைதல், உடன்வரவழைத்தல், மகவாசைகாட்டல், தன்றொடர்பொழித்தல். ஆ (௩௩)

### பாங்கி பாங்கன்முற்கூறுவன.

பழித்தலிற்புகழ்தல், தலைவனைக்குறிப்பிற்றாழ்த்திக்கூறல், தலைவனிரக்கமிலானென்றல், தலைவனிழிவையானென்றல், ஒத்துரையென்றல், சகிப்பரிதென்றல், தன்னுடன்சேர்த்துப்புகழ்தல், தாங்காமைகூறல், செய்திவினவல், கண்களைப்புகழ்தல் குறையின்மைகூறல். ஆ (கக)

## நூற்பயன்

முற்றிற்று.

## குருபாதமேகதி.

குருவேதுணை.

## திருச்செந்திற்கோவையின் பகுதி அட்டவணை.



குருபாதமேகதி



உ

முருகக்கடவுடுணை.

# திருச்செந்திற்கோவை.



## பாயிரம்

விநாயகர் துதி.

வேண்டுகையாவு மடியார்பெற்றுய்ய விரைந்துதவி
யாண்டுகையாதநல் லின்பத்திலாழ்த்து மருட்செந்திலான்
பூண்டுகைக்குஞ்சிகி மேற்றோன்றுங்கோவைப் பொருள்விரிக்கத்
தூண்டுகைக்குஞ்சர மொன்றுமுன்னின்று துணைச்செய்யுமே. (க)

சரசுவதி துதி.

மின்னேடுறழும்வை வேற்செந்திலானருள் வேட்டுமுன்னஞ்
சொன்னோர் வழியி லகப்பொருட்கோவை சொலத்துணியு
முன்னோர்விதந்தெரித் தானந்தவாறு முடிப்பதனுக்
கென்னேடுநீதுணை யாவாய்வெண்டாமரை யேந்திழையே. (உ)

சேந்திலாதிபன்றுதி.

இன்பக்கடலின் றுறைகோடியென்னு மியல்பறியாத்
துன்பக்கவிஞர்க்குத் தொந்தங்கருதிமுன் றோய்ந்தகன்ற
மின்பக்கலெய்த மடவார்வரென்கின்ற வீணருக்கு
மென்பக்குவத்தமி ழாமோசெந்தூரி லிருப்பவனே. (ஙு)

சுதந்தராயூகப் புலவோர்க்குமுத்தமத் தொண்டருக்கும்
பதந்தரவல்லநின் மேற்றமிழ்க்கோவை பகரலுற்றே
னிதந்தரளூரமிழ் தேயென்னவோங்கு மியல்பளித்தா
ணிதந்தரங்கக்கட லார்க்குஞ்செந்தூரிடை நின்றவனே. (ச)

பாயிர முற்றிற்று.

# நூல்.

## தலைவன் வாய்பாடு.

### காண்டல்.

சீர்பூத்தசெந்திற் குகனருளான்முழுத் திங்களொன்றுங்
கூர்பூத்தவேலிரண் டுங்குன்றிரண்டுங் குமுதமொன்று
மேர்பூத்தகாந்த ளிரண்டுங்கமல மிரண்டுங்கொண்டு
கார்பூத்தசந்தன வெற்பருகொன்று கவின்றந்ததே. (௧)

### ஐயுறல்.

முக்கண்ணர்பாகத் துமையோமுராரிதன் மொய்குழலோ
வக்காருபம தாவிதிநாவி லமர்ந்தவளோ
திக்கடங்கப்புக ழுஞ்சசியாதிய தெய்வமின்னே
மிக்கசெந்தூர்க்குகன் றன்னருளோவிந்த மெல்லியலே. (௨)

### தேற்றம்.

கண்ணிமைக்கின்றன கானிலந்தோய்ந்தன கார்குழலி
லண்ணியதார்மலர் வாடினவேர்வை யரும்பினவால்
விண்ணினளல்லள் வியன்செந்தில்வாழ்குகன் மெய்யருளான்
மண்ணிடையென்னிமித் தம்பிறந்தாளிந்த மாதரசே. (௩)

### நெஞ்சொடுகிளத்தல்.

மின்போலும்வேலுடைச் செந்தூர்ப்பிரான்சந்த வெற்பருகிற்
பொன்போலநிற்குமிப் பூவைதன்பூண்முலைப் போகம்விழைந்
தென்போடுடலு முருகத்தளருமென் னேழைநெஞ்சே
யன்போடவளிசைந் தாலன்றியுய்வ தரிதரிதே. (௪)

### மதன்றொழிற்கிரங்கல்.

புன்னைப்பொழின்மலி செந்தூரன்சந்தப் பொருப்பருகி
லென்னைத்தொடர்ந்து மலரெய்தமார னெனக்குமய
றன்னைக்கொடுத்தவண் மீதெய்திலானவன் றானையிடை
முன்னைத்திறமை யிவட்கியலாமென முன்னலுற்றே. (௫)

### பிரமனைப்பழித்தல்.

கொம்புறழ்கொங்கைநல் லார்நெஞ்சில்வஞ்சகக் கொள்கையையுந்
தெம்புறுமாடவ ருட்சகியாமயற் றீமையையும்
பம்புறவைத்தமை யாற்செந்தில்வாழயிற் பண்ணவன்முன்
னம்புயன்றன்றலை நான்கினுங்குட்டி யதுதகுமே. (௬)

விழிவலிகூறல்

வல்லாண்மைச்சூலங் கயிறேந்திச்சென்று வதைக்குநமன்
கொல்லாமற்கொல்லும் வகையறியான்கொல்லல் கொன்றெழுப்ப
லெல்லாமிருந்த படியேசெயுஞ்செந்தி லெந்தைவெற்பின்
மல்லாருங்கொங்கை மயில்போலுஞ்செய்யிழை மைவிழியே. (எ)

பார்வைக்கிரங்கல்.

கூராரும்வேற்படை யாற்கொடுஞ்சூரனைக் கொன்றவன்வா
ழூராருஞ்செந்தி னகர்ச்சந்தமால்வரை யேந்திழையான்
பாராதவேளையிற் பார்த்துக்கவிழ்கின்ற பண்பைவிட்டு
நேராகப் பார்த்திடும் போதெனைப்பார்க்க நினைத்திலளே. (அ)

அணுகற்கஞ்சுறல்.

வடுத்தாங்கிவாரியி னூடேயெழுந்தபொய்ம் மாப்படவேல்
விடுத்தான்விளங்குசெந் தூர்ச்சந்தமால்வரை மேவுமின்னாள்
கொடுத்தாண்மயன்மிகக் கொண்டேனவளிடங் கொஞ்சிமெல்ல
வடுத்தாலென்சொல்வள்கொல் லோவென்றெனுவி யலைகின்றதே. (கூ)

குறிப்பறிந்துவக்கை.

மதனனுநாணெழிற் செவ்வேள் செந்தூர்ச்சந்த மால்வரையிற்
சதமகனுதிய ருள்ளங்கவருமித் தையனல்லா
ளிதழுதுக்கித்தலை சற்றசைக்கின்றபண் பென்னையவள்
பதமலர்க்காம்பணி செய்கின்றவாழ்விற் பதிக்கவென்றே. (க௦)

நாணிக்கண்புதைத்தல்.

சற்குருவாவரு செந்தூர்க்குமரன் றடஞ்சிலம்பி
னிற்குமின்னன்னகன் னேரிழையாளென்னை நேரிற்கண்டு
பொற்குடத்தைத்திறந் தாலாலந்தன்னைப் புதைத்துக்கொண்டா
ணற்குறியீதென நானுவப்பெய்தலி னண்ணலுற்றே. (கக)

நாண்வியந்துரைத்தல்.

வேணிக்கடுக்கைப் பிரான்மைந்தன்செந்தில் விசாகன்வெற்பி
லாணிக்கனக மணிப்பூண்மின்னாளை யடுத்திறைஞ்சிக்
காணிக்கையாயெனைத் தந்தேனென்றேனது கண்டுமன
நாணிக்கவிழ்ந்துசற் றேதிரிந்தாளதென் னற்றவமே. (கஉ)

மடனழிந்துவத்தல்.

படங்கொண்டபாம்பணிப் பச்சைமயூரப் பரிக்குமா
னடங்கொண்டசெந்தி னகர்ச்சந்தவெற்பின னானெருங்குந்
திடங்கொண்டசீர்கண்டு னன்றேயெனைத்தனி செய்ததென்றாண்
மடங்கொண்டநெஞ்சினண் மாலறிந்தேன்றுயர் மாறியதே. (கங)

அச்சக்குறியறிதல்.

செஞ்சிகியூருந் திருச்செந்தில்வேலன் சிலம்பகத்து
நஞ்சினுந்தேவ ரமுதினுந்தோய்ந்தகண் ணரியினைக்
கெஞ்சியனேக நயங்கூறிமெல்லெனக் கிட்டித்தொட்டே
னஞ்சினள்வேர்வை நுதலுடமுத்தொத் தரும்பியதே. (கச)

பயிற்பெடுந் தோதல்.

புள்ளிமயூரப் பரியூர்செந்தூரன் பொருப்பிடத்துக்
கள்ளியென்மோகத்தி லென்மடங்காகிய காதலுள்ளத்
துள்ளிருக்கின்றது தோன்றவொட்டாமலொட் டாரமிட்டா
ளள்ளியென்மார்பத் தணைத்தேனுடனுவப் பாகினளே. (கரு)

வண்டோச்சல்.

தேவினத்துடியர் செந்தூரன்சந்தச் சிலம்பிடத்துக்
காவினில்வாவியிற் பூவுண்டுதேனுண்டு கைக்களிற்றின்
மேவியமும்மத நீருண்டுபோமினிம் மின்னளகப்
பூவினுற்றீர்வண்டு காளிடைபாரம் பொறுக்கரிதே. (கசு)

கலவிமகிழ்தல்.

சித்தர்குழாம்புகழ் செந்தூர்க்குமரன் சிலம்பிடத்திற்
பைத்தவராவுற மல்குன்மின்னுண்முலைப் பாரங்கொட்டுப்
புத்தமிழ்தன்ன விதழுண்டுகொஞ்சிப் பொருவில்கவுண்
முத்தமிட்டின்பமுற் றேனும்பர்மாதரு மோகிக்கவே. (கஎ)

கொங்கைத்திறங்கூறல்.

அங்கைவைவேலுடைச் செந்தூர்க்குமர னணிவரையின்
மங்கைநல்லாளிளம் பான்மைகருதி மகிழ்ந்தணைந்தேன்
வெங்கையிருப துடையானைமுட்டிய வேழமொல்கக்
கொங்கையினுற்பொரு தாள்பிழைத்தேன்விதிக் கூறுகொண்டே. (கஅ)

சுவைநலஞ்சொல்லல்.

செக்கச்சிவந்த குகவேடன்செந்திற் றிருச்சிலம்பிற்
றக்கச்சதுமறை வல்லானன்காளிலென் றன்னிமித்தஞ்
சக்கரைமுக்கனி பாகடபாலமு தந்தமிழ்ச்சி
ரொக்கப்பிசைந்துசெய் தானேவிப்பாவை யுடம்பினையே. (கசு)

இன்பநலங்கூறல்.

கந்தாவெனத்துதிப் பார்மலிசெந்திற் கடவுளது
சந்தாசலப்பெருஞ் சாரலிற்பேதை தருஞ்சுகமு
மைந்தாறெட்டுப்பதி னைந்தொன்றுமூன்றெனு மக்கரங்கள்
சிந்தாகுலந்தவிர்த் துத்தருபேரின்பச் சீருமொன்றே. (உ௦)

மாதுலன்மாமியைப்பழிச்சல்,

ஆறுனனத்தவன் செந்தூர்க்குமா னணிவரையின்
மாறுதவின்பந் தருவாளைப்பெற்று வளர்த்தவர்கள்
பேறுயிரம்பெற்று வானோரும்போற்றும் பெருமையெய்தி
நூறுண்டும்வாழ்வுற வேண்டுஞ்சற்றேனு நுடக்கமற்றே. (உக)

காமன்வலியுறுத்தல்.

காமனைச்செங்கனற் கண்ணாலெரித்த கடவுளுக்கு
மாமறைத்தாரகஞ் சொன்னசெந்தூரனும் வள்ளிமுன்போய்க்
கோமளக்கொங்கை மயிலேயென்றேத்திக் குனிந்தநூண்டே
லியாமதர்க்கண்கொள்ளு மிப்பேதைக்காட்பட லென்வியனே. (உஉ)

மனவலிகருதியேங்கல்.

மலயக்கிரியில் வருமரமாதர்தம் வாள்பொருகட்
கலகத்தினுமயங் காதவென்சிந்தை கடவுளர்தந்
திலகத்துயர்ந்தசெந் தூர்க்குகன்வெற்பிற் றிகழ்மனிதக்
குலமைக்குழன்மட வாண்மையல்வாரி குளிக்கின்றதே. (உங)

ஒருமைகண்டுவேத்தல்.

வயிரம்புனைந்ததிண் டோளானைத்தேவரை வாழவைக்கு
மயிலொன்றியதடங் கையான்செந்தூர னணிவரையின்
மயிலென்றசாய லுடையாட்குமென்றற்கு மன்னியவா
ருயிரொன்றுடலிரண் டாகியவண்மை யுரைக்கரிதே. (உச)

உரித்தெடுத்தோதல்.

கயமூர்வலாரி சசியைவிட்டாலுங் கமலமல
ரயனுதியர்கலை மின்னுதியரை யயத்திடினும்
வியனூர்செந்தூர்க்குகன் வெற்பிடைவாழும் விளங்கிழைதன்
னயமாதியவற்றை நண்ணுதிராதென்ற னன்னெஞ்சமே, (உரு)

நடைநலம்பயிறல்.

சங்கரதேசிகச் சண்முகன்செந்திற் றடவரையாள்
சிங்கந்தளர்வுற வேழங்குலுங்கச் சிலமலர்கொள்
பங்கயம்பூப்ப விரண்டுசெலாடப் பவளநிறத்
தங்கமடம்பெயர்த் தாளென்றனுவி யலமந்ததே. (உசு)

மொழிநலம்புனைதல்.

ஆணுதியாமொரு மூன்றுகியப்புறத் தப்புறமா
மாணுருஞ்சண்முகப் பெம்மான்செந்தூர்ச்சந்த மால்வரையாள்
கோணுதசொல்லமு தண்ணுதவுணரைக் கூட்டிக்கொண்டு
வீணுகப்பாற்கட லைக்கடைந்தாரன்று விண்ணவரே, (உஎ)

## தலைவன் றலைவிமுற் பகர்தல்.

புனைந்துரைவிளம்பல்.

வண்கனகத் தனி வேற்செந்திலான்சந்த மால்வரையின்
பெண்கள்சிகாமணி நின்முகத்தாக்கம் பெறக்கமல
மொண்கரவெய்யவன் முன்விரிந்தம்பிடை யுற்றுவெள்ளைத்
தண்கதிர்முற்குவிந் தோவாவருமைத் தவஞ்செய்ததே. (உஅ)

பொய்பகர்ந்தடுத்தல்.

கயிலைக்கடவுள் புதல்வன்செந்தூர்வளர் கந்தனங்கை
யயிலைப்பொரும்விழி யாரணங்கேமல ரம்புயமோர்
மயிலைத்துளைக்கவின் றெய்துவிட்டேனிங்கு வந்ததுண்டோ
குயிலைப்பழித்தசெவ் வாய்திறந்தோர்மொழி கூறுதியே. (உகூ)

இடனிரந்துநிற்றல்.

நன்னெஞ்சர் வாழ்திருச் செந்தூரிற் சண்முக நாதன்வெற்பிற்
பொன்னெஞ்சு மேனிப் புணர்முலையாயிது பொய்யலநீ
யென்னெஞ்சி லுற்றனை யானுமவ் வண்ண மிருப்பதனுக்
குன்னெஞ்சிற் சற்றிடந் தந்தாளவேண்டு முரிமைவைத்தே. (௩௦)

இரங்குமொழியம்பல்.

நற்றேருலாவு மறுகார்செந்தூர னளிர்வரையிற்
பொற்றேசிலங்குடற் பூவையன்னீருங்கட் போற்றியென்னை
விற்றேன்குற்றேவன் மிகச் செய்குவேனொரு வேலையிடச்
சற்றேனுமுள்ள மிரங்குகிலீரிது தர்மமன்றே. (௩க)

தன்றிறங்கூறல்.

தனிவேலன் செந்திற் றடவரைமீதொரு சற்றிரங்கிற்
கனிவாயிதழுண் டிறுகத்தழுவிக் கடித்துமுத்திப்
பனிமால்வரைநிகர் கொங்கைநெருடிப் பகமளைந்து
குனிவார்சிலைமத னுடல்செய்வேனடி கோமளமே. (௩உ)

வலிதணைதற்கிரங்கல்.

கொன்றைச்சடைத்தம்பி ரான்மைந்தன் செந்திற் குமரன்வெற்பி
லின்றைக்கெனையறி யார்போலநின்றனை யாதினுக்கோ
வன்றைக்கொருதர நீயேவலிதி லணைந்தசுக
மென்றைக்கினிப்படி யேனடைவேனடி யேந்திழையே. (௩௩)

நிச்சயங்கூறல்.

பைந்தோகையூர்செந்தி லான்சந்தவெற்பிற் பனிமொழியே
சந்தோடமாயொரு சொல்லுஞ்சொல்லாதெனைத் தள்ளிவிட்டால்
வெந்தோட முன்றனக் கெய்துமதன்றியு மேதினியோ
ரந்தோவெனமட லூர்ந்தேனுமுன்னை யணைவதுண்டே, (௩ச)

அடைக்கலம்பகர்தல்.

செங்கதிர்வேற்படைச் சேந்தன்செந்தூரிற் சிலம்பினுக்கோர்
மக்களமாவரு மங்கைநல்லாய்முழு வஞ்சஞ்செய்யேல்
பங்கயமாப்பிண்டி முல்லைகுவளைப் பனிமலரா
மைங்கணைமாரனுக் கஞ்சியநானுன் னடைக்கலமே. (௩௫)

துகிற்சோர்வுகூறல்.

சேயெனச்சற்குரு வென்னச்சிவன்பகர் சேந்தன்செந்தின்
மேயெம்மையாளும் பிரான்சந்தவெற்பில் விளங்குமின்னே
நீயென்னைப்பார்த்திலை நின்கொங்கைமென்றுகி னீக்கியுன்றன்
றூயெனப்பார்த்து மறைந்ததென்னாவி தவிக்கின்றதே. (௩௬)

கைத்தொழிற்கிளத்தல்.

அங்கைவைவேற்குகன் செந்தூரிற்சந்தவெற் பாயிழைநின்
கொங்கையைக்கண்டு மகிழவொட்டாதணி கோலவளைச்
செங்கைசெய்கின்றத னன்மெலிந்தேனருள் செய்தனையேற்
சங்கையற்றன்னவை மார்போடமுந்தத் தழுவுமன்றே. (௩௭)

அலந்தமைதெரித்தல்.

வலந்தாங்கும்வேனுடைச் செந்தூரன் சந்த வரைத்தலத்திற்
பொலந்தோய்ந்தபூண்முலைப் பூவைநல்லாய்தொய்யில் பூத்தமென்றோள்
கலந்தார்வமெய்திக் கனியிதழுண்டு களிப்பதனுக்
கலந்தேனந்தோவறி யாயோவிரங்கிரங் கன்புவைத்தே. (௩௮)

நிலைகண்டிரங்கல்.

கற்கும்புலவர் களிகூர்செந்தூர்வளர் கந்தன்வெற்பிற்
பொற்கும்பநேர்முலைப் பாரஞ் சுமந்து புவியிடத்தி
னிற்கின்றநின்னடி யென்றலைமேற்சற்று நேரமுற்று
லெற்கின்பமெய்து மிதுபாவமோசொல் விளங்குயிலே. (௩௯)

பொருள் வயிற்பிரிவுணர்த்தல்.

தெருள்பாண்டரங்கன்முன் னுட்டந்தசெந்திற் சிறுவனுண்மை
யருள்வாஞ்சையுற்றவ ரிற்சிலர்தாமு மவாவுகின்ற
பொருள்வேண்டிப்போய்வால் வேட்டேனின்னெஞ்சைப் புழுக்கிணையே
விருள்கூந்தலம்பிடி போல்விளையாடு மெழிற்றிருவே (௪௦)

போர்வயிற்பிரிவுணர்த்தல்.

சீரேறுஞ்செந்தி னகராளும்வேலன் றிருச்சிலம்பிற்
காரேறுமென்குழற் கன்னிநல்லாய்கடற் கண்கலங்கேல்
போரேறனையவொன் னார்சிலரூரிற் புகுந்துழக்கி
மாரேறுமாண்மை யுடன்றிறைகொண்டு வருமட்டுமே. (௪௧)

துறவரைப்பழித்தல்.

வல்லிற்காத்தர் பலர்போற்றுஞ்செந்தில் வாதன்வெற்பிற்
செல்விக்குநேரெழிற் சேயிழையேநின் றிரண்முலைசெய்
மல்வித்தையைக்கனி வாய்த்தேனைக்கண்டுண் ணும் வாழ்வறியார்
கல்விப்பயனுந் தவப்பேறுமேலெனக் காண்பவரே. (சஉ)

ஊருறவுபேர்வினவல்.

ஆரேய்ந்தசென்னிப் பிரான்மைந்தன் செந்தி றைமுருகவன்
சீரேய்ந்தசந்தன வெற்பூடென்கண்முற் றிகழன்னமே
யூரேதுனக்கிங் குறவேதுன்றாய்தந்தை யுன்றற்கிட்ட
பேரேதுசொல்லனுப் போலென்றன்மீது பிரியம்வைத்தே. (சங)

தன்பதியுணர்த்தல்.

மந்தாக்கொங்கை மயிலேசெந்தாமரை வாழன்னமே
சுந்தரக்கோகில மேயென்றனூரினைச் சொல்லிடக்கேள்
கந்தன் வைவேற்படை யொன்றேந்திக்காக்குங் கவினுடைத்தாய்ச்
செந்தமிழ்ச்சந்தன வெற்போடொளிருந் திருச்செந்திலே. (சச)

மணங்கருதிவினுதல்.

மன்றந்தொறும்புகழ் செந்தூரன்சந்தன மால்வரையின்
மின்றங்கல்போற்றிகழ் மெல்லிநல்லாயுன்னை வேறொருவர்க்
குன்றந்தைதாய்நல்க வுன்னிலவ்வாற்றிற்கு மொப்புவையோ
வென்றன்புணர்ப்புரைப் பாயோவென்றேங்கிய தென்மனமே. (சரு)

கருத்துவினுதல்.

பொன்னூர்ப்புத்தேளிரைக் காத்தசெந்தூரன் பொருப்பிடத்திற்
றென்னூரனேர்விழிச் சிற்றன்னமேமலர்ச் செந்திருவே
யென்னூர்க்கென்னோடுமின் னேவந்துவாழ்தற் கிசைகின்றதோ
வுன்னூர்க்கேனைவரச் சொல்கின்றதோவுன்ற னுட்கருத்தே (சசு)

விழைவுரையேன்கை.

பாரணங்கின்முகம் போன்றசெந்தூரன் பனிவரையின்
வாரணங்கண்ட முலையாற்பொருதென் மனங்கவரு
மாரணங்கேநின் னவாவையின்றேநிடி லைந்தருவா
மூரணங்கார்க்கரி தானுனுமீகுவ னுண்மையிதே. (சஎ)

ஊடல்கண்டிரங்கல்.

பாடிக்கொண்டாடுநர்க் கேற்றசெந்தூரன் பருப்பதத்தி
னடிக்கொண்டாண்ட நளினமின்னேயுன்னை நம்புமென்பா
லூடிக்கொண்டாயுள்ளு டைந்தேனிவ்வூடலி லுற்றபயன்
கூடிக்கொண்டாலல்ல வோவென்றுநூல்பல கூறினவே. (சஅ)

வெறுப்புவிலக்கல்.

மறுத்தவிர்சீர்திகழ் செந்தூரன்சந்தன மால்வரையிற்
கறுத்தமென்கூந்தலங் கன்னிநல்லாய்தரும் காதன்மிகப்
பொறுத்தலமந்தனன் கண்டாயெனையொரு புல்லனென
வெறுத்துவிடேல்வெறுத் தாலெனதாருயிர் விண்புகுமே. (சகூ)

இடமணித்தென்றல்.

பூரணகும்பக் குடநேர்பொற்பூண்முலைப் பூவைநல்லாய்
காரமர்பூம்பொழி லொன்றுகண்டாயரைக் காதஞ்சென்றால்
வீரவைவேலன் புகழ்சேர்செந்தூரும் விரிகடலுங்
கூறிவார்தொழுங் கோயிலுஞ்சந்தனக் குன்றமுமே. (ருo)

வேழங்கண்டயர்ந்தமைவிலக்கல்.

காழரைப்பாதபஞ் சூழ்சந்தவெற்புடைக் கந்தன்செந்தூர்
வாழவைக்கின்ற நலத்தினதேவரை மானவரும்
வேழமென்செய்யுநின் கண்போற்றிகழென்கை வேலுளது
வீழவெல்வேனடுத் தாலஞ்சிடேவிள மெல்லியலே. (ருக)

கள்வர்பயநீக்கல்

வெள்வனச்சேவலங் கையான்செந்தூரன் வியன்கிரியிற்
புள்வருக்கம்பல பூண்டபொன்னேமதன் போர்விலக்கி
யுள்வரிதாமின்ப மீந்தாயநன்றி யுளத்துளதாற்
கள்வருக்கஞ்சவி டேன்விறற்றோளுண்டு காப்பதற்கே. (ருஉ)

உறையுழிக்கிரங்கல்.

நீடும்புனல்வளஞ் சேர்செந்திலெந்தை நெடுங்கிரியி
லாடுங்கலாப மயில்போற்குலாவு மருட்கன்னியே
வீடுங்கனக மணிமேடையாதியும் விட்டுவெட்சிக்
காடும்புனமு மிடமாகக்கொண்டதென் காரணமே. (ருங)

வேளைவினாதல்.

சேய்துவர்க்குன்றன்ன செந்தூரன்சந்தச் சிலம்பிடைவா
ழாய்துகிற்கோமள மேயன்னமேயென தாருயிரே
நீதுயிலாதென் வரவேகருதுநன் னேரமுநின்
றாய்துயில்வேளையுஞ் சொல்லிவைத்தானந் தமக்குநன்றே. (ருச)

இடன்வினாதல்.

பாவியர்காணருஞ் செந்தூர்க்குமரன் பருப்பதத்திற்
காவியங்கண்மயி லேயுனதாசைக் கடற்கடவேன்
வாவியின்பாங்கர் வரவோதண்சோலை வயின்வரவோ
நீவிரும்புங்குடிற் பால்வரவோவெது நின்னிசைவே, (ருரு)

அவாமிகைகூறல்.

பின்னுசையற்றவ ருந்தொழுஞ்செந்திற் பிரான்சிலம்பிற்
றன்னுசையைமறைத் தென்னுசைகாணுந் தகையணங்கே
நின்னுசையேபெரி தியாதபாதகர் நெஞ்சகத்துப்
பொன்னுசையுஞ்சிறி தேயென்னலாமிது பொய்யல்லவே. (ருசு)

இரவுபகனமக்கேதென்றல்.

கொல்லுந்தொழிலுடை யார்க்கிரங்காத குணங்கொளுஞ்சேய்
புல்லுந்திருச்செந்தின் மாநகர்ச்சந்தப் பொருப்பின் மின்னே
மல்லுண்டதோண்மதன் போர்க்களத்தேயெதிர் வாய்த்தநமக்
கல்லும்பகலுமுண் டோவுளத்தூடுகன் காய்ந்துசையே. (ருஎ)

கடுத்துக்கூறல்.

கோலாகலத்திருச் சந்தக்கவிதை கொழிப்பவர்தம்
பாலாடுஞ்செந்தி னகர்க்குமரேசன் பருப்பதத்தி
லாலாலமன்னநின் கட்பார்வையெய்தி யளவுபடா
மாலானவென்றற் கிரங்காததேனடி வன்னெஞ்சியே. (ருஅ)

சினந்தவிர்த்தல்.

மெய்தேறுவார்க்கெளி யான்றிருச்செந்தில் விசாகன்வெற்பிற்
கைதேறுமாரன் களத்தேயெதிர்ந்து கணைகண்மிக
வெய்தேங்கவிட்டவப் போதும்பணிந்துன்னை யேத்தல்விட்டு
வைதேனெனச்சினங் கொண்டாலுந்தீர்ந்தருண் மாதரசே. (ருசு)

முடிவின்மைகூறல்.

தாமக்கடம்பணி செந்தூரன்சந்தத் தடஞ்சிலம்பி
னேமக்கனதனத் தேந்திழையேயுன்னை யெண்ணியெண்ணிப்
போமக்கணந்தொறு மெட்டுயிர்த்தின்பம் புணர்ந்துழலுங்
காமக்கடற்கரை காணுதென்னெஞ்சங் கலங்கியதே. (கூo)

சோர்வின்மைமதித்தல்.

தொண்டுண்டபான்மையர் காணுஞ்செந்தூர்க்குகன் றெல்கிரியிற்
பண்டுண்டுண்டுன்னது பாற்றேக்குமின்பப் பயனினிமேற்
றண்டுண்டகையின ராம்போதுந்தித்திப்பைத் தான்றருமோ
வண்டுண்டபூங்குழன் மாமயில்போலு மடக்கொடியே. (கூக)

உயர்ச்சிகூறல்.

நறவாருஞ்செச்சையந் தார்ச்செந்திநாயக னற்சிலம்பிற்
பிறவாமைவேண்டித் தவமேமுயல்கின்ற பெற்றியுறுந்
துறவாளர்தாமுநின் னின்பசல்லாபத் துறைசொல்வரேன்
மறவாமைவேறுள தோமுருந்தோடுறழ் வாணகையே. (கூஉ)

தன்றன்மைசாற்றல்.

கஞ்சனைக்குட்டி யுயிர்யாவுஞ்சிட்டித்த கையன்செந்தூர்த்
தஞ்சமதாம்வரைத் தாழ்குழலேயுன் றனதிரண்டு
செஞ்சரணங்களுக் காளாகினேன்மற்றொர் திக்கிங்கில்லை
வஞ்சகஞ்சற்று மறியேனிச்சொல்லுமவ் வாறல்லவே. (சுங)

துயரமாற்றல்.

கூரயிற்கையுடைச் செந்தூரன்சந்தனக் குன்றிடத்தி
லீரமற்றுள்ளவன் னெஞ்சமென்னெஞ்சமென் றெண்ணிநையேல்
வாரம்வைத்திட்டதை மாற்றேனின்னுணை மகிழ்ச்சிபொங்காய்
வாரணக்கோட்டு முலையோடுலாவு மடவன்னமே. (சுச)

புறங்காட்டன்மறுத்தல்.

அருகஃசமய மறப்பாடுஞ்செந்தி லதிபனருள்
பெருகுஞ்சிலம்புடைப் பேதைநல்லாய்சுருள் பெற்றிவிட்ட
வெருகந்தளிரு மணற்குன்றுங்காரும் விலகிமுற்று
மொருதிங்கள்சக்கரந் தேன்கூடுதோன்ற வுளமிரங்கே. (சுரு)

முதுமையினுமறவேனெனல்.

கதிர்வேலணிந்துயர் செந்தூர்க்குமரன் கனகிரியிற்
பதினாறுமைந்தரை நீபெற்றுன்கூந்தலும் பஞ்சொக்கினு
மதிமோகமுற்றவென் னெஞ்சுன்னைவேண்டுமெய் யையமுறேன்
மதிவாணுதலணங் கேவஞ்சிநேரிடை வாய்த்தகொம்பே. (சுசா)

கைக்கிளைகூறல்.

மண்டலமெங்கும் புகழுஞ்செந்தூர்க்குகன் மால்வரையிற்
புண்டரிகத்திருப் போல்வாழ்மின்னேதென் பொதியைவரைத்
தண்டமிழன்னநின் சொற்கேட்டுருகித் தயங்குமென்னைக்
கண்டருள்செய்திலை நின்னெஞ்சந்தான்கொடுங் கன்னெஞ்சமே. (சுஎ)

மருந்துசோல்லென்றல்.

வையிலங்குங்கதிர் வேற்செந்திலான்சந்த மால்வரையின்
மொய்யியம்புங்குழன் மாதரசேபண்டு முக்கண்ணனுன்
மெய்யிழந்தோன்கணை தைத்தபுண்மீறி மெலிந்தடைந்தேன்
றெய்யின்மென்றோளன்ன மேமருந்தொன்றின்று சொல்லுதியே. (சுஅ)

நெஞ்சோடுகலந்தமைநிகழ்த்தல்.

ஆயுந்தமிழ்த்திருச் செந்தூர்க்குமர னணிவரையி
லேயும்பசுங்கிள்ளை நேர்தையலேயெனக் கிச்சைநல்கு
நீயுமென்னெஞ்சுமொன் றானதின்றேற்கன நித்திரையிற்
றோயுங்கலவிக் கனவெய்துமோவதி சூட்சமிதே. (சுகூ)

கண்ணுற்றுக்கிரங்கல்.

விண்ணூறுதீர்த்தருள் செந்தூரன்வெற்புறை மெல்லியலே
வண்ணூறுநின்னெழிற் கண்கொண்டுகாடோறு மாந்தியப்பாற்
றெண்ணூறுநூறு வயதாளர்தாமுந் துடிதுடிக்கக்
கண்ணூறுவாட்டமன் றோவென்றெனெஞ்சங் கவல்கின்றதே (எ௦)

இன்பத்தளவுரைத்தற்கிசையாமைகூறல்.

களவிடைவள்ளியைக் கொண்டோன்செந்தூருறை கந்தன்வெற்பிற்
றளவமென்முரலத் தையனல்லாய்மதன் சாபநிகர்
குளவணங்கேயிங்கு நாம்பலவாறு குலாவுமின்பத்
தளவறைவார்தம்மை யெண்ணியென்னெஞ்ச மழுங்கியதே. (எக)



## தலைவன்பாங்கன்முற்பகர்வன.

பாங்கனைக்கண்டடேன்கூறல்.

ஆழாழிசூழ்திருச் செந்தூர்க்குமா னணிவரையிற்
காழார்மனத்தொரு கன்னிதன்மேகக் கடலினிடை
வீழாமிகக்கெஞ்சி வாடியகாளனென் விழியனைய
தோழாநின்சேர்க்கையொன் றில்லாதயின்ற துயர்பலவே. (எஉ)

ஊமர்கனவொத்தமைகூறல்.

பல்வரையாடல் பயிலுஞ்செந்தூரான் பரிசனைய
நல்வரைப்பேதைதன் கண்ணால்வெருட்டலி னன்புனத்திற்
சொல்வரைவிற்கடங் காவண்ணமுற்றுள்ள துன்பமின்பங்
கல்வரைமொய்ம்பநிற் காணுமுன்னூமை கனவொத்ததே. (எந)

இயல்பழித்தியம்பல்.

வண்டேன்றகண்ணுடைக் குஞ்சரிகோன்செந்தில் வாழ்குகன்மெய்த்
தொண்டேன்றனக்கருள் வான்வரைத்தோழவத் தோகையின்ப
முண்டேன்றவமுடித் தேனுனதாருபி ருப்புங்கொலோ
கண்டேன்றனுள்ளங் கவருமுன்னீயவட் காணுறினே. (எச)

மனவலிவியத்தல்.

தென்பாண்டிநாட்டணிச் செந்தூரன்சந்தச் சிலம்பகத்தன்
றன்பாலெனைவலி தாண்டியிர்போற்றிக ழாயிழைபால்
வன்பாளர்போற்சென்று வாடாதென்முன்னின்று வந்துநின்ற
பென்பாங்கநின்மனத் தின்வலியோர்க்கு மெய்தரிதே. (எரு)

குறிகுணம்வினவல்.

என்றுகண்டாங்கொளிர் வேலாயுதன்செந்தி லேய்ந்தசந்தக்
குன்றுகண்டென்னவள் கோலமுங்கண்டு குறிகுணமு
நின்றுகண்டிங்கு வருந்தோழனேசற்று நெஞ்சமகிழ்ந்
தொன்றுகண்டாங்குரைத் தாற்றுயர்தீருமெ னுள்ளகமே. (எசு)

அடையாளங்கூறல்.

ஐம்புலன்றீர்ந்த பெரியோர்தொழுங்குக னுஞ்செந்திற்
பம்புசந்தாசலச் சாரலில்வாழுயிர்ப் பாங்கமுலைக்
கொம்புடையாண்மைக் குழலுடையாளெண் குரலுடையா
ளம்புயப்பூவின் முகமுடையாளென தாரணங்கே. (எஎ)

அன்றெனமறுத்தல்.

வென்றுவெஞ்சூரனை மாய்த்தபிரான்செந்தில் வெற்பினிடைச்
சென்றுகண்டேனுனைச் சேர்ந்தாளைமாந்தளிர்ச் சீருடையா
ளென்றுசொற்றாய்நண்ப னேயவளியாவள்கொ லெண்ணியவா
றன்றுபொன் போன்றொளி ராகமுள்ளாளென தாயிழையே. (எஅ)

மாண்புறப்புனைதல்.

முன்னுளொருவ னிமித்தம்பரமனோர் மொய்குழலா
டன்னுகுலங்கெடத் தூதுசென்றானதிற் றாழ்ந்தனனோ
வென்னுவியன்னவண் முற்சென்றென்வாட்ட மியம்பிடினின்
மன்னுண்மைகுன்றுங்கொ லோசெந்தில்வேலன் வரைநண்பனே. (எகூ)

கருத்தளவோர்தல்.

தோலுடையாரிடந் துன்னியபாவைதன் றோள்விரும்பு
மாலுடையானல்ல னுமளகேசன் மனத்திலெண்ணல்
போலுடையாமுகைக் கொங்கையினாளைப் புகழ்வதின்றோ
வேலுடையான்செந்தில் வெற்பூடென்னேயம் விழைந்தவனே. (அ0)

கனவுகூறல்

தினகரனையிற் கைப்பெருமான்றிருச் செந்தில்வெற்பி
லனவரதம்பிரி யாநண்பனேற்றிர வத்தனையும்
புனமதிற்சென்றொரு பூவையைக்கண்டு புணர்ந்ததுபோற்
கனவுகண்டேனங்கும் வந்ததங்தோகொடுங் காமனம்பே (அக)

சொல்லரிதென்றல்.

புள்ளுகைக்குந்திறற் செந்தூரன்சந்தப் பொருப்பின்மின்னைக்
கள்ளுகைக்குந்துணி வைத்தருகாமக் கடற்பெருமை
யுள்ளுகைக்குள்ளமு நாணுமென்றான் மற்றொருவரிடம்
விள்ளுகைக்காகுங்கொ லோவுயிர்போதுமென் மெய்யன்பனே. (அஉ)

உண்மைகூறியுவகைவருத்தல்.

பன்னிருகையுடைச் செந்தூரன்சந்தப் பருப்பதத்துப்
பொன்னியன்மேனிநல் லாள்வஞ்சநெஞ்சப் புலவிகொள்வா
ளென்னிடநியது செய்யாயுரைக்கு மிருவர்தம்மி
னுன்னிலுமுண் மை யுடையாள்கொலோவந்த வொண்டொடியே. (அங

பழமைபாராட்டல்.

நெல்விளைக்கும்பணைச் செந்தூர்க்குமா னெடுங்கிரியின்
மல்விரைச்சாந்துடைக் கொங்கைநல்லாளின்று வந்தவணி
நல்விருப்பானுயர் தாய்முலைப்பான்மனை நன்ககலாப்
பல்விளங்குற்றவந் நாட்டொட்டுநீடும் பழக்கத்தனே. (அச)

மருந்துவினுதல்.

பொருந்தலர்வேரறச் செற்றசெந்தூரன் பொருப்பிடத்து
முருந்துறழ்வாணகை யாண்மீதுநான்கொண்ட மோகமொத்தத்
திருந்திழையாண்மயல் கொண்டேங்கச்சிக்கிரஞ் செய்வதற்கோர்
மருந்தறிந்தாற்சொல்லு வாய்வரைத்தோளலம் வாய்த்தவனே. (அரு)

உறைவயினுரைத்தல்.

அங்காரகன்றொழும் வேலன்செந்தூர்ச்சந்த னுசலத்தில்
வெங்காதமேனும்மிக நல்கியபேதை விரும்புமிடங்
கொங்கார்மலர்த்தட வாவியின்பாங்கருங் கொட்டிலும்பூம்
பைங்காவுஞ்செந்தினைச் செய்த்தலைவாய்த்த பரண்களுமே. (அசு)

இடையின்மைவியத்தல்.

தடையற்றவின்பந் தருஞ்செந்திலாதிபன் சந்தவெற்பிற்
றொடையற்பனிமலர்த் தோளுடைத்தோழவித் தோகைநல்லா
ளடையற்கருங்குழ லுந்தனக்கோடு மலமருமா
றிடையற்றிருந்து மிருமாதெனும்பெய ரெய்திலளே. (அஎ)

அலர்விரும்பல்.

தானவர்கோனைத் தடிந்தசெந்தூரன் றடஞ்சிலம்பில்
யானவண்மேற்கொள்ளு மிச்சையுமென்ற னிடத்திலந்தக்
கானவள்கொண்டுள்ள காதலுமூரவர் கண்டுசொல்லக்
கானவந்நாளென்று கொல்லோவென்னுருயி ரன்னவனே. (அஅ)

அலர்கண்மேகிழ்தல்.

காவைநற்றேனுவைச் சிந்தாமணியைக் கழித்தடியார்
தேவையெல்லாந்தருஞ் செந்தூரன்சந்தச் சிலம்பினண்பா
பாவையுந்தோற்பினு நன்றேயெனக்கவ் விலங்கிழைப்பொற்
பூவைதன்னன்ப னெனுமாற்றமாயிரம் பொன்பெறுமே. (அகூ)

மடல்கருதிக்கூறல்.

விரும்பவல்லார்க்கருள் செய்யுஞ்செந்தூர்க்குகன் வெற்பிடத்தோர்
துரும்பனையேனைநற் றாணுமெனக்கொளுந் தோழமலர்ச்
சுரும்பவிர்கூந்தலந் தோகைநல்லாண்முலை தோயச்செய்யக்
கரும்பனைவார்மட லன்றிமற்றோர் துணை கண்டிலனே. (கூ0)

உடன்பாடுவினுதல்.

ஆரியர்போற்றிசைக் குஞ்செந்தில்வேல னணிவரையிற்
காரியகாரண மோர்ந்துள்ளதோழ கரியமைக்கட்
சீரியமங்கையர் மால்கொண்டுவாடித் தியங்குநர்க்குத்
தூரியமும்பட முங்கொடிதோநன்கு சொல்லுதியே. (கூக)

மடல்பிழையாமைகூறித்தேற்றல்.

மாங்கனியொன்ற னிமித்தம்புவியை வளைந்துவரும்
பூங்கழற்சேய்திருச் செந்தூரிற்சந்தப் பொருப்பினளாற்
றூங்கருமோகத் துடனூர்மடலூர் தவறுங்கொலோ
பாங்கநின் னுள்ளமஞ் சேல்வென்றிதோய்தரு பண்புளதே. (கூ௨.)

ஐயந்தீருமாறுரைத்தல்.

முந்நீரொலிமலி யுந்திருச்செந்தின் முருகன்வெற்பாள்
பைந்நீர்க்கதலித் துடையூடெக்காலும் பதிந்தநெஞ்சேன்
செந்நீர்முழுது மதப்புனலாதற் றெரிப்பதற்கோர்
வெந்நீர்முட்போதுங்கண் டாயுயிர்போலும் விருப்பினனே. (கூ௩.)

சேராமையுணர்த்தல்.

பொன்சேர்ந்தசெந்திற் பதியான்பொருப்பிலப் பூவைதன்னை
முன்சேர்ந்ததில்லைநின் ணுணைமெய்காண்டொட்ட மொய்குழலைப்
பின்சேர்தற்கித்தனை வாறுவருந்துறும் பேயனல்லேன்
மின்சேர்ந்தவேலுடைத் தோளாபொய்ச்சொல்லை வெறுப்பவனே. (கூ௪)

பிறர்கோண்மறுத்தல்.

பற்றார்குலமழிக் குஞ்செந்தில்வேலன் பருப்பதத்தி
னுற்றாரின்மிக்க வொருதோழனேகலந் தூடிக்கொண்டாண்
முற்றான்மடற்பனை யூர்வதென்கின்ற முறைதவறு
கற்றாருரைப்பினுங் கான்றமைக்கேங்குங் கணக்கொக்குமே. (கூ௫)

இதழ்ச்சுவைகூறல்.

கோனுங்குரவனு மாச்செந்தில்வாழ்குகன் கொற்றவெற்பி
லூனுண்டவேல்கொண் டுலாவுநண்பாவிச்சொ லுண்மைகண்டாய்
தேனுமமுதுந் திரட்டியபாலுஞ் செழுங்கனியு
மானுஞ்சுவைதந்த தந்தோவப்பேதைசெவ் வாயிதழே. (கூ௬)

தனிநலம்பயிறல்.

மாப்பட்டவேலுடைச் செந்தூரன்சந்தன மால்வரையிற்
பூப்பட்டகீர்த்தி புனைகண்பனைமயல் பூத்தவென்முன்
வீப்பட்டகூர்தனல் லாடனியாயும் விளங்கியது
தீப்பட்டவீட்டிடை மேல்காற்றுங்கூடிய சீரொத்ததே. (கூஎ)

கவிழ்ந்துசென்றமைக்கிரங்கல்.

குவிந்தகையார்க்கருள் செந்தூரான்சந்தனக் குன்றிடத்திற்
கவின்றருவேழக் களிறனையாயென் கருத்துடையா
ளவிழ்ந்தசெந்தாமரைப் போதொடுதிக்கனு மன்னமுகங்
கவிழ்ந்துசென்றாளன்பி லாள்போலென்னெஞ்சகங் கன்றியதே. (கூஅ)

புன்னகைக்குவத்தல்.

வன்னமயூரப் பரிச்செந்திலான்சந்த வான்கிரியி
லென்னகமேயொத் திலங்குநண்பாவம்மி னென்னையன்று
கன்னல்வில்வேளிடங் காட்டிக்கொடுத்துக் கடக்கநின்று
புன்னகையொன்று புரிந்தாளென்னெஞ்சகம் பூரித்ததே. (கூகூ)

நூனலம்பயிறல்.

ஒள்ளியவேற்படைச் செந்தூரன்சந்தவெற் பூடெனையே
நள்ளியதோழவந் நாரியன்பாலிங்கு நானுணர்ந்தேன்
றெள்ளியசெந்தமிழ் நூலுணர்வான்மிகச் சீரியவர்
கள்ளினுங்காம மினிதாமென்றோதிய கட்டுரையே. (க00)

தவத்தினைப்புகழ்தல்.

செஞ்சிகியூருந் திருச்செந்திலான்றன் சிலம்பிடத்தென்
னெஞ்சினைவிட்டக லாத்தனிநேயவெங் கோத்தினுங்
கொஞ்சியென்னுகங் குழையக்குழையக் கொடுக்குமின்ப
வஞ்சியொப்பாமிடை யைத்தரன்முன்செய்த மாதவமே. (க0க)

சுவர்க்கம்விழையாமை.

ஞானவித்தாகிய செந்தூர்ச்சரவண நாதன்வெற்ப
னுனநற்றோழ வருவியஞ்சார லணிப்புனத்துக்
கூனல்விற்போலு நுதலாளைச்சந்ததங் கூடியநான்
வானகத்தின்பம் விழையேன்முக்காலுமெய் வார்த்தையிதே. (க0உ)

சித்தியின்மைகருதியேங்கல்.

முத்திரைக்கையினர் போற்றுஞ்செந்தூரின் முருகன்வெற்பி
னித்தியம்வாழ்கின்ற நேயாவெனதுபுன் னெஞ்சழுங்க
வத்திரக்கண்கொண்டு பார்த்தாளுக்காமுரு வாயடுக்கச்
சித்திகற்றேனில்லை யேஎம்மையாள்குல தெய்வமொத்தே. (க0ங)

கலையாதிவியத்தல்.

மலையுங்கடலு மருவுசெந்தூரன் மலர்ப்பதமே
நிலையென்றுணர்ந்தநன் னேயத்தனேயென்ற னெஞ்சமுற்றுங்
குலையும்படியதி மேகாந்தகாரங் கொடுத்தமின்னாள்
கலையும்பணிகளுங் கச்சுமுன்செய்தவங் கண்டிலனே. (கoச)

சிற்றமுகைக்கிரங்கல்.

கனங்கண்டசந்தன வெற்பார்செந்தூர்வளர் கந்தனைத்தென்
மனங்கண்டதோழவென் னுருயிர்க்கோருயிர் மானவரு
மனங்கண்டமென்னடை யாளென்றனன்பறி யாதறைசொற்
சினங்கண்டுசற்றமு தாளென்றனெஞ்சகந் தீய்ந்ததுவே. (கoரு)

பொய்த்துயில்வுகூறல்.

மைத்தகுகண்வள்ளி கோன்றிருச்செந்தில் வரையகத்தி
னெய்த்ததண்டார்புனை மார்புடைத்தோழவென் னேயங்கண்டு
மெய்த்துகில்சோர்ந்த தறியாளைப்போன்று விழிகுவித்துப்
பொய்த்துயில்கூர்வ ளுடன்பாடுநாணமும் பூண்டவளே. (கoசு)

உடன்பாட்டுக்குறிப்புணர்தல்.

கன்றைக்கனிக்கெறிந் தான்மருகோன்செந்தில் காத்தபிரான்
குன்றைப்பொரும்புயக் கொற்றவனேமலர்க் கோதைநல்லா
ளென்றைக்குத்தொய்யி லெழுத்துங்கண்மையு மிடற்கிசைவா
ளன்றைக்கென்மேற்கணை யாயிரமேவுவ னங்கசனே. (கoஎ)

உடன்பாடின்மைக்குறிப்புணர்தல்.

கவியினுமாடல் பயிலுஞ்செந்தூரன் கனகிரியி
லொலிபெறுமொண்கழற் காற்றேழனேயபி லொத்தகண்ணாண்
மலிதருபூணுந் திருத்தாதுவாடி வருந்துறுநாள்
வலிதழைத்தாலுமொ ரம்புமெய்யான்கிள்ளை வாகனனே. (கoஅ)

இரங்காமைக்கேங்கல்.

பன்னகத்தோகைப் பரிச்செந்தில்வேலன் பருப்பதத்தி
னுன்னருங்கீர்த்தி யுறுதோழனேமைய லுய்த்தமின்னா
ளென்னகநொந்து தடுமாறிப்போற்று மியல்புகண்டு
மின்னமுஞ்சற்று மிரங்காதிருப்பதற் கென்செய்வதே. (கoகூ)

தன்னைப்பழித்தல்.

மின்றயங்குந்தனி வேற்செந்திலான்சந்த வெற்பிடத்தி
னன்றனைத்துந்தெரி யுந்துணைவாவொரு நாரியிரு
குன்றமொப்பாமுலை யாற்பொரும்போர்க்களங் கொள்வதனுக்
கென்றனைப்போலிச்சை கொள்வாரின்றென்கை யியல்பினதே. (கக0)

## தலைவன்பாங்கிமுன்னிலையிற்பகர்வன.

### கண்ணோர்ந்தமைகூறல்.

நலங்கிளர்செந்தி னகராளுஞ்சண்முக நாதன்வெற்பிற்
பொலங்கொடிபோற்றிகழ் பூவைநல்லாயென் பொறிபிறழ்ந்து
கலங்குறப்பார்த்துக் களிகூர்ந்தெனது கருத்தினிற்கு
மிலங்கமைத்தோளிநின் றோழியென்றோர்ந்தன னிப்பொழுதே. (ககக)

### அன்றுகோலேன்றல்.

மன்றுடையார்தரு மைந்தன்செந்தூரில் வரதன்வெற்பின்
மென்றுகிற்சோர்வின் முலைதோன்றவென்னெதிர் மெல்லவந்து
நின்றுளங்கொண்டுயிர் வாடச்செய்தேகின ளின்னிதுளை
யன்றுகொல்லோவெள்ளை முத்தாரம்போலு மணிநகையே. (ககஉ)

### நவின்றமைவினாதல்.

வான்படுந்துன்பந் தவிர்த்தசெந்தூரான் வரைத்தலத்தின்
றேன்படுங்கூந்தற் சிறுமயிலேபடர் செவ்வரிதோய்
மீன்படுங்கண்ணிதன் கோலாகலத்தில் விரகமுற்ற
நான்பாடும்பாட்டிடை நின்பாலப்பேதை நவின்றதென்னே. (ககங)

### பொறுப்புக்கூறல்.

தேங்கமழ்செச்சையந் தார்ச்செந்திலெந்தை சிலம்பகத்திற்
பூங்கமலாதனப் பொன்னனையாய்மிகு பொற்பமைந்த
கோங்கரும்பன்ன முலைத்தோழியென்னுடன் கூடிக்கொண்டு
நீங்கருமின்பக் கடற்றோயச்செய்வது நின்பொறுப்பே. (ககச)

### கண்டுகேளித்தமைகூறல்.

பாம்பணிவார்தரு மைந்தன்செந்தூரன் பருப்பதத்தி
லாம்பலம்பூவுறழ் வாய்ப்பேதைமால் கொண்டலமருமென்
கூம்பருங்கண்க ளவளோடெப்போதுங் குலாவுகின்ற
காம்பவிர்தோளுடைக் கன்னிநிற்கண்டுங் களிக்கின்றவே. (ககரு)

### நன்றிமறவேனெனல்.

வென்றிவைவேற்படைச் செந்தூர்க்குமரன் வியன்சிலம்பிற்
பொன்றிகழ்மேனிநல் லாயென்னைநீயப் புணர்முலைதோ
ளொன்றிடக்காண்பதற் காமாறுநாடி யுஞற்றிலந்த
நன்றியைநான்மற வேன்மறவேனெந்த நாளினுமே. (ககசா)

### வலியின்மைகூறல்.

வேகம்பெருத்த மயிலூருஞ்செந்தில் விசாகன்வெற்பி
லாகஞ்சிவத்த வணங்கனையான்மத னாகமத்தின்
றாகங்கொடுத்துத் தயங்கவிட்டாளவ டன்னைநத்து
மோகஞ்சகிக்கவல் லேனல்லனியானினி மொய்குழலே. (ககஎ)

ஆற்றாமைகூறியுபாயம்வினாதல்.

போற்றுகின்றார்க்கருள் செந்தூரன் சந்தப் பொருப்பிடத்தின்
மாற்றுரையற்றபொன் போலுநின்றோழி மயற்கடலிற்
கூற்றுறழ்கண்வலைப் பட்டுநொந்தேன்கொடுங் கோன்மதன்போர்க்
காற்றுகில்லேனைய கோவுய்யுமாறென் றறைந்தருளே. (கக அ)

தரம்போதாதோ வென்றல்.

மங்கையராடன் மலியுஞ்செந்தூர்ச்சந்த மால்வரைவாழ்
கங்கைதன்சேயருட் போலுநல்லாய்மலர்க் காந்தள்வெட்குஞ்
செங்கையிலம்மனை யுங்கழங்குங்கொளுஞ் சிர்பெறுநின்
றங்கைதன்கொங்கைக்கென் றோள்பற்றிடாதுகொல் சாற்றுதியே. (கககூ)

புண்ணியமும் புகழுங்கூறல்.

திண்ணியசீர்திகழ் செந்தூரன்சந்தச் சிலம்பிடத்துப்
பண்ணியன்மென்மொழிப் பாவைநல்லாய்நின் பழக்கமிக
நண்ணியபேதை முலைப்போகநான்பெற நல்குதியேற்
புண்ணியமெய்தும தன்றிக்கெடாத புகழுமுண்டே. (க௨௦)

மண மறுத்தல்.

கணஞ்செய்தசேனைப் பிரான்செந்தில்வாழயிற் கந்தன்வெற்பிற்
குணஞ்செய்யும்வீறுடைக் கோமளமேயன்று கூட்டிவந்த
பணஞ்செய்தவல்குனல் லாடந்தைதாய்முற் பகர்ந்துகெஞ்சி
மணஞ்செய்யுநாள்வரை தாங்கவொண்ணாதிந்த மையலையே. (க௨க)

பருவம் வினாதல்.

பொன்னம்பொருப்புறழ் சந்தவெற்பார்செந்திற் புண்ணியன்றன்
றன்னந்தனியரு ளோர்தையலேயுனைச் சார்ந்துவந்தன்
றென்னன்புறக்கொண்டு போனாண்மற்றெங்கணு மியான்கண்டிலே
னின்னம்பருவம் வரவில்லையோவவ் விளம்பிடிக்கே. (க௨௨)

பருவமுண்டெனல்

வாசிக்கும்பூம்பொழில் சூழுஞ்செந்தூரன் வரைத்தலத்துப்
பாசிக்குழலணங் கேமையல்கூரும் பருவமின்றேற்
றேசிக்கனிநிகர் கொங்கைகளேதெனுட் சிந்தைகண்டு
கூசிக்கொள்கின்ற குணமேதுசொல்லக் கொடியிடைக்கே. (க௨௩)

பிழையாமைகூறல்.

திருகுற்றகோட்டுத் தகரூர்செந்தூரன் றிருச்சிலம்பி
னருகுற்றசார லணங்கனையாயளி யார்க்குமலர்
செருகுற்றகூந்தனல் லாளனுகேலெனச் சீறிச்சொன்னா
ளொருகுற்றமுஞ்செய்த தில்லைகண்டாயென் னுளமறிந்தே. (க௨௪)

போய்மை கண்டிரங்கல்.

மெய்யாயவிடரு ளுஞ்செந்தில்வேலன் வியன்சிலம்பி
னெய்யார்மலர்புனை நீள்குழலாயுன்ற னேயமிகு
மையாருங்கண்ணி வருவேனெனச்சொன்ன வார்த்தையொன்றும்
பொய்யாகிவிட்டமை யெண்ணியென்னெஞ்சம் புலர்கின்றதே. (கஉரு)

இடையூறு வினாதல்.

விடையேறுவார்தரு மைந்தன்செந்தூரன் வியன்சிலம்பி
னடைதோயுமின்னன்ன நங்கைநல்லாயென்னை நாடியகட்
கடையாளிக்காவகந் தேவந்துகூடிக் களிப்பதனுக்
கிடையூறுளதுகொல் லோவுளதாகி லியம்புதியே. (கஉசு)

வஞ்சமுறுத்திக் கூறல்.

படைவேல்புனைந்தகைச் செந்தூரன்சந்தப் பருப்பதத்தி
னிடைதோன்றியென்மனங் கொண்டுதன்னெஞ்சையு மீந்தவடன்
றடையாவுந்நீர்க்கென்னைச் சேரச்செய்மாண்புன் றனக்கில்லையோ
தொடைசூடிக்காரமர் பூஞ்சோலைபோலுஞ் சுரிகுழலே. (கஉஎ)

வெறுத்துக்கூறல்

நிலைப்பானசந்த வரையாள்செந்தூர்க்குக னீடருள்போல்
விலைப்பான்மைநீர்த்தநல் லாளெனைச்சேர விரும்புதலை
யுலைப்பார்மற்றியாருன்னை யன்றியுள்ளார்பக ரொண்டொடியே
கலைப்பார்கலைக்கின் முலைப்பாலும்வேம்பெனுங் காசினியே (கஉஅ)

உரிமைவேண்டல்.

கன்மீதுலாவுங் கழற்செந்திலான்கடைக் கண்ணமரா
மன்மீதருள்செயற் கேட்டிலையோவந்த வாறிரங்கி
யென்மீதுரிமைசற் றின்றுகொள்வாயென்று மியான்விரும்பு
மின்மீதுரிமைவைத் துத்தாயிற்பேணிய மெல்லியலே. (கஉகூ)

ஐயுற்று வினாதல்.

நன்மோக்கநல்குந் திருச்செந்தில் வேல னளிர்வரையின்
முன்மோகினிக்கிணை யாமெனத்தோற்றிய மொய்குழலா
டன்மோகங்கூறினுங் கூறுவிடினுந் தவிர்த்துருகு
மென்மோகங்கூறிய துண்டோவின்றேருபக ரேந்திழையே. (கநo)

வணங்குமாறுரைத்தல்.

நாடச்செய்தாண்டருள் கூர்செந்திநாயக னற்சிலம்பிற்
றேடச்செய்தேகிய செப்பிழையாளுயிர்ச் சேடியவ
ளூடச்செய்யாமலோன் றுகியசிந்தை யுடனுவந்து
கூடச்செய்தாளுனைக் கோண்டாடுப்வாய்கரங் கும்பிடுமே (கநக)

### கள்ளங்காட்டல்.

தவமுதிர்ந்தோர்புகழ் செந்தூர்க்குருபரன் சந்தவெற்பிற்
கவளமதாசல நேர்கொங்கையாண்மையல் காட்டிச்சென்றா
ளிவணுழல்வேணுவப் பெய்தாதவண்ணா மியம்புகின்றா
யவளினுநீகள்ளி யானாயென்றென்னெஞ் சறிந்ததுவே. (௧௩௨)

### தன்னிலை தெரித்தல்.

பொன்னைப்பெருக்கெழிற் செந்தூரன்சந்தப் பொருப்பிடத்தி
லென்னைக்கண்ணும்வலை யாற்பிணித்தாடன் னிகுளையென
வுனைக்கொண்டொவ்வொருக் காற்றோடநாடில னுள்ளகத்து
மன்னைக்கொப்பாநினைப் பேனிரங்காயுற வாக்குதற்கே. (௧௩௩)

### அடிமைத்திறங்கூறல்.

கற்பனைதீர்ந்த புகழ்ச்செந்தில்வேலன் கனகிரியில்
விற்படும்வாணுதற் றோழிதன்கொங்கை விழையுமென்னை
யற்பகடூர்மதற் கஞ்சாதளிக்கி லநுதினநின்
சொற்படியேநடப் பேன்முருந்தோடுறழ் தூநகையே. (௧௩௪)

### இயல்படுத்துவினாதல்.

காழியிற்பாவலற் கோர்கலையீந்தருள் கந்தன்செந்தில்
வீழியிற்றீங்கனி யன்னசெவ்வாயிதழ் மெல்லியலா
ராழியங்கண்வலைப் பட்டார்பலரு ளறிவின்மிக்க
தோழியினட்பின்றி யின்பமுற்றாரெவர் சொல்லுதியே. (௧௩௫)

### சொல்லிரத்தல்.

மருமலர்ச்சோலை மலியுஞ்செந்தூர்ச்சந்த மால்வரையிற்
குருபரன்மெய்யரு ளன்னநல்லாயுனைக் கூடியன்று
வருமவணல்கிய மையலில்வாடி மறுகுகின்றே
னிருவருஞ்சேரப் புரிவேனென்றோர்சொல் லியம்புதியே. (௧௩௬)

### கூச்சந்தீர்க்குமாறுகூறல்.

ஆசுமுற்பாடுங் கவிநான்குஞ்சூடு மணிச்செந்திலான்
றேசுடைக்குன்றத் தணங்கனையாய்நின் றிருவருளாற்
பேசுமப்பேதை யிசைந்தாள்சிலவிதப் பெற்றிகண்டு
கூசுகின்றாளது கூடாதென்றோதிக் குணஞ்செய்திடே (௧௩௭)

### கைமாறறியாமைகூறல்.

கூதாளமாலைத் திருச்செந்தில்வேலவன் கொற்றவெற்பிற்
போதாளும்பொன்னனை யாண்முலைப்போகம் புணர்த்திமையற்
பாதாளவாரிக் கரையேற்றியவருட் பாங்கியுனக்
காதாளியெய்திடத் தக்கைகம்மாறொன் றறிந்திலனே (௧௩௮)

அருமைபாராட்டல்.

கடவுளர்க்கோரர சாச்செந்தில்வாழயிற் கந்தன்வெற்பி
னடமிடுந்தோகை மயிலனையாளின்ப நல்கியென்ற
னிடர்படுமைய லொழித்தறமெய்ந்நினை யித்திறமோர்
முடவனுண்ணக்கொம்புத் தேனெடுத்தூட்டு முறையொத்ததே (௧௩௯)

வாழ்த்திக்கூறல்

கோழியெழுதுங் கொடிநீடுஞ்செந்திற் குமரன்வெற்பில்
விழிளங்கோகில மன்னநல்லாளின்ப மேவச்செய்து
பாழியந்தோண்மதற் கஞ்சாதவாழ்வுறப் பண்ணினையால்
வாழிபல்லூழி மயில்போலுஞ்சாயன் மடக்கொடியே. (௧௪௦)

---

## தலைவிதன்மை.

கண்டுநினைந்தமைகூறல்.

பண்மறையார்க்கும் பரிசாருஞ்செந்திற் பருப்பதத்தான்
வண்மலிதோகைச் சிகிமீதுவேல்கொண்டு வந்தவன்பல்
பெண்மருகிற்கண்டு சேவிக்கின்மோகம் பெருக்கியென்றன்
கண்மலராம்வழி யாற்சென்று நெஞ்சுட் கவின்றனனே. (௧௪௧)

கொங்கைப்பொலிவுகூறல்.

சஞ்சலந்தீர்க்கத் தகுஞ்செந்தில்வேலன் றனதுசெழுங்
கஞ்சமலர்முக மோராறும்பன்னிரு கைந்நிரையுஞ்
செஞ்சரணத்துணை யுஞ்சிகியாதிய சீர்பிறவு
நெஞ்சகத்தூடமைக் துற்றதனாற்கொங்கை நீடியவே. (௧௪௨)

கண்ணொடுபுலம்பல்

பன்னிருகையுடைச் செந்தூரன்றோகைப் பரியுடனன்
றன்னிடம்வந்தவ னெஞ்சகத்துற்றமை யுன்னுதியோ
மன்னிதயக்குறிப் புன்னெதிர்கண்டு மகிழ்வதுதா
னென்னிருகண்மணி யேவம்பினீரிறை யேவினியே. (௧௪௩)

கொங்கைகட்கறிவுணர்த்தல்

என்னருகொங்கைக ளேமுத்துமாலை யிசைந்தருவிப்
பொன்னம்வெற்பென் றுயர்க் திர்வம்மினுட்களைப் போக்கன்மின்வேற்
றென்னவனுகித் திருச்செந்திற்சந்தச் சிலம்பினுற்றோன்
றன்னகலந்தழு விக்கோளற்கான தவஞ்செய்மினே. (௧௪௪)

இதழுடனியம்பல்

மாயிருஞாலம் புகழ்ந்தோதுஞ்சீர்ச்செந்தின் மாநகரிக்
கோயிலுள்ளானரன் பான்முதற்றூசகங் கூறுநல
மேயிலங்குங்கனி வாய்தீண்டினல்லதென் வெண்ணகைச்செவ்
வாயிதழேயுனைக் கொத்துமயானத்து வாயசமே. (க௪௫)

கைந்நலங்கருதியேங்கல்.

கிளைக்கும்வெஞ்சூர்ப்புலை மாவொடுமாயக் கிரியினையுந்
துளைக்கும்வைவேற்படைச் செந்தூரன்பொற்பதந் தொட்டமருக்
கிளைக்கருங்கொங்கை யமுந்தத்தழுவி யிறுக்கினல்லால்
வளைக்கரம்பெற்ற பயன்யாதென்றுள்ள மறுகியதே. (க௪௬)

மதியினைப்பழித்தல்

விண்ணுடர்போற்றும் வியன்செந்தில்வேலன் விருப்பமுறும்
பெண்ணுரைக்காய்தன் முறையோவவன்றன் பிதாவினருட்
கண்ணுயசீர்தகு மோமதியேயுனைக் கன்னல்வில்வி
நண்ணுமகிழ்குடை யென்றுரைப்பார்பலர் நானிலத்தே. (க௪௭)

கடலொடுபுலம்பல்.

சேல்கொண்டகட்புன லானுய்வெற்பொன்றுடைச் செந்திற்பிரான்
வேல்கொண்டதோண்மையல் விஞ்சியதோமுன் வெகுண்டதன்றோ
கால்கொண்டுலாவிமுன் புற்றோவிட்டென்னிற் கவனுகின்றாய்
மால்கொண்டமெல்லனைக் காதரமாகிய வார்கடலே. (க௪அ)

சேக்கரைச்சினத்தல்.

வேலைப்புனைந்தநின் டோட்செந்திலானது வேட்கைதிகழ்
பாலைப்புரைந்தசொல் லார்மீதுனக்குட் பகைவந்ததேன்
சேலைப்பொறித்த கொடியான்செய்காமச் செழுங்கனலு
மாலைப்பொழுதின் கொடுமையும்போன்று வருஞ்செக்கரே (க௪௯)

தென்றலைப்பழித்தல்

கூம்பியகையினர் நெஞ்சுறழ்செந்திற் குமரனன்பி
லாம்பிணைக்கண்ணிய ரஞ்சுறப்பாய்தலி னலல்லவோ
தேம்பிரசக்கம லாதனத்தான்மதன் றேரெனவும்
பாம்பிரையென்று முனைப்படைத்தான்சுடும் பாழ்ந்தென்றலே. (க௫௦)

குயிலொடுபயிலல்.

கயிலாயவாணர்தம் மைந்தன்செந்தூர்க்குகன் காதல்கொண்டு
வெயிலுடுமென்புழுப் போற்றவிப்பேனை வெருட்டுகின்றா
யயிலேந்துமன்னவன் பன்னிருகாதி னடுக்கச்சென்று
குயிலேயென்னெஞ்சொத் தவனெஞ்சுமால்கொளக் கூவுதியே. (க௫க)

அன்றிற்றேனிக்கிரங்கல்.

குன்றினந்தோறு நடமாடுஞ்செந்திற் குகன்மயல்வந்
தொன்றியதால்வருந் துற்றேன்முன்னாகி யுருவிலிதன்
வென்றிவிற்கோலிக் கணையொன்றிரண்டு விடுத்தவுட
னன்றிலம்புள்ளொலி வந்துவந்தாவி யயில்கின்றதே. (கருஉ)

முத்தொடுமொழிதல்.

ஆயும்புகழ்த்திருச் செந்தூர்க்குமர னடிதொழுஞ்சீர்
தோயுங்கடற்பிறந் தாயவனைசை சுடுதல்கண்டு
நீயுஞ்சுடத்துணிந் தாய்முத்தமேயினி நெஞ்சையென்றன்
வாயுஞ்சுடுங்கொ லுனைப்போலும்வெண்ணகை வாய்ந்ததினே. (கருந)

களபங்கழித்தல்.

அந்தார்போற்று மணிச்செந்திலான்மய லங்கிசுற்ற
நொந்தயர்வேனுடற் சூடாற்றுதக்கது நண்ணியசீர்ச்
சந்தனமோவவன் றன்சிடன்வாழுந் தமிழ்வரையில்
வந்ததனலவன் றேள்சேர்ந்திடாரை வருத்துவதே. (கருச)

பூவெறுப்புரைத்தல்.

பாவலர்க்காதர மாஞ்செந்தில்வேலவன் பன்னிருதோ
ளாவல்கொண்டேனுக் கவனீபமாலை யளித்திலனாற்
காவலர்கட்பிலர்க் கூர்பகையாகுங் கணைக்கின்மற்றப்
பூவகையாவும் வடவாக்கினியின் பொறிபொத்தவே. (கருரு)

மதனனைப்பழித்தல்.

தண்படுதாமரைப் பூவாவிசூழ்தரு சந்தவெற்பால்
வண்படர்செந்தி னகர்க்கோன்முற்சென்றுவில் வாங்கிநின்றுன்
றிண்பலங்காட்டினன் றுமதனவம்பிற் சிறியிங்கோர்
பெண்பழியேற்கவந் தாயுனைப்போலில்லைப் பித்தர்களே. (கருசு)

மதன்றொழில்வியத்தல்.

அங்கிக்கணைக்குடை யானெரித்தானிவ னுருவுடையான்
மங்கிச்செலப்புரி வானெனச்செந்தில் வளநகரிற்
றங்கித்திகழ்குகன் றன்னைவிட்டீர்ங்குழ றுங்குமென்பா
லிங்கிப்படிச்சமர் செய்மாரனூகத் தியல்புநன்றே. (கருஎ)

கார்கண்டுகலங்கல்.

சீர்வந்தசெந்தி னகராளுஞ்சண்முகன் சிந்தையிடை
நார்வந்ததாலிங்கு வந்தெனைச்சேரு நலங்கண்டிலே
னூர்வந்தருங்கண வற்பிரிந்தார்கட் கவசநல்குங்
கார்வந்துவானத் துலவக்கண்டேன்றுயர் கைவந்ததே. (கருஅ)

பனிக்கோடுமைபகரல்.

விரியும்பணாடவிச் சேடனும்வெம்ப வெதுப்பும்வெய்யிற்
சூரியன்றன்முன்சற்றும் வாடாததாமரை யொக்கவெந்து
கரியுங்கொடும்பனிக் காலஞ்செந்தூர்வளர் கந்தன்றிண்டோட்
பிரியங்கொளுமென் முகம்வாடச்செய்தல் பெரிதல்லவே. (கடுகூ)

வேனிற்பெருமைகூறல்.

மைக்காலனையுதைத் தார்தருஞ்செந்தில் வரதனைமற்
றெக்காலத்திற்பிரிந் தாலும்வில்வேள்கிளி யேறியொரு
மெய்க்காலன்போல்வென்றி மீனேடுலாவிய வேனிலென்னு
மக்காலத்திற்பிரிந் தாலெனதாருயி ராற்றரிதே. (கசுO)

காற்றினைக்கருதிக்கூறல்.

மாற்றுரையற்றபொன் மேருவைப்பேர்த்து மறிதிரைச்சீர்
தோற்றுமகோததி யிற்பட்சிசாலந் துரந்துலவுங்
காற்றுளங்கொள்ளின் மயிலூருஞ்செந்திற் கடவுளையிவ்
வாற்றுவந்தென்விழி முன்னாகச்செய்வ தருமையன்றே. (கசுக)

வண்டுவிடுதூது.

பண்டேமயல்கொளப் பார்த்தசெந்தூர்க்குகன் பன்னிருதோள்
கண்டேயங்குள்ள கடம்பாரத்தேனிற் களித்துவிடேல்
வண்டேயென்றென்றுமென் வார்குழற்பூங்கண் மடுத்தநன்றி
யுண்டேலென்றுன்பமெ லாமறவாம லுரைத்திறைஞ்சே. (கசுஉ)

கிள்ளைவிடுதூது

வான்மயிலூர்திருச் செந்தூரன்றோண்மிசை வாஞ்சைகொண்டு
நான்மனநோவது சொல்விடப்போயங்கு நண்ணிவளர்
பான்மதுரத்தமிழ்ச் சந்தம்பொழியும் பசுங்கிளியின்
மேன்மயல்கூருவை யோபிள்ளைபோலும் வியன்கிள்ளையே. (கசுந)

அன்னம்விடுதூது

தென்னவர்போற்றுந் திருச்செந்தில்வாழ்குரு தேசிகனிங்
கின்னம்வந்தானிலை யென்றேங்கித்தூதென யான்விடுத்த
வன்னமங்குற்றது வோவில்லையோவள்ளி யங்கையின்பூத்
தன்னரங்காக்கொண்ட தோதமியேன்றுயர் சாற்றல்விட்டே. (கசுச)

நாரைவிடுதூது.

இரவினும்வாட்டமொ ரெள்ளளவாயினு மின்றிச்சென்று
வரவல்லநாரைக ளேயருட்சீர்ச்செந்தின் மாநகரிப்
புரவலன்பாற்சென்றென் புண்பாடனைத்தும் புகலுதிரேற்
கரவின்மெய்ப்பேறுங்க ளுடொன்றுபெற்ற கதைநிசமே. (கசுரு)

மேகவிடுதூது.

சூர்மேனிசாய்த்த சுடர்வேற்செந்தூர்க்குகன் ஷேட்கடப்பந்
தார்மேலென்னுசை தழைக்கின்றதானெந்து தட்டழிந்தேன்
கார்மேகங்காளவன் பாற்சொல்லுவீருங்கள் காவலன்பெண்
ணார்மேவுகொண்கனென் றெண்ணிவிடேன்மின்க ணம்பினனே. (கசுசு)

நெஞ்சுவிடுதூது.

கஞ்சமுங்காவியும் பூத்தகையார்புணர் கந்தன்செந்தூர்த்
தஞ்சமதானவன் றன்பாலென்மோகந் தனைப்பகர்தற்
கஞ்சமுற்கூறுவ வாகாவென்றோர்ந்தன ளுதலினென்
னெஞ்சகமேமுற்று நீபோயுரைக்கி னிசப்படுமே. (கசுஎ)

தூதுபிழைத்தமைக்கிரங்கல்.

வாதுடைச்சூரனைக் கொன்றவைவேற்படை வைத்தசெங்கைப்
போதுடையான்றிருச் செந்தூரன்சந்தப் பொருப்புறழ்தோண்
மீதுமிக்காவல் கொண் டேனவன்பாற்சொல்ல விட்டுமகிழ்
தூதுமுற்றும்பிழைத் தாலென்செய்வேனினித் தோய்வதற்கே. (கசுஅ)

பழமொழிக்கயர்தல்.

பொங்குள்ளவானந்த நல்குஞ்செந்தூரன் புயத்தினிச்சை
தங்குள்ளத்தென்றனத் தாசையன்னேன்மனந் தன்னிலின்றே
லெங்குள்ளமாந்தருந் தோன்றுதொட்டென்றென்று மெக்கவைக்கு
மிங்குள்ளவாறந்து முண்டெனப்பேச வியல்பல்லவே. (கசுகூ)

குறிநினைந்தயர்கை.

கூடையுங்கையிற் பிரம்புங்கொண்டோர்குறக் கோதைவந்து
மாடைவெற்பென்றுயர் செந்தூரன்றேடரு மையலையுஞ்
சாடையிற்சொல்லிப் புணர்வாயென்றேதலுந் தப்புங்கொல்லோ
வாடையிற்பூத்த மலர்வாளுளாற்கஞ்சு மாமனமே. (கஎ0)

சகுனங்கண்டுவேத்தல்.

மற்சமணுதிய பொய்க்கெறியஞ்சமெய்ம் மாதவஞ்செய்
சற்சனர்போற்றுந் திருச்செந்தில்வேலன் றனைவிரும்பு
மெற்சனிபோலன்னை யாதியர்வையினு மியானறிந்த
நற்சகுனங்களொன் றேபலவாகு நவிலரிதே. (கஎக)

சகுனங்கருதியேங்கல்

கடமாவுலவுந் திருச்செந்தின்மாநகர்க் கந்தனென்பொற்
றடமாமுலைதொடு வான்கொலென்றேங்குந் தகியிலுண்டா
மடன்ஞாளியின்செவி யோசையுஞ்சுந்தரி யார்ப்புமென
திடபாற்கெவுளிபுந் தும்மலும்பொய்த்த தற் கென்செய்வதே. (கஎஉ)

தலைவன்றன்மைகருதிக்கூறல்.

மன்னுமெய்ச்சீர்திகழ் செந்தூர்ச்சரவண வள்ளறன்பாற்
பொன்னுலகத்தினள் வாழவுமேனற் புனக்குறத்தி
தன்னுரிமைக்குடன் பட்டொருத்திக்குக்கை தான்கொடுத்தா
னென்னுடற்றேயி விளப்பமக்காமுகற் கேதில்லையே. (கஎ௩)

வினைத்திறங்கூறல்.

கரும்பாலைவாசங் கமழுஞ்செந்தூரன்பொய் காட்டுஞ்சிற்றில்
வரும்பாலைமாரொடு மாடவல்லானென்முன் வந்துநில்லா
னரும்பாசையுற்று மலர்வெறுத்தாலொத்தெ னன்பைச்சற்றும்
விரும்பாமைக்கோர்பெருங் காரணமுன்செய்த வெவ்வினையே. (கஎ௪)

மறவாமைக்கிரங்கல்.

நாலுமறையு முழங்கியசீர்ச்செந்தி னாயகன்றன்
பாலுறழ்வெண்ணகைச் செவ்வாயும்பேருட் பார்வைக்கண்ணும்
வேலுறுதோள்களு மென்மலர்த்தாள்களும் வேறுமிவை
போலுஞ்சிறப்புமுற் றுஞ்சிந்தியாத பொழுதில்லையே. (கஎ௫)

நகைநினைத்திரங்கல்.

குகப்பெருமான்றிருக் கைவேற்குமரன் குலவுசெந்தி
னகர்த்தெருவூடெனைக் கண்ணுரைப்பார்த்து நகைத்ததனு
லகத்துரித்துற்றனன் றேய்வானென்றெண்ணின னங்கசவே
ளிகற்கிடஞ்செய்தின்ன மிங்குவராம விருந்தனனே. (கஎ௬)

தலைவனைப்புகழ்தல்.

அனவரதந்தன்னை வேண்டுமின்னார்.தம் மகமகிழ
நனவின்மட்டும்புணர் வார்மற்றையாடவர் நஞ்சுமிழ்வாய்ப்
பனகமஞ்சுஞ்சிகி மேற்கண்டமாதர் பலர்களையுங்
கனவுநனவிற் புணர்வான்செந்தூர்வளர் காவலனே. (கஎஎ)

கனவைப்புகழ்தல்.

கொண்டாடுமிந்த நனவிற்செந்தூரனைக் கூடுமப்போ
துண்டாகத்தக்க மதநீர்ப்பெருக்கினுக் கோட்டிரட்டி
வண்டாருநீப மலர்மாலைசூடி மயிலில்வரக்
கண்டாலுமந்தக் கனவிற்குபீரெனக் காண்கின்றதே. (கஎஅ)

கனவைப்பழித்தல்.

அண்டருக்காகு மமுதைக்கையாலள்ளி யள்ளிமிக
வுண்டதுபோலக் கனவுகண்டாலு முடன்விழித்தாற்
கொண்டபசிதணி வாமோசெந்தூரனைக் கூடுதல்போற்
கண்டகனவிற் பயனேதுகண்ணெதிர் காணனன்றே. (கஎ௯)

வரவுநினைத்திரங்கல்.

வேடிச்சிமைந்தர் விழையுஞ்செந்தூர்ச்சந்த வெற்பிலென்னைக்
கூடிப்பிரிந்தவர் வாராமலுள்ளங் கொதித்துமிக
வாடித்தவிக்கவிட் டாரிந்தமட்டுக்கும் வன்னெஞ்சரோ
வாடிகருமுன் வரு வேனென்றவார்த்தை யயர்த்தனரே. (கஅ௰)

சொன்னினைத்தயர்த்தல்.

கன்னல்வில்வேளொல்குஞ் செந்தூர்க்குமரக் கடவுள்வந்து
பொன்னவிர்கும்ப முலைமேற்சுணங்கு பொலியுமைய
முன்னநொக்தேன்றனைத் தோய்ந்தவங்காடலை தொட்டுமெய்யாச்
சொன்னசொற்பொய்க்கிலென் னுருயிர்வீணினிற் றுஞ்சுமன்றே. (கஅக)

தலைவன்பொருண்மேற்பிரிதற்கிசையாமைகூறல்.

தங்கமும்வெள்ளியு மாமிருவெற்புடைத் தானுமைந்தன்
செங்கமலாதனை வாழுஞ்செந்தூரன் திருமுன்பினிற்
கொங்கர்கன்னடர் முதலோரிடும்பொற் குவையினது
பொங்கமிருக்கப் பொருடேடிப்போதல் புதுமையன்றே. (கஅஉ)

பொருள்வயிற்பிரிந்ததலைவன்வராதலின்காரணங்கருதல்.

அன்போர்மிகுந்திருச் செந்தினங்கேள்வர்செல் லத்திசையி
லென்போலொருத்திகைச் சிக்கினரோவுழைத் தெய்த்தனரோ
பொன்போதுமட்டும்பெற் றுரில்லையோவரும் போழ்திதுவோ
வன்போங்குநெஞ்சரன் றேயென்னகாரணம் வந்திலதே. (கஅந)

தலைவன்போர்விழைந்தமைகண்டுபுலர்தல்.

தன்னந்தனிப்புகழ்ச் செந்தூர்த்தலைவர் தருவர்களை
முன்னந்தடிந்தனர் சாரணர்கூட்ட முழுதொழித்தார்
கன்னங்கறுத்த கலியாதியரைக் கறுவுகின்று
ரின்னஞ்சமர்விழைந் தாரெனத்தேறிநெஞ் சேங்கியதே. (கஅச)

போர்மேற்சென்றூர்வருமுன்னிகழ்வதுபுகலல்.

கார்மேனுலாம்பொழிற் செந்தூர்புரக்குநங் காவலர்முன்
சூர்மேற்பொருத சலிப்பின்றிநான்மறைச் சொன்னிறுவும்
போர்மேற்சென்றூர்வரு முன்னுன்பொறுப்பினும் பொற்புமுலை
வார்மேற்பணைத்து வளர்ந்தாவிசோர வருத்தியதே. (கஅரு)

தலைவன்போர்வெல்லுமாறுணர்தல்.

மடற்றுழைவாச மலியுஞ்செந்தூர்க்குகன் வானைமுட்டுங்
கடற்றுனைச்சூரனை மாயவெற்போடு கணத்தில்வென்று
ரூடற்றுனில்லைத்த பொருளென்னுநூல்பயின் றான்விழுங்கு
மிடற்றுளர்வேற வென்றிக்குமிள்கை வியப்பல்லவே. (கஅசு)

கருப்பக்குறிகண்டயர்தல்.

வாண்மெலிவின்றிய வீராதிவீரர் வணங்குஞ்செந்தூர்
வேண்மெலியாவென் முலைச்சூசுகங்கண் மிகக்கறுத்துத்
தோண்மெலிந்தாலிலைத் துத்தந்தழைக்கத் துவக்கியதாற்
சூண்மெலிந்தாரெனத் தோற்றுகின்றனினிச் சொல்வதென்னே. (கஅள)

கருப்பங்கண்டுவேத்தல்.

சந்தனமால்வரைச் செந்தூர்க்குருபரன் றந்தையுடன்
முந்தருண்மோன மொழிந்ததுண்டேலவன் மொய்ம்பணைந்து
வந்தகருப்பத்தில் வாழ்மகன்றனும் வழக்குள்ளதோ
வந்தரிபேற்றினு மென்பேறதிகநன் காய்ந்திடினே. (கஅஅ)

கருப்பவாதைக்கிரங்கல்.

பொருப்பன்னபன்னிரு தோளுடைச்செந்திற் புரவலன்மேல்
விருப்பமுற்றேங்கிய நாளுற்றதுன்பமு மெத்தநன்றே
மருப்பனிரீபமென் மார்புறத்தோய்தலின் வந்தடுத்த
கருப்பமுற்றுந்துன்ப சாகரந்தன்னைக் கருதிடினே. (கஅகூ)

மகப்பேற்றுமகிழ்ச்சி.

மாண்மகத்தாடிவர் செந்தூர்க்குமரன் மலர்க்கடப்பந்
தோண்மகரந்தமென் றெய்யிற்பயோதரந் தோய்ந்ததனுல்
வாண்மகரக்கொடி யானஞ்சினுன்முத்தி வாழ்வுநல்கு
மாண்மகப்பேறடைந் தேன்றுன்பம்யாவு மகன்றனவே. (ககூ0)

பாலனைப்பழித்தல்.

மாடிவர்வார்தர வந்தசெந்தூரர்முன் வைதுமிக
வூடினுங்கெஞ்சி யுடன்பாடுவேண்டின ருன்னைப்பெற்றிட்
றூடியகொங்கைய ளாயபினுன்சென் றருகுறினு
நாடிநின்றோர்மொழி யும்பகராது நடந்தனரே. (ககூக)

மனத்தேற்றங்கொள்ளல்.

அழலைப்புனைந்தகை யார்மைந்தர்செந்தி லதிபரம்பொற்
கழலைப்பணியினு நத்துகிலார்முனங் காதலுற்றென்
குழலைக்கரங்கொண்டுங் கோதுவரென்கைக் குழந்தையதன்
மழலைச்செவ்வாய்திறந் தாலந்தநாளின்னம் வந்துறுமே. (ககூஉ)

பரத்தையர்க்கருதியேங்கல்.

முக்கணர்க்குங்குரு வானசெந்தூரர்முன் மோகமிகுத்
தெக்கணத்துந்தமி யேனகத்தூடற் றிருந்தவரென்
னெக்கலைப்பிள்ளை யுருவாகவேண்டி யொதுங்குதலுஞ்
சக்களத்திப்பகை கோடாநுகோடி தழைக்கின்றவே. (ககூ௩)

பரத்தையர்க்கறுவல்.

மின்னைவிட்டாலென்ன வேல்விட்டுச்சூரனை வென்றசெந்தூர்
மன்னைவிட்டாரையு நாடேனைநாளு மருவுமவன்
பொன்னைவிட்டாயிரம் பூங்கோதைமார்முலைப் போகமயின்
றென்னைவிட்டானவர் தம்மைவிட்டென்னிடத் தெய்தினன்றே. (௧௯௪)

தூதியைமறுத்தல்-

மாதுநல்லாரிடத் தாடவர்சென்று மறுகலுண்டென்
றேதுகண்டாயில்லை நீமாதன்றோமறை யிரிரண்டு
மோதுசெந்தூர னுரைத்தானென் றுள்ளகத் தொல்கலின்றித்
தூதுவந்தாயங்கு சென்றானன்றாமெனச் சொல்லுதியே. (௧௯௫)

பாணனைப்பழித்தல்.

சேணளவோங்கிய சந்தவெற்பார்திருச் செந்திற்பிரான்
றாணையந்தேனவ னென்முலைவேட்டனன் றோய்ந்திருந்தோம்
பாணநிற்கண்டில னீசொல்லல்போதுநின் பாங்கிதுவோ
வீணர்நிற்போலுள ரோவந்தவாறு விரைந்துசெல்லே (௧௯௬)

பாணனைப்புகழ்தல்.

ஆனைக்குக்கட்டுண் டிசையுமின் னாரின்ப மார்ந்தபின்ன
ரேனைக்குக்கோனை பகருஞ்செந்தூர ரெனக்கினிய
பூனைக்கொடுத்தனுப் பிச்சிலமாற்றம் புகலவிட்ட
வீணைத்திறன்மலி பாணன்பொறுமை மிகவுநன்றே. (௧௯௭)

விதிப்புகழ்ச்சி.

பரைதருமைந்தரைச் செந்தூரிற்கண்டு பணிந்தவர்தம்
விரைதருசெங்கடப் பத்திச்சைமேலிட்டு மேவியப்பா
லுரைதருமெய்ப்புகழ்ச் சிரோங்குமாறென் னொருதலையில்
வரைதருநான்முகத் தோனென்கைநாடோறும் வாழியவே. (௧௯௮)

தற்புகழ்ச்சி.

[illegible]ன்செய்தவேலுடைச் செந்தூர்க்குமர னொளிர்கடப்பந்
தேன்செய்தமார்பினிற் சேரவுஞ்சிந்தைச் செழுமலரில்
வான்செய்தகீர்த்தியொ டன்னோனுலாவுமெய் வாழ்வுறவு
நான்செய்தமாதவ மார்செய்துளாரிந்த நானிலத்தே. (௧௯௯)

அயற்பழிப்பு.

செல்லார்க்குஞ்சோலை திகழ்செந்தில்வேலன் றிருவருளை
வல்லாளன்கோபுரத் தோர்கிளிகூறிய வண்புகழா
னெல்லாருமங்கதத் தோளாறிரண்டு மிறுகநித்தம்
புல்லாதமங்கைய ரேன்பிறந்தாரிந்தப் பூதலத்தே. (௨௦௦)

## தலைவிபாங்கிமுற்பகர்வன.

மோகமுற்றமைமொழிதல்.

பாகநயத்தமிழ்ப் பாவலர்கூட்டம் பரவுசெவ்வேட்
கோகனகத்திரு வாழ்செந்தில்வீதியிற் கும்பிடப்போய்
மோகமுற்றேனவ னெஞ்சொடுமானமு மூரிக்கச்சு
மேகலையுங்குரு குங்கவர்ந்தானடி மெல்லியலே (உ0க)

வருந்திக்கூறல்.

காயுங்கதிர்நிகர் வேற்செந்திலான்றனைக் கண்டதனு
லாயும்புலமைகற் பார்கையினேலையொப் பாகிப்பெற்ற
தாயுந்தமருஞ் சகத்தோருமேசத் தயங்குமென்னை
நீயுஞ்சினந்துரைத் தாலென்செய்வேனடி நேரிழையே. (உ0உ)

உடன்படுத்தல்.

புழைக்கரத்தான்றுணைச் செந்தூரன்சந்தப் புயநிரையிற்
பிழைக்கருமோகமுற் றேனவன்பாற்சென்றென் பெற்றியுரைத்
தழைக்கைமட்டோது மவையாவிற்குந்துணை யாமுதவி
யிழைக்கைநின்றன்கடன் காணுயிர்போவு மிகுளைமின்னே. (உ0ங)

உத்திவினுதல்.

பத்தருக்காதர னுஞ்செந்தில்வேலன் பவனியிடை
யெத்தனைமாதர்க ளோவந்துநின்றன ரென்னருமைச்
சித்தமட்டுங்கவர்ந் தான்பதிலாயவன் சிந்தையினைக்
கைத்தலநெல்லிக் கனிபோற்கொண்மாறு கழறுதியே. (உ0ச)

தூதுசெல்லென்றிரத்தல்.

மாகத்துமங்கையு மால்வரைச்சாரன் மறக்கொடியு
மோகத்துடன்புண ருந்திருத்தோண்மையல் முற்றியநான்
சோகப்படுந்துய ரெல்லாஞ்செந்தூரன்முற் சொல்லினன்று
மாகத்துயிர்க்குயி ராயெனைக்காக்கு மருளன்னமே. (உ0ரு)

களிப்புஞ்சலிப்புங்கலந்துகூறல்.

அஞ்சனந்தீட்டிய கண்ணணங்கேயொ ரதிசயங்கேள்
செஞ்சதங்கைத்திருத் தாளானடந்தருட் செந்திலில்வாழ்
வஞ்சகனென்கன வூடுவந்தானொரு வார்த்தைசொன்ன
னஞ்சலென்றம்புயக் கைகாட்டினனனைந் தானில்லையே. (உ0சு)

தலைவன்சுபாவங்கூறல்.

தேராரும்வீதித் திருச்செந்தில்வேலனைச் சித்தரெல்லா
மாராதிக்குங்குரு நாதனனென்றேத்தினு மம்பருந்தும்
காரார்மென்கூந்தனல் லார்நெஞ்செலாங்கவர் கைக்குளிகைச்
சீராளனென்றிட லாமிதிற்பாவஞ் சிறிதுமின்றே. (உ0எ)

நாணுடைபெகர்தல்.

மாஞும்வெட்குங்கண் மயிலனையாய்செந்தில் வாழ்முருகோன்
மேனுவலற்கரு மாலடைந்தேனிட மேவியவன்
றேனுவுகாணுறுங் கைகளினுலெனைச் செய்தவித
நானுரைத்தாலுனைப் போல்வாருளமு நகைக்குமன்றே. (உ௦அ)

கவன்றுகூறல்.

பகைக்கும்வெஞ்சூரனைக் கொன்றசெந்தூரார்தம் பன்மலர்த்தார்
வகைக்கினைங்கும்புய மாறிரண்டிற்பெரு மையனுற்றுத்
தகைக்குமித்துன்பமு மல்லாதென்னேடொத்த தையனல்லார்
நகைக்கிலக்காயுநொந் தேனெந்தவாறினி நானுய்வதே (உ௦௯)

வெறுப்புக்காட்டல்.

முன்னமென்சொற்படி வந்தசெந்தூரர்பன் மோகமின்னுர்
நன்னலங்கண்டத ஞலோவல்லாதெந்த ஞாயங்கொண்டோ
வின்னம்வந்தாரிலை வந்திரந்தாலு மினியிசையேன்
கன்னல்வில்வேள்பதத் தாணைசொன்னேனுண்மை கண்டுகொள்ளே. ()

தன்மருளுணர்த்தல்.

பூணுரமென்னத் தலையோட்டையென்பைப் பொறியரவைப்
பேணுதிமைந்தனைச் செந்தூர்புரக்கும் பிரபலனைக்
காணுதபோதுள்ள கோபமெல்லாமவற் கண்டவுடன்
ளுணுதுவந்தவன் சொல்வழிதோய்வுறுந் தொன்மையென்னே. (உ௧௧)

வியந்துகூறல்.

காமனைச்சுட்ட பெருமானுதற்கட் கனலுதவு
மாமகவாயசெந் தூர்க்குகவேளிள மங்கைநல்லார்
கோமளக்கொங்கை பலகோடிதோய்ந்தலைக் கொட்டொலிகேட்
டேமமுலை மணியுமன்னுர்க்குங்கை யீந்ததென்னே. (உ௧உ)

அழுக்காறுகாட்டல்.

புல்லுண்பவற்றையுங் கொன்றுண்ணும்வேடர் புனக்குடிற்பா
லொல்லுஞ்சிறுமிக் குவந்தசெந்தூரன்மற் றேருயிரைக்
கொல்லுங்கொடிதில் குலப்பேதையாமெனைக் கூடிலனே
லல்லும்பகலு மறிபாருட்சிக்கி யழுந்துவனே. (உ௧௩)

தூதிவந்தமைசொல்லல்.

ஆதியுமந்தமு மானசெந்தூர னனுப்புமொரு
தூதியைநேற்றிங்கு கண்டேனங்கேவரச் சொல்லிநின்று
ளேதிவன்றாதுவிட் டான்றந்தைதூதன்றே ரேந்திழைபா
லோதியதன்மை மறந்தான்கொலோவென் றுரைத்தனனே. (உ௧௪)

வைகறைக்கிரங்கல்.

நாவலந்தீவின் முகம்போல்வதாஞ்செந்தி னன்னகரிக்
காவலனேற்றிர வூடுவந்தென்னைக் கலந்துமகிழ்ந்
தாவன்முற்றுந்தவிர்க் கத்துணிந்தான்முற்று மாவதன்முற்
சேவலம்புள்ளொலி குக்கூவென்றூர்த்தலிற் சென்றனனே. (உகரு)

புதுமைகண்டுரைத்தல்.

குன்றங்கடோறுங் கொளுநேயமுற்றுங் குலவு செந்தூர்
மன்றந்தனிற்செலுத் துங்குகவேளிங்கு வந்துவந்தியா
னன்றன்றுகொண்மய லன்றேதணித்து மதுதவிரா
தொன்றன்பினென்றுதித் தோங்கும்புதுமையென் னொண்டொடியே. ()

வலிவினாதல்.

கஞ்சமுங்காவியும் பூத்தபல்வாவிக் கவின்செந்திலான்
குஞ்சரமாமுகத் தைங்கரன்றம்முனெற் கூடிச்சற்று
நெஞ்சகத்தன்பிலர் போற்பிரிந்தானென நெட்டுயிர்க்குஞ்
சஞ்சலந்தீர்க்கவல் லாயல்லையோபசுந் தாழ்குழலே. (உ.கஎ)

மருத்திடுகூறல்.

முச்சிலொன்றேந்துமன் றேசெந்தில்வாழு முருகன்வந்து
பச்சிலையொன்றெடுத் தான்விரித்தானதிற் பத்திரமா
வைச்சிருக்கும்பொடி யைத்தூவினன்சற்று வாயிலிட்டான்
கச்சிறுக்குங்கொங்கை யாரையொத்தேனடி காரிகையே. (உகஅ)

நாட்சென்றமைக்கிரங்கல்.

தூதளங்காய்த்துணை போன்முலைதோன்றத் துவக்குமன்றே
காதலுற்றேன்றிருச் செந்தூரன்மேவின்று கன்னல்விற்கைப்
பாதகன்றூனு மவன்மாதுஞ்சூடும் பருமகுட
மாதல்கண்டுஞ்சிறி தாயினுநாடில னன்புவைத்தே. (உகக)

நகக்குறிப்புகழ்ச்சி.

ககத்துயர்தோகைப் பரிச்செந்தில்வேலன் கருணையினன்
முகத்தலுஞ்சேர்ய்தன் முதலாம்பிறவு மொழிவருஞ்சீர்
தகப்பெருகின்பந் தரத்தக்கவேயவன் றன்கரத்து
நகத்தடை யாளமொப் பாநின்றுபேரின்ப நல்கலன்றே. (உஉ0)

தலைவன்பிழைப்புரைத்தல்.

பனியாயகொங்கைநல் லார்மயல்கூர்ந்து பவனியிடை
நனியாயச்செய்து நறுநீபமாலிகை நல்குகிலான்
செனியார்நுதற்கட் பொறியாகித்தோன்றுந் திருச்செந்திலா
னனியாயஞ்செய்யினுங் கேட்பாரிலையடி யாரணங்கே. (உஉக)

பேற்றமையுரைத்தல்.

கலியனஞ்சும்படிக் காகலமாயிரங் காட்டுஞ்செந்தூர்
வலியவன்றோகை மயிலில்வந்தான்பல மாதருள்ள
நலியவில்வேள்கணை யெய்தானவரிடை நானுநின்றேன்
மலியருளாலழைத் தாங்களித்தானொரு மாலிகையே. (௨௨௨)

சோற்றவாறுணர்த்தல்.

மாகர்தங்கூட்ட மகிழ்ந்தேத்துஞ்செந்தின் மகிபனருட்
டாகமுளார்பலர் நின்றேங்கவேபத் தடம்புயத்தின்
மோகம்விடேனெதிர் தோன்றித்தன்வாயிரு மூன்றுங்கொண்டு
சோகமுற்றேனுனைத் தோயாதிரேனெனச் சொற்றனனே. (௨௨௩)

மேலிடுவிளம்பல்.

பாதியுடம்பிற்பெண் வைத்தார்புதல்வன் பசியபெருஞ்
சோதிமயூரப் பரிச்செந்திலான்முனந் தோகைநல்லார்
நீதிவழிவந் தணைந்தானிங்காளி னெடியதெரு
வீதியிற்றொட்டிழுத் தானென்னகாரண மெல்லியலே (௨௨௪)

உரிமைக்காரணம்வினவல்.

ஆழாழித்தெண்டிரை யார்க்குஞ்செந்தூரி லறுமுகவ
னேழாம்விழாப்பெருங் கூட்டத்துளியான்சென் றிடினுமென்மேற்
றாழாவிரக முறுமாறுணர்த்தலென் றன்னதுமுன்
னூழாவவனரு ளாகலப்பாவுணர்ந் தோதுமின்னே. (௨௨௫)

வஞ்சனைவிலக்கல்.

பொன்னோங்கல்வில்லி யுதவும்பிரான்செந்திற் புங்கவனன்
றென்னோடுரைத்ததெல் லாமுரைத்தேனென் னிகுளையென
நின்னோடுரைத்தமை நீயுரையாமைநன் னீதிகொல்லோ
மின்னோடுறழிடை யாய்வஞ்சமியாவையும் விட்டுவிடே. (௨௨௬)

சின்னங்கூறல்.

சேலாரும்வாவித் திருச்செந்திற்சந்தச் சிலம்பிலென்னை
மாலாகச்செய்தவற் கண்டேனென்றாய்வென்றி வாரணமு
நீலாங்கத்தோகைநன் னீழலுஞ்செச்சையு நீபமுங்கை
வேலாயுதமுமுண் டேலவன்றானென்னை மெய்ம்மொழியே. (௨௨௭)

தன்னிசைவியம்பல்.

தென்னையுமாவுங் கமுகுஞ்செறியத் திகழ்ந்தசெந்தூர்
தன்னையென்றென்றும் புரக்கின்றவேற்கைச் சரவணவே
ளென்னையங்கேவரச் சொன்னானென்றாயவ னிங்குவந்தெ
னன்னைமுன்னரு மவர்காணுறும லணையினன்றே. (௨௨௮)

### இகல்வினவல்.

கஞ்சமொன்றெய்யிற் சகித்துமற்றோர்கணை கையிலெடுத்
தஞ்சம்பனெய்யுமுன் றோயுஞ்செந்தூர ரடிபணிந்து
கெஞ்சன்புகண்டு மிரங்குகிலார்மெல்லக் கிட்டியவர்
நெஞ்சங்கல்லாகிடச் செய்தாரைத்தேர்ந்து நிகழ்த்தணங்கே. (உஉகூ)

### அணித்திறம்வினவல்.

வன்னியுங்கொன்றையு மத்தமும்பூத்தவிர் வார்சடையார்
கன்னிதன்பாற்றரு மைந்தர்செந்தூரரென் காதன்மறைத்
தன்னியர்தோளும் புணருமப்பேதைக் கவாவடைந்தா
ரென்னினுமிக்கழ குள்ளாள்கொலோபக ரேந்திழையே. (உகூ0)

### தன்னிறைதேரித்தல்.

சிவகுருவாகித் திருச்செந்தில்வாழுயிற் சேவகர்தம்
பவளவெற்பன்ன புயத்தாசைகண்டெனைப் பற்றிக்கொண்டா
ரிவளவுநாளு மொரேமனதாகி யிருந்தனமே
லவர்வெறுத்தேசினு நான்மறவேனடி யாயிழையே. (உகூக)

### முன்னிலைப்புகழ்ச்சி.

மாயம்பெருத்தவெஞ் சூர்மார்பைக்கீன்றும்பர் வாழவைத்த
தூயன்றுகளில்செந் தூருடையான்சிவன் றோத்திரிக்கும்
வாயன்றனைப்புணர்ந் தானந்தவாரியின் மன்னுமென்ற
னேயங்களுக்குன்னை யன்றிமற்றூர்துணை நீணிலத்தே. (உகூஉ)



## தலைவிதலைவன்முற்பகர்வன.

### உள்ளக்கவர்ச்சிக்கிரங்கல்.

புன்னையிற்பூந்துணர்த் தேனுறைனந்தம் பொலிந்தசெந்தூர்க்
கன்னைமுற்கூறு மொருநான்குமாகு மயிற்கந்தனே
பொன்னைமுத்தாரத் துடன்பூணுங்கொங்கை பொதுமநிற்கு
மென்னைவிட்டுள்ளங் கவர்ந்தேகனீதிக் கிசைந்ததன்றே. (உகூகூ)

### நியாயங்கூறியுடன்படுத்தல்.

மான்மகளைத்திரு டுந்திருடாவென வையுமவன்
முன்மகிழும்படிக் கும்புரிந்தாய்நின் றடம்புயத்தின்
மேன்மயல்கூரு மெனைச்சேர்ந்திடாது வெறுக்கைநன்றோ
வேன்மகிபாதிருச் செந்தூரின்மேவிய வித்தகனே. (உகூச)

அச்சுறுத்தல்.

அன்பழியார்மிருஞ் செந்தூர்புரக்கு மறுமுகவா
முன்பழிக்கஞ்சிய நீதிகெடாதொரு முத்தநல்காய்
வன்பழிக்குங்கணைக் காமன்செய்தீமை மலிந்ததந்தோ
வென்பழியேற்றுக்கொள் ளாதேபெண்பாவ மெளிதல்லவே. (உ௩௫)

வீரங்கூறல்.

குன்றேறுறழ்வன நின்றோளுமென்னது கொங்கைகளு
மென்றேறுவாரவற் றிற்காறிலொன்றிவை யென்னினும்போர்
வென்றேங்குகின்றவை யாதோவறிவம் வெருண்டொதுங்கே
னன்றோர்ந்துளார்புடை கொண்டாடுஞ்சீர்ச்செந்தி னாயகனே. (உ௩௬)

பாரெனவிரத்தல்.

சங்கரற்குங்குரு வாகிச்செந்தூரிற் றழைக்கும்வைவேற்
புங்கவனேமதன் பொல்லாங்குமிஞ்சிப் புலர்ந்தடைந்தேன்
செங்கனற்கண்ணிரு மூன்றையுமுடித் திருவருட்சீர்ப்
பங்கயமன்னகண் பன்னிரண்டானன்கு பார்த்தருளே. (உ௩௭)

தழுவெனவிரத்தல்.

பெண்ணுளைப்பாகம்வைத் தார்க்கொருதாரகம் பேசியப்பால்
விண்ணுடரைப்புரந் தாண்டுசெந்தூரிடை மேயவனே
பண்ணுர்மலர்க்கணைக் கஞ்சாமலென்னைப் பரிந்துனது
கண்ணாரப்பார்த்தனை கையாற்றழுவிக் கருணைசெய்யே. (உ௩௮)

வஞ்சர்யாரெனவினவல்.

தாயொருவேற்படை யாகப்புனைந்து தமிழ்ப்புலவர்
மேயொருங்கேத்தெழிற் செந்தூரில்வாழும் விறற்குகனே
நீயொருவார்த்தையுஞ் சொற்றாயிலையுன்னை நேடியென்றன்
வாயொருகோடிசொற் சொல்கின்றதாரிதில் வஞ்சகரே. (உ௩௯)

கனவாடல்வேண்டல்.

பனகமுண்டார்க்கு மயிலூர்ந்துசத்திப் படைக்கரங்கொண்
டனவரதந்திருச் செந்தூரில்வாழு மறுமுகனே
யுனதகலத்தல ருங்கடம்பாரத் துரிமையுற்றேன்
கனவிடத்தேனுமென் னெண்ணமொத்தாடல்கள் காட்டுதியே. (உ௪௰)

நனவாடல்வேண்டல்.

பனவர்க்கோராதர மாஞ்செந்தில்வாழயிற் பண்ணவனே
சினவிற்கரத்து மதனுன்மெலிந்து தியங்குமென்னைக்
கனவிற்கலந்துங் கெடுத்தாயவ்வாறினிக் கண்ணறிய
நனவிற்புணரினல் லாலுய்கிலேனித்த நானிலத்தே. (உ௪௧)

வசைநாணிக்கூறல்.

வளையுங்கலையு மிழந்தறியாப்பல மாதர்வசை
விளைகின்றதான்மெலிந் துள்ளேனைச்சேர்ந்து விதியொருக்காற்
றளைகொண்டவாறவன் றம்பியுமெய்தத் தயைபுரிவா
யளையுண்டவாயன் மருகாதிருச்செந்தி லாதிபனே. (௨௪௨)

இசைநலம்பகர்தல்.

அசையாப்பெரும்புகழ்ச் செந்தூரில்வாழு மறுமுகநின்
மிசையாவலுற்றத னுற்பலமாதர் வெகுண்டுரைக்கும்
வசையாவுநீயரு ளாலெனைக்கூடி மகிழ்ந்திடுநா
ளிசையாகிமூவுல கிற்குமப்பாலு மிலங்குமன்றே. (௨௪௩)

பிழைப்பொறுப்பிரத்தல்.

அன்னையொத்தும்பரை யாதரிக்குஞ்செந்தி லாயடியா
ளுன்னையொப்பாரு முளாரெனநாடில னுண்மைகண்டா
யென்னைகுற்றங்க ளிழைத்தாலுநீபொறுத் தின்பநல்கி
மின்னைவெட்கும்படி செய்யிடையார்புகழ் வீறருளே. (௨௪௪)

இயல்பல்லவென்றல்.

கன்னன்பொருவு கொடையாளர்வாழ்செந்திற் காவலனே
முன்னம்பவனியிற் கண்டுனதாசை முதிர்ந்ததனாற்
கின்னம்பெருத்து மதனாலளவில் கிலேசமுற்றே
னின்னங்கருணை புரியாதிருப்ப தியல்பல்லவே. (௨௪௫)

நோந்தமைநுவலல்.

கொம்பானைச்செந்தி னகராதிபாசந்தக் குன்றுடையாய்
நம்பாரறிவரி யாயடியாளுன்னை நாடிமத
னம்பான்மெலிந்துநொந் தேனையகோவினி யாற்றுகில்லேன்
வம்பாயிறக்கவி டாதேயென்பாற்சற்று வந்தருளே. (௨௪௬)

புகழ்ந்துடன்படுத்தல்

நின்னதுசீட னருட்பாலுண்டுய்ந்து நிலவுமுனி
சொன்னசொல்லாலுய்ந்து ளானிடைமாதரிற் றூறிருந்தா
னென்னன்மெய்யாகி லெனக்காவடிவமொன் றெய்திவர
லுன்னருட்சீர்க்கரி தோசெந்தின்மேவிய வுத்தமனே. (௨௪எ)

பழித்துடன்படுத்தல்.

காங்கையனைய நிறவேடர்கண்டு கறுவவொரு
வேங்கையுருவமு மானுயென்றூர்ந்துநின் வேட்கையுற்றேன்
நீங்கையடையத் தகுமோவிளப்பஞ் சிறிதுமின்றூ
மூங்கையுஞ்செந்தமிழ்ப் பாடுஞ்செந்தூரின் முருகையனே. (௨௪அ)

காரணங்கூறல்.

ஞானங்காளுனைத் தோத்திரஞ்செய்துடன் றாறுதற்குங்
காணநின்றிருக் கண்ணுதலானைக் காதலித்து
மாரனுக்கஞ்சியென் னெஞ்சேங்கச்செய்வது மற்றுளதோ
கூரயிற்கைக்குக னேசெந்தின்மேவுங் குணக்கொண்டலே. (௨௪௯)

வஞ்சமெடுத்துக்காட்டல்.

ஆடானைமஞ்சை யெனுமூன் றிலேறி யயிலணிந்து
தாடாண்மைச்செந்தி னகர்புரப்பாயிரு தாரமன்றிக்
கோடாதுகோடி மடவார்க்குமின்பங் கொடுத்துளநீ
வாடாமலென்னைவைத் தாயில்லையேயிது வஞ்சகமே. (௨௫௦)

நியாயங்கேட்டல்.

பானற்கருங்கண் ணுமைபாகர்கெஞ்சிப் பணியக்கண்டு
மோனத்தைவிண்ட முருக்கிதழ்த்தேனை முருடரிடு
மேனற்கொடிக்களித் தாயெனக்கிவி விளப்பங்கொல்லோ
வானத்துளார்புகழ் சீர்ச்செந்தின்மாநகர் வாழ்கந்தனே. (௨௫௧)

ஈரமின்மைக்கிரங்கல்.

தேன்சொலென்னக் கிளர்கூந்தல்கண்டுநின் கிள்ளையின்சொற்
சீரன்னவாய்திறந் தோலிடற்கேட்டுந் திருவுளத்தி
லீரமோசெள்ளள வேனுமுற்றுயிலை யென்னசெய்வே
னீருவிச்சந்த வெற்பார்செந்தூரிடை நின்றவனே. (௨௫௨)

நிந்தாத்துதிகூறல்.

நித்தியப்பித்தன் மகனென்றுமாமலை நீலிமுலை
நத்தியவாயனென் றும்புனம்பார்த்த நரையனென்றும்
பத்தியுளாரிடஞ் சொற்றேன்கொலோவெனைப் பார்த்திலர்போற்
சத்திவைவேலுடன் செல்கின்றதேன்செந்திற் சண்முகனே. (௨௫௩)

பின்வரவுவினுதல்.

அன்னந்துயிலும் வயற்செந்திலாயெண்ணி லாயிழைமார்
முன்னஞ்சிகியில்வந் தாயென்னைமாத்திர மூரிமதன்
சின்னம்படுத்தவிட் டுத்திருக்கோவிற்குச் செல்கின்றநீ
யின்னம்பவனி வருநாளையேனு மியம்பினன்றே. (௨௫௪)

போய்நினைந்தயர்தல்.

ஈராறுநான்கும் வயதென்னவோதியென் றென்றுமெனத்
தாராளமாவொரு வமந்தனுக்கிந்தருள் சங்கரர்சேய்
நீராதலானுஞ்சொ னிச்சயமோவென நெஞ்சயர்ந்தேன்
போராண்மைச்செந்தி னகராளவந்த பெருந்தகையே. (௨௫௫)

போய்யுமெய்யுங்கலவாமைவேண்டல்.

மொய்யுலவும்பொழிற் செந்தூரநின்மயன் முற்றியபின்
மையுண் ணுமாவடுக் கண்ணியர்கூறும் வசைப்பெருக்கா
னையுமென்றன்னெடு நாணுதடிக்கடி நாடொறுநீ
பொய்யுமெய்யுங்கலந் தோதாமைவேண்டிப் புலர்ந்தனனே. (௨௫௬)

நம்பிக்கைகூறல்.

மையென்னவந்து பொருஞ்சூரனைக்குத்தி மாய்த்தவைவே
லையென்னவாழ்த்துநர்க் காஞ்செந்திலாய்நின் னலர்கடம்பின்
மொய்யென்னவாழப்பெ றேனெனுநீமுன் மொழிந்தவெல்லா
மெய்யென்னநம்புகின் றேனெந்தவாறு விடியுங்கொலே.

விதிநினைத்திரங்கல். (௨௫௭)

காதார்விழிச்சிவை பாகத்தர்சென்னியிற் கண்ணிலொத்துஞ்
சீதாரவிந்தத் திருவடியாய்செந்திற் செல்வநின்மால்
வாதாடுமாரன் வசஞ்செய்யநொந்து மறுகலுற்றேன்
வேதாவிதித்த விதியோவிவ்வாறு விளைத்ததுவே. (௨௫௮)

மறவேலெனல்.

முன்னைவிரதப் பயனுலெனைப்பெற்று முத்தமிட்ட
வன்னையைத்தோழியர் தம்மைமற்றேரை யயத்ததுபோ
லுன்னைச்சிறிது மறவேனி துண்மையி லுண்மைகண்டா
யென்னைமறந்துவி டாதேசெந்தூரி லிருப்பவனே. (௨௫௯)

இன்பங்கைப்போவெனல்.

பொன்னின்குடமிரண் டன்னமென்கொங்கைப் புனக்குறத்தி
தன்னின்பமுற்றது மல்லாமன்மற்றுந் தரையிலுள்ள
மின்னின்புடையனை யார்பலர்க்கின்பம் விளைத்தவுனக்
கென்னின்பங்கைக்குக்கொ லோசெந்தின்மேவு மிறையவனே. (௨௬௦)

பிறர்க்கஞ்சிக்கூறல்.

பூமியெங்கும்புகழ் செந்தூர்புரக்கும் புரவலனே
நீமிகத்தொந்தர வேன்செய்கின்றாய்நன் று நேற்றுவந்து
சாமியென்றென்னை யறியாமுன்றேட்டனை கண்டுகொண்டான்
மாமிபொல்லாதவள் காணன்றியூரும் வசைசொல்லுமே. (௨௬௧)

மானமிக்குரைத்தல்.

சீதையின்முத்தெறிக் கும்பணைச்செந்திற் சிறுவவென்னைப்
பாதையிற்கண்டுடன் றேட்டிழுத்தாய்பலர் பார்த்திகழும்
வேதையுண்டாமென் றறியார்கள்போலிவ் விதஞ்செய்ததாற்
பேதையர்தம்மொடு நீபிறவாமை பிறங்கியதே. (௨௬௨)

போய்யூடல்காட்டல்.

குன்றைத்துளைத்துக் கடலைக்குடித்துயர் கொற்றவைவே
லொன்றைப்புனைந்தசெந் தூர்க்கந்தரேயுள் ளுரிமைமிருத்
தின்றைக்குமெல்லச் சருவுகின் றீர்வெட்க மில்லைகொல்லோ
வன்றைக்குவந்தவள் பாற்சென் றிடாதிங் கடுத்ததென்னே. (உகூங)

சேட்டெடுத்தியம்பல்.

பூட்கைப்புகர்முகப் புத்தேள்பிற்றோன்றும் புகழ்ச்செந்திலீர்
கேட்கையிற்சற் றுகல் கிர்சினந்தான்மெல்லக் கெஞ்சிக்கொள்வீர்
வாட்கைவல்வீரர்விண் ணோர்முனிவோர்கவி வாணரன்னர்
வேட்கையெவ்வாறருள் வீருள்வீரென்கை மெய்ம்மையன்றே. (உகூச)

கோடுமைகூறல்.

சட்டியிற்சூரனைக் கொன்றுசெந்தூரிற் றலைமையுற்றீர்
கட்டிமுத்தந்தரிற் கொள்வீர்பொன்கேட்கிற் கடக்கநிற்பீர்
கிட்டிவந்தாலுமெட் டாதோடுவீரிவை கேட்டுமுன்னாள்
செட்டியென்றோர்பெய ரிட்டார்வல்லோரிற் சிறந்தவரே. (உகூரு)

ஏற்றமின்றேனல்.

செவ்வானைமாமுகத் தான்றுணையாய்த்திருச் செந்திலில்வந்
தொவ்வார்தம்மாவியுண் டருமக்கேமைய லுற்றுருகி
வெவ்வாதனைப்படல் கண்டணைந்தீர்பின் வெறுத்தவர்போ
லிவ்வாறுவாட விடுவதனாலுமக் கேற்றமின்றே. (உகூசா)

எண்ணவேற்றுமையாதேனல்.

உம்மையல்லான்மற் றொருவரைச்சிந்தையி னுள்ளுமிவர்
செம்மையுள்ளாரென்று நாடாதவென்னைச் சினந்துசில
வெம்மையவாய மொழியுஞ்சொற்றீரெண்ணம் வேறுளதோ
பொய்ம்மைகொள்வாருண ராச்செந்தின்மேவிய புண்ணியரே. (உகூஎ)

சொற்பிறழ்ச்சிவினவல்

கானிற்குறத்தியுங் காவகத்திந்திரன் கன்னிகையுந்
தேனிக்கவாழுந் திருச்செந்திலீர்மிகத் தேம்புமென்பா
லானிக்குமுன்வரு வேனெனநீரன் றறைந்தமொழி
யேனிப்படிப்பிறழ்ந் திரிதனற்பய னேதுமக்கே. (உகூஅ)

நீங்காமைவேண்டல்.

கோங்காரிளமுலைக் குஞ்சரியுங்குறக் கோதையுந்தேர்
பாங்காளராந்திருச் செந்தூரரேயிச்சை பற்பலவு
மேங்காமலென்றற் குதவாவிடினுமென் றென்றுமென்னை
நீங்காதிருக்கி லதுபோதும்போது நிசச்சொலிதே. (உகூகூ)

பிரிதற்கிசைவின்மைகூறல்.

தெரியற்கடம்புங் குரவமுஞ்செச்சையுஞ் சேர்த்ததிண்டோட்
குரியசெந்தூர்க்கந்த ரேயும்மைய்யதின முன்னியணைந்
தரியநல்லின்ப மயிலாதிருப்பதற் கஞ்சுமென்னைப்
பிரியத்துணிந்தவர் போன்றுரைத்திரென்ன பெற்றியிதே. (உஎ௦)

ஆணையறிவுறுத்தல்.

வீணை வல்லாருந் தமிழ்ப்பாவலரு மிகுத்தசெந்திற்
றூணையமிட்ட தகையுடையீர்முன் றனித்தொருநா
ளேணையிற்பிள்ளை யெடுத்துமுன்னேவரு மென்றலைதொட்
டாணையிட்டுச்சொன்ன சொல்லும்பொய்யாகி லதிசயமே. (உஎக)

காலங்கருதிக்கூறல்.

சீலத்தவத்தர் குழாங்களிகூர்திருச் செந்திலில்வாழ்
வேலப்பரேயென்னை யோவாதுசந்தத மேவியநீ
ராலத்தினுங்கொடி தாகினைத்திரிவ்வ ணுக்கியதோர்
காலக்கொடுமையை விட்டும்மைநோவக் கணக்கில்லையே. (உஎஉ

மிகைபொருதுரைத்தல்.

கூற்றுவன்றன்னைமுன் கொன்றூர்பயந்த குழவியெனப்
போற்றுநர்க்கும்பய னல்கிச்செந்தூருறை புங்கவரே
யாற்றுகிலாரொத் தடியாளையின்பத் தழுத்தும்வண்ண
நேற்றுவந்தேகியு மின்றும்வந்திரிது நீதியன்றே. (உஎ௩)

குறைபொருதியம்பல்.

சீர்த்தியின்மிக்கசெந் தூர்புரந்தும்பர் சிறைதவிர்க்குங்
கூர்த்தனிவேற்படை கொண்டதிண்டோளுடைக் கொற்றவரே
பூர்த்தியதாமைய லுற்றேனுக்கின்பப் பொலிவருளக்
கார்த்திகைமாதப் பிறைபோலத்தோன்றலென் காரணமே. (உஎச)

கைந்நலம்பகர்தல்.

மைதொடுங்கண்ணிய ராடுஞ்செந்தூர்ச்சந்த மால்வரையி
னெய்தொடும்வேல்கொடு நின்றவனேயின்று நேற்றும்வந்து
மொய்தொடுமென்மலர்க் கூந்தலவிழ்தர முத்தமிட்டுன்
கைதொடப்பெற்றபின் னேமதவேளென்றன் காழேற்றதே. (உஎரு)

மெய்ந்நலம்பகர்தல்.

சீரேய்ந்தசெந்திற் பதியாளுஞ்சண்முக தேசிகரே
நீரே துவித்தைசெய் கின்றீர்வெஞ்சூரன்முன் னேர்விடுத்த
போரேவனைத்து மணுகுமுன்றியப் பொடித்தவுடல்
கூரேவனையகண் ணூர்கொங்கைதோயிற் குளிர்கின்றதே. (உஎசு)

உவப்புக்கூறல்.

கோகனகத்தடஞ் சூழுஞ்செந்தூரிற் குமரநிற்போன்
மோகவினைதவை போகின்றன்முன் முகுந்தனயன்
மாகமதிக்குடை யோனென்றுளாரிரு மங்கையருன்
பாகமுறப்புரிந் தார்புணர்ந்தாருணர் பண்பறிந்தே. (உஎஎ)

தன்னலம்பகர்தல்.

பன்னருஞ்சீர்திகழ் செந்தூரநின்றிருப் பார்வையெய்தி
யுன்னடற்றேருளுட னென்முலைதோயுமுன் னொள்வளையார்
முன்னம்வெட்குற்றிடைக் தேனிந்தநாளென் முகக்களிப்போர்ந்
தன்னவர்காணுற நாணுகின்றாரிதொ ரற்புதமே. (உஎஅ)

தன்னைத்தாழ்த்தித்தலைவனையுயர்த்தல்.

உன்றனக்கென்றனைப் போல்வாரனேக ருலகிலுள்ளா
ரென்றனக்குன்னையொப் பாரிலைக்காணிவை யெண்ணிடிலென்
றன்றனைநின்றிருத் தோள்சேரச்செய்ததுன் றண்ணருளே
மின்றயங்குங்கதிர் வேலாசெந்தூர்வளர் வித்தகனே. (உ எகூ

தன்னையுயர்த்தித்தலைவனைத்தாழ்த்தல்.

ஏனற்புனத்துக் குறமாதுகொங்கைக்கு மேக்கறுநீ
யானத்துமாறிசை வாதலரிதன் றிருசுடர்ச்சீர்
வானத்தரையு மதியேனிற்காமுறல் வண்மைகண்டா
யீனத்தினர்மரு வாச்செந்தின்மேவு மிறையவனே. (உஅ௦)

கள்ளங்கண்டுணர்த்தல்.

வள்ளத்தனத்திரு மங்கைநல்லாருடன் வாழ்ந்துமெள்ள
மெள்ளத்தொடர்ந்தென்னை யாண்டரங்காளின்று வேட்கைசற்று
முள்ளத்திலாதவர் போற்றிகழ்ந்திரிதென் னுடலஞ்சுங்
கள்ளத்தனமென் றறிவேன்செந்தூர்வளர் காவலனே. (உஅக)

திருத்திகூறல்.

பொன்னுடர்போற்றும் புகழ்ச்செந்தின்மேவும் புரவலனே
பன்னுடருப்புகல் சீர்ந்திலாய்வந்து பையப்பைய
நன்னுகரீக மொழிபேசிக்கூடி நயஞ்செய்கின்றாய்
நின்னுளெனும்பெய ரொன்றேயெனக்கு நிறைசெல்வமே. (உஅஉ)

நிட்டூரம்விலக்கல்.

தட்டுருவிக் கிரியுங்கரியுந் தவிடுபட
விட்டுதிர்த்தவை வேற்குகனேசெந்தின் மேவியுன்னை
நட்டோரறியநின் றேருள்சேர்ந்துளேனிவ்வ லையச்செய்யு
நிட்டூரமுன்றனக் காமோமுற்சொல்லை நினைத்தருளே. (உஅ௩)

### பெரியதுநல்கிச்சிறியதுபோற்றற்கிரங்கல்.

மேனைதன்பேரனென் பார்க்கருள்கூர்செந்தில் வித்தகனே
வானைமுற்றுளி மகள்வேண்டும்பொற்புய வாழ்வளித்தாய்
தேனையொப்பாமொழி யாரிகழாப்புகழ்ச் சீர்நல்கிலா
யானைதந்தார் துறட் டிக்குமன்றுடலொப் பாமிதுவே. (உஅச)

---

## தலைவிபாங்கன்முற்பகர்வன.

### வேட்கையளவுவினுதல்.

வேள்விரும்புந்திருச் செந்தூரர்வெட்சி மிலைந்ததுணைத்
தாள்விரும்புங்கும்ப ஞதியர்க்கோவயிற் றுங்கியதிண்
டோள்விரும்புங்குறக் கோதைமுன்னும்பல தோகையர்க்கோ
நாள்விரும்புங்குணத் தாருணர்ந்தாங்கு நவிலையனே. (உஅரு)

### தவத்தினுமின்பமுயர்வேனல்.

தேளிற்கொடிய தகுவரைக்காய்ந்துயர் செந்திற்பிரான்
றளிற்கலந்த தவத்தோரைக்காணத் தகாதவன்பொற்
றேளிற்புணர்ந்தமின் ஞாங்கொழிந்திலர் தூங்கவடி
வாளிற்சிறந்த புயவீரமேலெது வையகத்தே. (உஅசு)

### தலைமகன்றன்மைகூறல்.

காரொன்றுசோலைத் திருச்செந்தின்மாநகர்க் கந்தர்கடுங்
கூரொன்றும்வேலுடை யார்மையல்வாரி குளித்திடச்செய்
தாரொன்றலர்விளைத் தொவ்வொருக்காற்புணர்ந் தொப்பில்புகழ்ப்
பேரொன்றுமாத்திரந் தந்தார்கண்டாய்நின் பிரியத்தரே. (உஅஎ)

### குணவேற்றுமைகூறல்.

தென்னைப்பொழின்மலி செந்தூரில்வாழ்நின் சினேகரந்நா
ளென்னைச்சிறிதும் பிரியாதிருந்தன ரேந்தெழிற்சேய்
தன்னைக்கண்டார்முலைப் பாலானனைந்தமுன் றுனைகண்டார்
முன்னைக்குணங்களெல் லாம்விடுத்தார்கொற்ற மொய்ம்பினனே. (உஅஅ)

### வேண்டுகோள்விழைதல்.

தேனைப்பொழிமலர்த் தண்டலைசூழ்தரு செந்திற்பிரான்
சேனைக்குமற்றுள சீர்க்குமுதவி செயுந்துணைவா
மானைப்பொரும்விழி யாரைப்பல்வாறு வருத்துமவ
னேனைத்திறஞ்செய்யு மாறெருமாற்ற மியம்புதியே. (உஅகூ)

பயன்வினவல்.

செங்குருதிப்பெருந் தாரைவைவேல்கொடு செந்திலிடந்
தங்குநங்கேள்வர்நின் றோழனென்றாயொரு சத்தியங்கே
ளங்குவிட்டிங்குவந் தார்சிலநாட்கழித் தந்தவண்ண
மிங்குவிட்டங்குசென் றாரிதனாற்பய னேதவர்க்கே. (௨௯௦)

தலைவன்மொழிக்குறிப்புவினாவல்

செப்போடுறழு முலையுள்ளநாளையிற் செய்தகல
மிப்போதுசற்றுஞ்செய் கின்றாரிலையினி யென்னசெய்வே
னெப்போதருந்திறற் செந்தூர்க்குருபர ருன்னிடத்தி
லெப்போதிலேனு மெனைக்குறித் தோதலுண் டென்னிற்சொல்லே. ()

தலைவன்சொல்கவற்றினமைகூறல்

வில்லிசைச்சீர்திகழ் வீராதிவீரநின் வேட்கையுறு
நல்லியற்றோழமைச் செந்தூரர்வந்தந்த நாளென்னெஞ்சக்
கல்லினைத்தியின் மெழுகாகக்கண்டிரு காதறியச்
சொல்லியவண்ண முடியாமைநின்று துயர்செய்ததே. (௨௯௨)

உண்மையுசாவல்.

நின்னுருக்காண்டலு நங்கேள்வற்கானநன் னேயமென்ன
வென்னுளத்துண்மையுண் டாவதுபோனின் னிதயத்துநின்
றன்னுடைத்தோழற் கினியாளென்றுண்மை சனிப்பதின்றோ
மன்னுமெய்ச்சீர்ச்செந்தி லானுயிர்போன் றுள்ள வாஞ்சையனே. (௨௯௩)

வழக்கம்வினாவல்.

கோடாதசெந்தமிழ்க் குன்றும்பொருநையுங் கொண்டதமிழ்
நாடாளுஞ்செந்தி னகராதிபனத்து நங்கையர்க்கு
வாடாதநீப மலர்மாலை நல்கும் வழக்கமின்றோ
தாடாளனுமவன் றோள்போற்குலாவுந் தகையினனே. (௨௯௪)

யாரெனவினவல்.

கானகத்தோர்குறக் கன்னிசெந்தூர்வளர் காவலவ
வீனமுற்றேங்க மயலீந்தநாளையி லியானையெனப்
போனநற்றோழன்கொ லும்பர்தம்முரைப் புரக்குநலந்
தானவன்பாற்சொலச் சென்றான்கொனீயெவன் சாற்றுதியே. (௨௯௫)

உரிமைவருத்துமுபாயமுரையேன்கை.

சந்தனக்குன்றெளிர் செந்தூரின்மேவிய சண்முகவேள்
பைந்தமிழ்ப்பாவலர் பால்வைத்தவாஞ்சையென் பக்கல்வைத்தற்
கெந்தவிதஞ்செய்ய லாமறிந்தானன் கியம்பவன்றன்
சுந்தரத்தோள்பன் னிரண்டொடொன்றோத்தொளிர் தூயவனே. (௨௯௬)

போயதுவருதற்கிரங்கல்.

சீயவடிவங்கொள் வான்மருகோன்றிருச் செந்தில்வளர்
நாயகன்பாற்குறப் பேதைதன்சிர்பகர் நாரதனே
ராயசுற்றேழுவந் நாளவற்கின்ப மளித்துவிட்டுப்
போயபருவம் வருமாறுண்டெனினிற் புகலுதியே. (உகள)

வருமக்குறிப்புணர்த்தல்.

சென்முழங்கும்பொழிற் செந்தூரிடத்திற் றிகழும்வைவேன்
மன்முருகேசர்தந் தோழாவவரிங்கு வந்தொருக்கா
லென்முகநோக்கித் தலைசற்றசைய விதழதுக்கிப்
புன்முறுவற்செய்து போனரென்னெஞ்சகம் புண்பட்டதே (உகஅ)

பொதுநிலைவிழைதல்.

கனக்கும்புகழுடைச் செந்தூர்ப்பிரானெனைக் கள்ளியென்முன்
சினக்குந்தகைமலிர் தியானுமவனைத் திருடனென்றே
னுனக்குந்தெரியு மவன்றோழனுபினு முண்மைநினைத்
தெனக்குமவற்கும் பொதுவாகிநீயிங் கிருக்கைநன்றே. (உகக)

நல்வஞ்சமுணர்த்தல்.

ஆழியிற்றெண்டிரை யார்க்குஞ்செந்தூர்க்குக னன்பிவன்றன்
றோழியன்றேன்விடு தூதியொத்தென்னுடன் சொல்வதுண்டு
வாழியமீயந்த வாறவன்பாற்சொல்ல வல்லைகொல்லோ
வேழிசைச்செந்தமிழ்ப் பாவாணர்கேட்டுவப் பெய்திடவே. (௩௦௦)

---

பாங்கன்றன்மை.

இடைநிலைக்கயர்தல்.

ஊனைவழிய விடும்வேல்புனைந்துசெந் தூரில்வளர்
கோனைவருத்து மயனேய்க்கும்வேடர் குலத்துதித்த
மானைவிட்டோவரு மூடற்குமத்தியின் மன்னுறலா
லானையிரண்டி னிடைக்கொதுகொத்ததென் னுருயிரே. (௩௦க)

தலைவனைப்புகழ்தல்.

மாரன்வெட்கும்புகழ்ச் செந்தூர்க்குமரன்முன் வாரியினிற்
சூரனைக்கொன்ற தரிதல்லபல்படை தொட்டவன்கைக்
காரர்தம்மேனற் புனத்திதண்மேலுறுங் கன்னிகையைச்
சேரலைத்தன்னுடன் கொண்டிங்குவந்ததைச் சிந்திக்கினே. (௩௦உ)

தலைவனைப்பழித்தல்.

வானத்துமங்கையைத் தண்புனத்தாளை மருவுசெந்தூர்
ஞானக்குருபா நாதனுக்கென்றென்று நாரியர்தம்
பானற்கட்பார்வை விழைந்துபல்வாறவர் பாற்றினம்போ
யினக்கள்ளன்னசிற் றின்பமிக்கார்வ தியல்பல்லவே (௧௦௩)

தலைவியைப்புகழ்தல்.

பனிவேய்மலையும் பருப்பதச்சாரலிற் பாசமின்மா
முனிவேட்டமான்றா வந்தபெண்கோகில முத்தமிழ்ச்சொற்
கனிவேய்ந்ததொண்டர் நிமித்தஞ்செந்தூரிற் கவின்றருளுந்
தனிவேற்குகன்புயஞ் சேரமுன்செய்த தவநல்லதே. (௧௦௪)

தலைவியைப்பழித்தல்.

மல்லாருந்திண்புயச் சூர்க்கொன்றவேலுடன் வாழ்செந்திலான்
சல்லாபமெய்தியும் பிலிகலந்த தழையுடைமென்
புல்லாதியாற்செய்த பூண்கூடைவேத்திரம் போல்வனமற்
றெல்லாம்விடுத்தில ளேபுனங்காத்த விளங்குபிலே. (௧௦௫)

முறையுணர்ந்துவத்தல்.

வில்லடியுண்ட முதுவேடர்பாகத்தின் மேவுபுலிப்
பல்லணிமங்கலை தோட்டொட்டிலால்வளர் பாலன்செந்தில்
வல்லவனுயு மறப்பேதைதன்னை மணந்தபண்பா
னல்லவர்தங்குலப் பேதையர்க்கேக்கறன் ஞாயமன்றே. (௧௦௬)

இசைவுணர்ந்தியம்பல்.

வெயிலேய்ந்தமண்டல மெல்லாம்புகழும் வியன்செந்திலான்
மயிலேறிச்சேவலுங் கிள்ளையுங்கொண்டு வடித்தகதி
ரயிலேந்திக்குன்றமுற் றுள்வதனுற்புனத் தன்றுகுறக்
குயிலோகையுற்றிசைந் தாடனக்கேற்ற குணத்தனென்றே. (௧௦௭)

தலைவன்மயன்மிகை கருதிக்கூறல்

வயிரப்படைகொண் டொருசீயங்கொன்று மகிழ்செந்திலாற்
கயிலொத்தகண் ணுடைம யாரன்மின்னார்தரு மாரமுதங்
குயிலொத்திதன்மிசை நின்றேலமிட்டுக் குலவுமெழி
லெயினச்சிறுமி தருந்தினைமாவொத் தினித்ததன்றே. (௧௦௮)

தலைவன்வாஞ்சையளவறிந்திரங்கல்.

செங்கையில்வேலெடுத் தாடுஞ்செந்தூரன் றிரண்டெழுந்த
கொங்கையுங்கூந்தலுங் கோலன்னநாட்டமுங் கொண்டுவரு
மங்கையர்மேல்வைத்த வாஞ்சையைநூற்றில் வகுத்தவற்றோர்
பங்கையுமென்மிசை வைத்திலனேபழம் பத்தனென்றே. (௧௦௯)

தலைவன்வெறுப்புணர்ந்திரங்கல்.

பைந்நாகமஞ்சுறக் கூவுமயூரப் பரிச்செந்திலா
னெந்நாரியரிடத் தெவ்விதஞாய மியற்றிடினு
மந்நாளென் றன்னுடன் சொற்றுவந்தானவற் ருயிரத்தொன்
றிந்நாளிற்சொல்கில னியாதும்பிழைக ளிழைத்ததின்றே. (௬௧௦)

தலைவியைக்கறுவிக்கூறல்.

அந்தரத்தோரு முனிவோருமுத்தொழி லாளர்களுஞ்
செந்தமிழ்ப்பாவல ருந்தினந்தேடித் தியங்குகின்றார்
மந்தரவெற்புறழ் கொங்கைகள்கொண்டு மயக்கிச்செந்திற்
கந்தனைக்கைவசஞ் செய்துகொண்டாள்குறக் கன்னிகையே. (௬௧௧)

கொடுந்தன்மை கூறல்.

காமதகனம் புரிந்தபிரான்றிருக் காதிடத்திற்
பூமனறிவரு மெய்ப்பொருளோதும் புகழ்ப்பெருக்கைத்
தாமரைவாவித் திருச்செந்தில்வேலவன் றண்புனத்துக்
கோமளவேடிச்சி யாலான்மறைக்கை கொடுமையன்றே. (௬௧௨)

வஞ்சநன்குணர்தல்.

வெஞ்சமர்வீரர் பலர்போற்றுஞ்செந்தில் விசாகன்விண்ணூர்க்
குஞ்சரிக்கான படிபேசியேனற் குறக்கொடிதன்
னெஞ்சமகிழும் படிக்கானவாறு நிகழ்த்துகின்ற
வஞ்சகன்றானெனச் சொல்லுமெந்நாளுமிம் மாநிலமே. (௬௧௩)

புகழுணர்ந்துவத்தல்.

கும்மாளிகொள்ளும் பகடூர்நமனுயிர் கொண்டபதத்
தம்மான்மகன்செந்தி லாதிபனென்னை யயத்திடினு
மிம்மாநிலத்தவற் றேய்ந்தாருந்தோய்தற் கிங்குநருஞ்
செம்மான்மகள்கொண்க னன்பனென்றேயென் றுஞ் செப்பலுண்டே. ()

இம்மகளின்னுற்காமெனல்.

ஞாலத்தில்வானிற் பிலத்திலிப்பேதை நலம்புரையுஞ்
சீலத்தொருத்தியைக் காண்பரிதாதலிற் செந்திநகர்
வேலப்பனுக்கிசைந் தானலமாமலர் வேதனந்தக்
காலத்தெவ்வாறமைத் துள்ளான்கொலவ்விதங் காண்பரிதே. (௬௧௫)



## பாங்கன்றலைவன்முற்பகர்வன.

தலைவியைக்கண்டமை கூறல்.

வாடையிற்றுறை மலர்கின்றவாச மலிசெந்திலாய்
சாடையினியன்று சொல்லியபூங்கொடி தன்னைக்கண்டே
னோடைமிக்கார் தரு சாரற்புனத்தி லொருபிரம்புங்
கூடையுங்கொண்டு மயில்போலுலாங்குறக் கோதையன்றே. (௱௧௬)

நெறிநலம்பகர்தல்.

திகழ்வேலணிந்தெழிற் செந்தூரிற்சந்தச் சிலம்பில்வளர்
குகனேதினைப்புனக் கோதைதன்மான்மிகக் கொண்டுறினு
மகல்வானத்தும்பர் களிகூரப்பொன்னக ராண்டுறையு
மகவான்மகன்மனம் வாடுறச்செய்வது வன்மையன்றே (௱௧௭)

தன்றுயர் கூறல்.

அன்னைச்சிவையை யயில்வேலதாக்கி யணிசெந்திலா
யுன்னைப்புணர விரும்புமின்னார்நின் னுளமறியா
தென்னைத்துணிந்துமிக் கேசுகின்றாரிதற் கியானென்செய்வேன்
முன்னைப்பழவினை யோவென்னஞாய மொழிந்தருளே. (௱௧௮)

துணைவரேனென்றல்.

குன்றுகடோறு நடமாடுநின்றிருக் கோலமிக
நன்றுநன்றென்ன விழைந்தமின்னார்பலர் நட்டினுள்ளா
ரென்றுதங்கண்முற் றனிப்பாயென்றெண்ண வியல்புகண்டாய்
நின்றனைக்கியான்வர லாமோசெந்தூரி னிலைத்தவனே. (௱௧௯)

பிரிவின்மைவியத்தல்.

பொன்னுலகும்புகழ் செந்தூர்புரக்கும் புரவலனே
மன்னுரிமைத்திற முள்ளாரனேகரிவ் வையகத்துண்
டுன்னுவர்தோய்வர்சற் றாடிப்பிரிவர தொன்றுமின்றி
நின்னுடனென்றிரி கின்றாளிம்மாதெந்த நேரத்துமே. (௱௨௰)

மடலூர்தற்றடுத்தல்.

மைகுலவும்பொழிற் செந்தூரினுற்றும்பர் வாழுநலஞ்
செய்குகமாரனை மோகினிதன்னைச் செலுத்தியதான்
மெய்குளிரின்ப மயிலாமற்பன்மலர் வேய்ந்துளதா
மொய்குழலான்முன் மடலூரநாடன் முறையல்லவே. (௱௨௧)

அவையவமெழுதலரிதெனல்.

சீரியமேலவர் போற்றுஞ்செந்தூர்வளர் செல்வநின்கைக்
கூரியவேல்பொரு கண்ணாளுருவங் குறித்தெழுதுந்
தூரியக்கண்முத லாமுறுப்பெய்துந் தொழிலெழுதா
காரியமல்ல மடலூடெழுதக் கருதுவதே. (௱௨௨)

வியந்துரைவினவல்.

கொள்ளைவண்டார்க்கும் பொழிற்செந்திலாய்நின்சொற் கொண்டுமகிழ்
வள்ளையொக்குஞ்செவிப் பேதைமுன்னேனல் வனத்தில்வரும்
புள்ளையெல்லாம்வெருண் டோச்சியவாசனை போயருணைக்
கிள்ளையைமாத்திரந் தொட்டுமுத்தாடுங் கிளர்ச்சியென்னே. (௧௨௧)

உண்மையின்மையுரையெனல்

வம்பிட்டகொங்கை யுமைபாகராகிய வானவர்க்குத்
தெம்பிட்டவேற்காரச் சேவகனேதிருச் செந்திலுள்ளா
யம்பிட்டகட்குறப் பேதைதன்முன்ன ரணுகியன்று
கும்பிட்டுக்கெஞ்சிய துண்டுகொலில்லைகொல் கூறுதியே. (௧௨௪)

தன்னுணர்ச்சிகூறல்.

நீலத்தினைநிகர் கண்ணுடைப்பேதையை நீயினியோர்
காலத்திற்கூடிக் களிகூரினல்லது காமனைமன்
சூலத்தினுங்கொடி தாங்கணையேவுந் தொழின்மறவா
ஞாலத்தினையுண்ட பெம்மானருள்செந்தி லாதிபனே. (௧௨௫)

தகுதியின்மையெடுத்துக்கூறல்.

வெண்பிறைச்சென்னிப் பெருமானுக்கோர்சொல் விளம்புமருட்
பண்புடைச்செந்திற் பதிவேலனேவிண் பகட்டினது
வண்பிடரேறு மகவான்மகளை மணந்தபின்னர்
தண்புனத்திற்கிழ வேடமிட்டேக தகுதியன்றே. (௧௨௬)

சொற்சுவைவினவல்.

விண்டலத்தோர்புகழ் செந்தூரனேநின் வியன்செவிக்குக்
கண்டருதோகை யுடுத்தாள்சொல்லோவயிற் கைக்கிளியின்
றண்டமிழ்ப்பாடல்க ளோவினிதன்றிச் சமங்கொல்சொல்லாய்
தொண்டருட்டோன்றிய சந்தேகமுற்றுந் தொலைதரவே. (௧௨௭)

தலைவியரருட்பான்மைவினவல்.

நன்னலஞ்சேர்செந்தி னாயகனேமலை நாட்டெயின
மின்னருட்பான்மை மிகலும்விண்ணோர்புகழ் வேந்தன்மக
டன்னகத்தேயது குன்றலுங்காணல் சரதங்கண்டா
யென்னவிதம்பக ராயிவைஞாயத் தியல்பல்லவே. (௧௨௮)

தூதியுடனேத்துக்கூறல்.

கடல்கொதிக்கின்ற வுவாகாளின்மாரன் கணைமிகச்சிந்
திடல்சகிக்கின்றிலள் பேதையென்றாளவ ளேவவந்தான்
மடலெடுத்திங்கு வராதங்குநீசெல்லல் வண்மைகண்டா
யடலயிற்றேட்கந்த னேசெந்தின்மாநக ராள்பவனே, (௧௨௯)

பெண்மடலூர்தற்காணேணுதேன்றல்.

தண்மலர்வாளித் திருச்செந்திலாய்மதன் ருனும்வெட்கும்
வண்மருவப்பெறு நின்னைச்செவ்வேளென வையகமும்
பண்மறையுஞ்சொல்ல லுண்டுகண்டாய்தவப் பான்மையர்போற்
பெண்மடலூர்வது கண்டாவிளப்பம் பெரிதெய்துமே. (கூகo)

தலைவியின்றொடர்ச்சிகண்டியம்பல்.

மட்டின்மெய்க்கீர்த்தி பெறுஞ்செந்திலாயுன்னை வையகத்தோர்
செட்டியென்றோதிடக் கேட்டேனின்சந்நிதி தேடிவந்து
கிட்டியின்றேமட லூர்வேனென்றோதுங் கிளிமொழியாட்
கிட்டிடும்போது நீவியென்றான்மிக் கிசையுமன்றே. (கூகக)

---

பாங்கன்றலைவிமுற்பகர்வன.

தலைவனைத்தலைவிக்குணர்த்தல்.

தந்தியுலாம்பொழிற் சாரற்புனத்துத் தனிமயில்போ
லுந்தியபச்சிதன் மேலுறைவாயென்று மும்பர்புகழ்
செந்திலின்மேவிய செவ்வேற்குகனருட் சித்தசன்காண்
பந்தியதாகிய பன்னிருதோளுடைப் பாவலனே. (கூகஉ)

ஒத்தமைகூறல்.

பெருங்கோரவேடர் குலம்போற்றும்வீரம் பிறங்கவிற்றோய்
தருங்கோதில்வாழ்க்கையுஞ் செந்தூர்புரக்குஞ் சரவணற்கு
மருங்கோவுநிற்குமுன் டாதலினலவன் வாஞ்சைகொள்ளாய்
கருங்கோகிலமெனக் கூவித்தினைப்புனங் காத்தமின்னே. (கூகங

தலைவனுயர்ச்சிகூறல்.

புள்ளிப்புலியுரித் தார்நுதற்றிக்கட் புலிங்கமென
வெள்ளிக்கிரியில் வருசெந்திலானுன்னின் மேலல்லவோ
வள்ளிக்கிழங்கெடுக் குங்குழியூடன்று மான்றரலாற்
றுள்ளிக்கிடந்து வனவேடரால்வளர் தூகைகையே. (கூகச)

பேறுநலம்பகர்தல்.

பச்சைத்தினைப்பிண்டி யுந்தேனுமுண்டு பரணிடம்வாழ்
கொச்சைக்குறக்குலக் கோதைநல்லாய்செந்திற் கோன்புயத்தி
னிச்சைக்கிசைந்தபின் னன்றோவுந்தன்னை யிமையவரும்
பிச்சைத்தவத்தின ருந்தொழுமேன்மை பிறங்கியதே. (கூகரு)

செய்தவம்புகழ்தல்.

கண்டோர்கலிதவிர்க் குஞ்செந்தின்மாநகர்க் கந்தன்வைவேற்
கொண்டோதவாரிதி மாவறக்காய்ந்துயர் கொற்றமுடன்
வண்டோலிடுஞ்செச்சை கூதாளநீப மருவுநிரைத்
திண்டோள்புணர்நல மீகைமுன்னீமிகச் செய்தவமே. (௧௧௬)

தலைவனுட்குறிப்புணர்த்தல்.

தென்னையைப்போலுங் கமுகார்ந்தசோலைத் திருச்செந்திலா
னுன்னைமிக்கேத்து மவர்க்கியும்பேற்றினை யுன்னிடுங்காற்
றன்னைநட்டார்க்கரு ளின்பப்பெருக்கொரு சற்றல்லவோ
பொன்னையொப்பார்பலர் சூழ்தரவாழும் புனக்குயிலே. (௧௧௭)

ஐயந்தீர்த்தல்.

தன்னுண்மைகாட்டிவெஞ் சூர்க்கொன்றதாற்செந்திற் சண்முகன்கொண்
மின்னுண்மனமிக வேதனையெய்தியும் வேட்கைமுற்றுன்
பன்னுகத்துக்திப் படம்போலுமல்குலின் பாலமைத்தா
னுன்னுணையிதறி வேனறிவேனுண்மை யுண்மையன்றே. (௧௧௮)

மறுமொழிகூறல்.

மாசொன்னவேலுடைச் செந்தூர்க்குருபரன் வண்டமிழாற்
பாசொன்னநாவலர்க் கோரெளியானுமை பால்கமழும்
வாய்சொன்னசொற்கு மறுமாற்றமாக மறுகிநின்று
நீசொன்னசொல்லினும் யான்சொல்லுஞ்சொன்மிக நேர்மையன்றே. ()

மொழிவழிதேற்றல்.

சிறப்பாயிரம்பெறுஞ் செந்தூர்க்குருபரன் றேவர்தம்மூ
ரறப்பான்மைமீடுறச் செய்தபிரான்றன தாருயிர்நேர்
குறப்பாவையேயுனைச் சற்றேபிரிந்த கொடுமைகண்டு
மறப்பானெனவருந் தேலின்றுநாளை வருவதுண்டே. (௧௪௦)

கிளிவரவுணர்த்தல்.

எக்கியத்திற்றக்க னீடறத்தாக்கு மிறைவனுக்கு
முக்கியத்தாரகஞ் சொற்றசெந்தூர்க்குகன் முன்னுனது
கைக்கிளிசொன்னசொல் லாலவனுள்ளங் களித்ததுண்டு
மிக்கிடைந்தேங்கி மெலியேல்வந்திங்குன்னை மேவுவனே. (௧௪௧)

தன்பழிநீக்கல்.

முன்னைவெஞ்சூர னெடுபோர்பொருது முடுகியன்னேன்
வென்னையுங்கண்டு மகிழ்செந்திலானுன்னை மேவியதும்
பின்னைநின்மேற்சின மெய்தலுநானறி பெற்றியன்று
லென்னைவம்பிற்கறு வேன்மயில்போலு மெயினமின்னே. (௧௪௨)

### சினந்தகாதென்றல்.

பனகத்தரசும் புகழுருஞ்செந்திற் பதிக்கந்தவேள்
கனகத்திருநகர்க் காவல்செய்வான்மகள் கன்றநின்மேன்
மனம்வைத்தவுண்மை யறிந்துமிந்நாளவண் மாட்டும்வம்பிற்
சினவத்தகுங்கொல் புனத்திதண்மீதுறுஞ் சிற்றன்னமே. (௧௪௩)

### பொறைவியந்துரைத்தல்.

தென்னாட்டின்வண்மைச் சிரம்போற்குலவுந் திருச்செந்திலா
னன்னசைகொள்ளல் சகியா துகுஞ்சரி யுள்ளுடைந்தாள்
பின்னுயிரமட வார்க்கிச்சைகொண்டயர் பெற்றிகண்டு
நின்னார்வங்குன்றிய தின்றேகுறக்குல நேரிழையே. (௧௪௪)

### தலைவனைத்தாழ்கைநன்றென்கை.

அன்போர்குழாநெருங் குந்திருச்செந்தி லதிபனுக்கு
நின்போற்பிரிவரு நேரிழைமாருமிந் நீணிலத்தி
லென்போன்றதோழரு மெண்ணிலர்நந்தமக் கின்னுமவன்
றன்போலொருவரு மின்றாதலாலவற் றாழ்கைநன்றே. (௧௪௫)

### தலைவன்செய்கைவிலக்கரிதென்றல்.

தாயினைவேலெனக் கைப்பிடித்தான்றந்தை தான்பணிந்து
வாயினையும்புதைக் கப்புரிந்தான்செந்தில் வாழ்குமர
னியிவைசெய்யத் தகாதென்றெவரு நிகழ்த்திலர்காண்
வேயினைத்தோளன்ன மேயவன்செய்கை விலக்கரிதே. (௧௪௬)

### தலைவனைநம்பிவாழ்கைதகுமெனல்.

ஒருவாய்கொண்டொவ்வொரு வாறுரைப்பான்செந்தி லுற்றபிரான்
றிருவாய்களாறெனத் தேர்ந்திலையோவவன் செப்பியதோர்
பொருவாமொழிகொண் டிறுமாக்கொண்ணாது புகழ்ந்திறைஞ்சிற்
றருவானல்லின்ப மெனநம்பிவாழ்கை தகுந்தகுமே. (௧௪௭)

---

## பாங்கன்பாங்கிமுற்பகர்வன.

### சந்திப்புவியத்தல்.

அடலவுணேசனைச் செற்றசெந்தூர னருணலமே
திடமெனநம்பிய நானும்புனத்துச் சிறுகுறத்தி
யிடமகலாதுள்ள நீயுமிவ்வேலை யெதிர்ப்பட்டசீர்
கடலுமலையுமொன் றாக்கூடிநின்ற கணக்கொக்குமே. (௧௪௮)

உயர்ச்சிவினவல்.

பொன்னுடையார்மிகுஞ் செந்தூர்புரக்கும் புரவலனை
மென்னுடைத்தோழன்கொலோகவனோந்து மிளம்பிடியே
நுன்னுடைத்தோழிகொலோவுயர்ந்தாரெவ ருண்மைசொல்லாய்
பின்னுடைக்கூந்தன் மயில்போலுஞ்சாயற் பிறங்கிழையே. (ருசகூ)

பொருத்தங்கூறல்.

குன்றேடுறழ்புய மீராறுகொண்டு குலவுசெந்தூர்
நின்றேனெழிற்கு நெடுப்புனங்காக்குமந் நீலவள்ளி
தன்றேகைச்சாயற்கு மானபொருத்தந் தகுமல்லவோ
மென்றேட்டொயிலனங் கார்வெட்குமாண்புறு மெய்த்திருவே. (கருo)

குறிப்பறிவித்தல்.

மன்னருந்தேவரு மாதவர்தாமும் வழுத்துஞ்செந்தூர்
முன்னவனுனவென் றேழனின்றேழி முலைச்சுவட்டி
னன்னலந்தோய்ந்தமை கண்டதனுலினி நாஞ்செயுமா
றின்னதென்றேர்ந்திலை யோகொடிப்பூமல ரீர்ங்குழலே. (ருருக)

ஒருமைபாராட்டல்.

வெம்மனத்தானவர் வேர்கின்றுமீண்டவை வேற்செந்திலான்
செம்மலர்த்தாட்கன்பு நான்கொண்டுளேனவன் சேரும்வள்ளி
யம்மனைக்காட்பட்டு ளாய்நீயிவண்மை யடைந்தபண்பா
னம்மனமொன்றுபட் டாலவர்சீர்சொல்ல நாணமின்றே. (ருருஉ)

அறிந்தமட்டுசாவல்.

தன்னெண்ணங்கொண்டு சராசரமோர்ந்து தமிழ்ச்செந்தில்வாழ்
மன்னெண்ணமுற்று மறிகின்றிலேனவன் மாட்டுறையு
மின்னெண்ணமுற்று மறிந்ததுண்டேற்பகர் வெட்கமுறேல்
பொன்னெண்ணப்பூத்த சுணங்கோடெழுந்த புணர்முலையே. (ருருரு)

பின்னியல்புரைத்தல்.

மின்னைவெல்வேல்கொடு செந்தூரில்வாழும் விகிர்தனிட
நின்னைநின்றேழி விடுகின்றநாள்வந்து நேர்ந்துகொண்டா
லுன்னையங்கேகண் டுவந்துனக்காம்படி யொத்துஞ்சொல்வே
னென்னையுமவ்வண்ண நீதாங்கவேண்டு மிளங்குயிலே. (ருருச)

வலியின்மைகருதிக்கூறல்.

உன்றன்பிராட்டிதன் பாற்செந்திலான்பல் லுருவெடுத்துங்
குன்றன்னவேழ மழைத்தும்புணர்ந்த குறிப்பறிவே
னின்றந்தவண்ணநின் பாற்செயற்காம்வலி யான்பெற்றிலே
னென்றன்றுயர்களை யாயவன்றேழனென் றெண்ணம்வைத்தே. (ருருரு)

தலைவியைத்தாழ்த்திக்கூறல்.

மைக்கிறவேட்கு மயங்குகின்றூர்பல மாதரென்று
மெங்கிலமும்புகழ் செந்தூர்ச்செவ்வேளிச்சை யாரெய்திடார்
வெங்கிணைமுண்டு வளர்வேடமங்கை வெறுக்கிலவன்
சந்நிதிச்சிர்குன்று மோவவனேவல்செய் தாழ்குழலே. (௩௫௬)

தன்னையுயர்த்திக்கூறல்.

மட்டாருஞ்சோலை மலிசாரலேனல் வனத்திதனிற்
கட்டாரிக்கண்மறப் பேதையைக்கண்டு கவினெழுதி
நட்டார்க்கிரங்குசெந் தூர்க்குகவேளிட நான்கொடுத்தேன்
இட்டார்வமெய்தின னீயென்செய்தாயக் கிளிமொழிக்கே. (௩௫௭)

வேட்குறப்பகர்தல்.

அன்னையிலெண்மடங் காகிச்சராசரத் தார்வமெய்திப்
புன்னையங்காவடர் செந்தூரில்வாழ்குகன் புன்னுனிமட்
டென்னைவஞ்சித்தறி யானின்பிராட்டியன் றேனலிடை
யுன்னைவஞ்சித்தல்ல வோவவன்றன்பிற கோடியதே. (௩௫௮)

உறவளவுசாவல்.

நானுனைக்கண்டமை செந்தூர்க்குருபர நாதனுள்ளந்
தானுவைரும்படி சொல்வேனெனைக்கண்ட தன்மையக்த
வேனுனிக்கண்மறப் பாவையுரை விளம்புவையோ
வேறுரைக்கின்றன மென்றிருப்பாய்கோல்சொல் லேந்திழையே. (௩௫௯)

திகைப்பறல்வினவல்.

மஞ்சவிர்சோலைத் திருச்செந்திலானை மறைமுனிவோர்
குஞ்சரிபாளன்ப னென்பதுந்தொண்டர் குறக்கொடிதன்
செஞ்சரண்போற்றுந னென்பதுங்கேட்டுத் திகைத்தனனின்
னெஞ்சறிந்தாற்பக ராயறற்போலு நிறக்குழலே. (௩௬௦)

நட்பறுதேன்றல்.

அடையலர்தம்மை யவர்குலத்தோடு மழித்தவைவேற்
படையணிசெந்திற் பிரானுக்குமன்னவன் பன்னியர்க்கு
முடையமெய்த்தோழனுந் தோழியுநாமென்ப துள்ளமட்டு
மிடையறுமோவன்ன மேமதாவ லெனுங்கொடியே. (௩௬௧)



## பாங்கிதன்மை.

தலைவிபுலம்புமாறியம்பல்.

மின்போலும்வேலுடை யானென்னுஞ்செந்தில் விசாகனென்னு
மன்போர்க்கிரங்கும் பிரானென்னுமீடி லழகனென்னும்
வன்போங்குமாவைவென் றானென்னுந்தோகை மயூரனென்னும்
பொன்போலுமென்முலைப் பாரம்பொறுவிடைப் பூங்கொடியே. (௩௬௨)

தலைவிமையல்கண்டிரங்கல்.

மத்தன்மகன்றிருச் செந்தூரினல்கிய மையலெனும்
பித்தடைந்தாளன்று தொட்டுவெப்பார்தரு பேச்சறியாண்
முத்தங்கரிய முதிர்காச்சலெய்தினண் முப்பழம்பால்
வைத்தமுதூட்டினு முண்ணாள்கிடந்த மடவன்னமே. (௩௬௩)

கண்ணோம்வருந்தல்.

தண்செய்ததாமரைப் பூவாளிதன்னைத் தளையிலிடுந்
திண்செய்ததோளுடைச் செந்தூரன்மாவிற் றிளைக்குமிந்தப்
பெண்செய்தகோரணி யெல்லாங்கண்டின்னற் பெருக்குறன்முன்
கண்செய்தபாவங்க ளோவென்றுநெஞ்சங் கவல்கின்றதே. (௩௬௪)

தலைவன்மீதுநிட்டூரங்கூறல்.

போதுவந்தானைப் புடைத்தசெந்தூர்க்குகன் பொற்புயத்தை
மாதுகண்டேங்கி வளைகலைநாண மறந்தணையின்
மீதுருண்டங்கிப் புழுப்போல்வருந்தும் விதமறிந்து
தூதுசென்றெய்த்தன னின்னம்வந்தானிலைத் தோய்வதற்கே. (௩௬௫)

ஏசல்கண்டிரங்கல்.

ஆசுவல்லார்புகழ் செந்தூர்க்குமர னரிவையணி
தூசுகொண்டானதற் கியானென்செய்வேன்மதி சுட்டதென்றாள்
வீசுதென்கால்புலி போன்றதென்றாண்மிக வெம்பியென்னை
யேசுகின்றாளவ டன்னையிவ்வூர்முற் றிகழ்கின்றதே. (௩௬௬)

சுரம்போக்குவிளம்பல்.

பூதலமாதிய மூவுலகுந்தினம் போற்றுஞ்செந்தூர்
நாதன்வந்தெவ்விதஞ் செய்தான்கொலோவிள நங்கையிராப்
போதவன்றன்பிற கேகடந்தாள்கொடும் புல்லர்களை
யாதரிக்கும்புல வோர்கலிபோலு மருஞ்சுரத்தே (௩௬௭)

நற்றாயிரங்கல்.

ஆறுமுகத்தொரு வானவனுஞ்செந்தி லாதிபன்றான்
கூறுமொழிவழி போய்ப்பெற்றகும்பி கொதிக்கவிட்டா
ளூறுமுலையமு துண்டவெண்பல்லொன் றுதிர்ந்துமற்றும்
வேறுபல்லொன்று முளையாப்பருவத்து மெல்லியலே. (௩௬௮)

துயிற்காரணங்கூறல்.

மந்தரக்கொங்கைத் துணைப்பாரந்தாங்கரு மங்கைநல்லாள்
சுந்தரப்பூவணை மேற்றுயில்கூர்தரச் சோம்புகிலாள்
பைந்தமிழ்ப்பாவலர் கொண்டாடச்செந்திற் பதிபுரக்குங்
கந்தனைத்தோயுங் கனாமிகக்காண்பதிற் காதலுற்றே. (௧௬௯)

துயிலன்றுசோகமெனல்.

சயிலங்கடோறு நடமாடுஞ்செந்திற் சரவணன்றன்
வெயிலங்கதிரைத் தோள்வேட்டமங்கை வியன்முலையிற்
பயிலுஞ்சிலம்பணி மால்படைத்தாளட்ட பாலுமுன்னா
டுயிலெங்ஙனம்வரு மாரன்கைப்பூத்தருஞ் சோகமிதே. (௧௭௦)

வெறிவிலக்கல்.

கற்றோர்பாவுந் திருச்செந்தில்வேலவன் காதன்மிக
வுற்றோவுறாப்பெருஞ் சோகமுற்றாளிதற் கூரவர்தா
மற்றோருயிர்வதைத் துன்னாநலத்தை மறந்தவராய்ப்
புற்றோயும்வாயசத் தின்பலிவேண்டல் பொருத்தமன்றே. (௧௭௧)

வெறியாட்டால்விபரீதமுண்டெனல்.

நிசங்கண்டமேலவர் போற்றச்செந்தூரிடை நின்றவன்மால்
கசங்கும்படிசெய நொந்தாளைத்தேற்றக் கருதிலவன்
வசங்கொண்டுபோய்விட்டு வாராதறத்தை மறந்துவம்பி
லசங்கொன்றிடிற்சினப் பானவன்வாகனத் தன்பதென்றே. (௧௭௨)

தலைவனையுயர்த்திப் பிறரைத்தாழ்த்தல்.

கற்றையஞ்செஞ்சடை யார்மைந்தன்செந்திற் கடவுடன்மா
னுற்றையம்பன்சம ராலிறந்தோரு முயர்ந்தவர்தா
மற்றையவானவர் தாமேயிரந்து விலிதணையப்
பெற்றையந்திர்நல மெய்துகின்றார்களும் பீடிலரே. (௧௭௩)

பருவங்கண்டிரங்கல்.

அமரர்க்கதிப னரசாளச்செந்திலி லன்றுவந்தோன்
பமரக்கடப்ப மலர்மாலைவேட்டிந்தப் பாடுபட்டுந்
தமரைப்பகைக்கவு மஞ்சுகிலாளினித் தக்கவண்ணங்
குமரிப்பருவம்வந் தாலென்செய்வாளிக் கொடியிடையே. (௧௭௪)

மாலையாதோவெனல்.

அரவக்குலம்வெரு ளத்தோகைமீமுலி லாசில்செந்தூர்
பரவப்பவனி வருவானைக்கண்கொண்டு பார்த்தமின்னா
ளிரவிற்றுயில்கின்றி லாளிச்சையுற்றமை யாமறியக்
குரவத்தினிபத்தில் வெட்சியிலென்னவுங் கூறிலளே. (௧௭௫)

பிரமையைப்பெருமையென்கை.

தாகித்தவர்க்கருள் செய்யுங்குமரன் றடம்புயத்தை
மோகித்தளவி லெனமைமறந்தாள்வள முற்றுசெந்தூர்க்
கேகித்தனென்ணைப் படிவாழிலியாரை யிலக்குவைப்பாள்
பாகித்தகார்முகில் போலக்குலாங்குழற் பைங்கொடியே. (௩எ௬)

---

பாங்கிதலைவிமுற்பகர்வன.

புதுமைகூறல்.

வேதமுமாகம நூல்களும்போற்ற விளங்குசெந்தூர்
நாதனைத்துங்க மயின்மீதுபார்த்துள்ள நாணிழந்து
சீதரன்பாவையர் மீதழுக்காறு செலுத்துகின்ற
காதலுற்றோர்பல ருண்டுனைப்போலெங்குங் கண்டிலனே. (௩எஎ)

பயனின்மைகாட்டல்.

கன்மேற்புரியுந் திருக்கூத்துள்ளான்செந்திற் காவலவ
னின்மேற்பிரியம்வைத் தானிலன்போன்றன னீயவன்சீர்ச்
சொன்மேன்மனமுழு துஞ்சேறவிட்டனை தோய்ந்திலனென்
றென்மேற்சினந்தத னாற்பயனியாதடி யேந்திழையே. (௩எஅ)

தேற்றல்.

காராழித்தெண்டிரை யாயிரங்கோடி கலந்துபொருஞ்
சீராருஞ்சந்நிதிச் செந்தூரனுளுஞ் செயும்பவனிக்
காரார்மயங்குகி லாருனைப்போள்மிக் கவாவடைந்தோர்ச்
சோராதிரானவன் றிண்புயஞ்சேர்வது திண்ணமன்றே. (௩எ௯)

ஆற்றாமையாகாதெனல்.

தேனருஞ்செச்சை மலிசந்தமால்வரைச் செந்திற்பிரான்
வானடர்பாவையை நீங்கிக்குறவர் மகளிடம்போய்க்
கானுற்றுச்சாரலிற் கெஞ்சிப்புணர்ந்துள்ள காமுகன்று
னுனுமுன்றனக் காகாதிந்நாளிந்த வாத்திரமே. (௩அ0)

பேரவாநீக்கல்.

கற்றுணர்ந்தோர்தவத் தோரிமையாமலர்க் கண்ணுடையார்
பற்றுநற்றுளுடைச் செந்தூர்க்குகனிரு பாரியர்க்கு
மற்றுமெண்டீர்பல மாதர்க்குமாம்பொது வாழ்வுடையான்
முற்றுநின்பாலமை வானேவருந்தலென் மொய்குழலே. (௩அக)

எக்கங்கண்டிரங்கல்.

கன்னல்வில்வேண்மன நாணுறநீடுங் கவின்செந்திலான்
முன்னநின்றன்னை முகங்கொண்டுநோக்கிலன் மோகமுற்று
வென்னதவப்பய னோவெவ்வொர்காலம்வந் தெய்துகின்று
னின்னமுமேக்கந் தவிர்கின் றிலாயிதற் கென்செய்வதே. (௧௮௨)

தலைவன்வேட்கைகூறல்.

வாதுவிண்டார்தமை யெல்லாஞ்செயித்தன் று வன்கழுவின்
மீதுகண்டான்றிருச் செந்தூரனின்பெரு வேட்கையன்று
னேதுவந்தானிலை யென்றேங்கிடேனின் னியல்புரைக்கத்
தூதுசென்றேனையுந் தொட்டிழுத்தானடி தூநகையே. (௧௮௩)

செல்லனன்றென்கை.

குன்றந்தொறுந்தினங் கூவியசேவற் கொடிச்செந்திலா
னன்றங்குதந்த மயலோடிங்குற்றுளைந் தாய்வுறநீ
யென்றன்மொழிப்படி யன்னவன்கோயி லெழின்முகப்பிற்
சென்றன்புசெய்திடிற் சேராதிரானடி தேமொழியே. (௧௮௪)

தவஞ்செய்யெனல்.

எத்திரத்தோரும் புகழ்செந்திலான்ற னெழில்வடிவஞ்
சித்திரத்திற்பொறித் தற்கமையாது திருந்துநெஞ்சாற்
பத்திரஞ்செய்யிற் சிலர்க்கேயமையுமிப் பாங்கறியாய்
தத்திரங் கொள்ளன்மின் னேயவன்றோன்றத் தவஞ்செய்திடே. (௧௮௫)

புத்திகூறல்

மெய்வசந்திர்ப மானந்தமெய்திய மேலவர்பாற்
செய்வசனத்தன் றிருச்செந்திலான்றனைச் சேர்ந்தபின்னர்
கைவசமாகின னென்றுவப்பாரைக் கழித்துவெறும்
பொய்வசத்திற்புகுப் பானஞ்சிவேண்டல்செய் பொற்கொடியே. (௧௮௬)

வலிதுவருங்கோலென்றல்.

ஆனேறுகைத்தவன் சேய்திருச்செந்தி லதிபவிட
மேனேனிரங்குகி லாயெனக்கெஞ்சுக ரெண்ணின்மின்னார்
தேனேருமின்சொற் றிருவேயுனைமிகத் தேடியிங்கு
தானேவருங்கோனின் வேட்கைகளியாவுந் தரும்பொருட்டே. (௧௮௭)

கேட்டமையுணர்த்தல்.

சந்தாசலந்திகழ் செந்தூர்ச்சரவணன் றன்னைநம்புங்
கொந்தார்குழன்மட வார்பலருள்ளங் கொதிக்கவிட்டுன்
சிந்தாகுலந்தவிர்ப் பானுனைத்தேடிச் சிகிப்பரியில்
வந்தானைநீமதித் தாயில்லையாமடி மாதரசே. (௧௮௮)

## என்செய்தா யெனல்.

மைப்படியுங்கறைக் கண்டத்தர்பாகத்து மங்கைதனச்
செப்படிப்பற்றி யமுதுண்டவாயன் றிருச்செந்திலா
னப்படிநீசொன்ன வண்ணமெல்லாஞ்செய்யு மன்பைவிட்டிங்
கிப்படியேன்றிரும் புற்றுனென்செய்தனை யேந்திழையே. (ரு அகூ)

## குறைவருமாறு கூறல்.

நீர்த்தையல்வாழுஞ் சடைக்காடுளார்மக னெட்டிலையின்
கூர்த்தையவேற்படை கொண்டோங்குஞ்செந்திற் குமரனுன்னைப்
பார்த்தையமெய்த லெனத்தீர்க்கமாகப் பகருகின்ற
வார்த்தையின்வண்ண நடவாதிருக்கில் வருங்குறையே. (ரு கூ0)

## தருக்கூட்டல்.

வாரொன்றுமென்முலைப் பேதைநல்லாயென்சொல் வம்பலக்கேள்
சீரொன்றுகோடி விதமாவிளங்குஞ் திருச்செந்திலிற்
கூரொன்றுவேலொடு நின்றவன்றோள்புணர் கோதையென்னும்
பேரொன்றிருக்கி லதுபோதுமெந்தப் பிறப்பிற்குமே. (ரு கூக)

## மகிழ்வுற வாழ்த்தல்.

பஞ்சவன்னக்கிளிக் கையான்செந்தூர்வளர் பண்ணவன்முன்
குஞ்சரியைக்குறக் கோதையினுற்றுயர் கொள்ளவிட்டா
னஞ்சனக்கண்ணி னவளுன்றனுற்றுய ராரச்செய்வான்
வஞ்சகம்பொய்சொல்ல மாட்டேன்கண்டாயடி வார்குழலே. (ரு கூஉ)

---

# பாங்கி தலைவன் முற்பகர்வன.

## மணமேடுத்துரைத்தல்.

காவுலகத்தினர் நம்புஞ்செந்தூர்வளர் கந்தசெஞ்சொற்
பாவுலகத்தி னளவேகமழுநின் பத்தியிந்த
மாவுலகத்தைவிட டார்நெஞ்சின்மட்டு மணக்கும்வைத்த
மூவுலகத்தினும் வாசிக்குமென்மகன் மொய்குழலே. (ரு கூரு)

## பருவங் காட்டல்

நூன்மணக்கும்புகழ்ச் செந்தூர்க்குமர நுடங்கரிய
வேன்மணக்குங்கைக் குமரேசவெட்சியின் மெங்கடம்பின்
றேன்மணக்கும்புய மால்கொடுத்தாயதிற் சிக்கிக்கொண்டேன்
பான்மணக்குஞ்சிறு வாயாள்படுந்துயர் பார்க்கரிதே. (ரு கூச

இயைபுரைத்திரத்தல்.

இலக்கணசார மறியாப்புலவ ரிழிகவிக்குங்
கலக்கமில்வாழ்வளித் தாளவல்லாய்நின் கருத்தறியா
தலக்கணுற்றேங்குமிவ் வாயிழைக்கின்ப மளித்தருளாய்
நலக்கமலாலயத் தாரகலாச்செந்தி னாயகனே. (௩௯௫)

ஓமலிப்புக்கூறல்.

எக்கலையுந்தெரி வார்தொழுதேத்து மெழிற்செந்திலாய்
மெய்க்கலைவாகன னானுமுந்தோகையில் வீதிவந்து
கைக்கலைதாங்கி வளைதேடுவார்பலர் கண்ணெதிரென்
னெக்கலைப்பெண்ணுக்கு மால்கொடுத்தாயிதொ ரோமலிப்பே. (௩௯௬)

முற்றும்போயன்றெனல்.

வாயாரவாழ்த்துநர்க் கின்பமெல்லாநல்கும வண்மைகண்டு
பேயாய்ப்படுத்து மகள்வாழவேண்டியென் பெற்றவயிற்
றாயாசமிஞ்சியொவ் வோர்போதொவ்வோர்பொய் யுறைவதன்றி
யோயாமற்பொய்சொல்ல மாட்டேன்செந்தூர்வள ருத்தமனே. (௩௯௭)

தழைவியந்துரைத்தல்.

முத்தமிழ்ப்பாவலர் போற்றுஞ்செந்தூரின் முருகையநின்
கைத்தழைகண்டுதொட் டின்பமுற்றாண்மகள் காசினியோர்
பித்தடைந்தார வங்கடித்தார்கொடும் பேய்பிடித்தா
ரொத்தவரைத்திருத் தத்தழைவேண்ட லுணர்ந்தனனே. (௩௯௮)

வயிற்றினைப் புகழ்தல்.

எயிறுகவெய்யவன் றன்னைவென்றார்மைந்த வெவ்வுலகும்
பயிறுகமர்புகழ்ச் செந்தூரவாய்கொண்டு பற்றியமு
தயிறுகனூற்ற மறியாவிரத மனையவற்றென்
வயிறுகன்றிச்செய் தவங்காணின்மேன்மகண் மால்கொண்டதே. (௩௯௯)

அடைக்கலங்கூறல்.

இறலருஞ்சீர்திகழ் செந்தூர்க்குமரநின் னின்னருளாற்
பெறலருங்காலத்திற் பெற்றவென்பேதை பெருக்கமைய
லுறலறிந்துன்னிடத் துய்த்தேனவள்கொங்கை யூக்கமறைந்
தறலன்னகூந்தல்பஞ் சானதுமுன்றற் கடைக்கலமே. (௪00)

நேறியேடுத்தியம்பல்.

வன்மனச்சூரனை மாய்த்தும்பர்வாழ்வுற வைத்தனந்தந்
தன்மதிலாவிய செந்தூர்புரக்குஞ் சரவணனே
பன்மடவார்களி கூர்தரவின்பம் பகிர்ந்தளிக்கி
லென்மகண்மட்டி விரங்காதிருப்ப தியல்பல்லவே. (௪0௧)

உய்வதெவ்வண்ணமெனல்.

காயிரும்புங்கதி ருஞ்செக்கர்வானுங் கனிதுவரு
மாயிலங்குங்குக நின்னைச்செந்தூரிற்கண் டன்றுமுதற்
றுயினைவையத் துனிந்தாளமுதந் தனைவெறுத்தா
ணீயிரங்காவிடி லெவ்வனுய்வாளந்த நேரிழையே. (௪0௨)

நினைத்திலாயென்றல்.

நஞ்சயின்றுராழற் கண்ணால்வருஞ்செந்தி னாயகனே
யஞ்சலரேவு மதவேட்குந்தென்றற்கு மம்புலிக்குங்
குஞ்சரமாய விருளுக்குமஞ்சிக் குலைந்துநித்த
நெஞ்சகத்துன்னை நிறுவுகின்றாளை நினைத்திலையே. (௪0௩)

முரசொலிவினவல்

தாமரைவாவி பலசூழுஞ்செந்திற் சரவணனே
நீமடமாதர்பல் லோர்நெஞ்சிலுள்ள நிறைகுலைத்தற்
காமடையாளமன் றேபிரியார்தமக் கார்வமல்குங்
காமன்முரசொலி சந்நிதிமுன்னென் றுங் காட்டுவதே. (௪0௪)

சங்காழியிரத்தல்

மங்குலுஞ்சோலையு மாருதசந்தன மால்வரைச்சீர்
பொங்குசெந்தூருடைப் புண்ணியனேநின் புயம்விரும்புங்
கங்குலங்கூந்தனல் லாள்கலைசோரக் கவர்ந்துகொண்ட
சங்குடனாழியை யானுமிக்கணந் தந்தருளே. (௪0௫)

மாலிகைவேண்டல்.

பொங்கடமார்தரு சூரனைக்கீன்ற புகழ்ச்செந்திலா
யங்கடம்போனு முலைமீதனங்க னலர்சொரியச்
சங்கடமெய்திக் கவித்தெய்த்துளாணின் றடம்புயத்துச்
செங்கடம்பார மளித்தாலுய்வாளென் சிறுமியன்றே. (௪0௬)

விலகாமைவேண்டல்.

கேடற்றதென்னரு ளுபுரிமேய கிளிப்புலவன்
பாடற்சுவைபொரு மென்மொழிப்பேதைநின் பன்னிருதோட்
கூடற்குறிப்பின ளியாதோவிழைந்தன்று கொண்டுளசிற்
றாடற்கொதுங்குற லாமோசெந்தூரி லுறைகந்தனே. (௪0௭)

மகணலம்பகர்தல்.

நீடியசெங்கரும் புச்சிலைபான்சமர் நேர்ந்தமையால்
வாடியவல்லிக் கொடிபோனுடங்கிமுன் மாழ்கியவ
ளாடியதோகை மயிலூர்செந்தூரநின் னங்கதத்தோள்
கூடியபின்னுவப் புற்றுளனது குலமுய்ந்ததே. (௪0௮)

வருநாள்வினவல்

கொக்கன் றுதுண்டு படவாரிசெக்கிறங் கொள்ளவென்று
நிக்கந்தமும்புகழ் சிர்தோய்செந்தூரநின் றிண்புயத்தா
லிக்கன்சமர்விளைத் தேங்கிப்பாதவித் தென்மகடன்
மைக்கண்பிசைந்தழு தாளென்றுநீயங்கு வந்தெய்தலே. (௪௦௯)

எமாற்றேண்ணுதேனல்.

வாமாங்கனையுடை யார்நுதற்கண்ணிடை வந்தசெந்தூர்க்
கோமானிற்கூடுவ தென்றேருவென்றேலிடுங் கோதைகண்முன்
னீமாத்திரந்தனித் தேகித்தொடாவண்ண நின்றுமறைந்
தேமாற்றிடத்தகு மோவினுன்மேன்மைக் கிசைந்ததன்றே. (௪௧௦)

கோதிலாளேன்றல்.

அன்பேவடிவமுற் றுலன்னதொண்ட ரனுகுஞ்செந்தூர்க்
கின்பேவிளைக்க வருங்குமரநின் னெழிற்பவனி
முன்பேமயங்கி வெகுபாடுபட்டு முயங்கிமகி
ழென்பேதைகுற்றமொன் றில்லாளிருக்கினிற் கேற்றமின்றே (௪௧௧)

மகள்பேறுவியத்தல்.

பொன்மழுவேந்துங் காத்தாருமெச்சும் புகழ்ச்செந்திலாய்
நின்மருங்குற்றவர் நிற்கமற்றெங்கு நிறைந்துவளர்
பன்மடவாரு ளுனைக்கூடியின்பம் பருகுநலத்
தென்மகள்பெற்ற பெரும்பேற்றின்சில மெவர்க்குளதே. (௪௧௨)

கரையேற்றம் வினவல்.

கச்சைத்திருவரைக் கந்தாசெந்தூர்வளர் காவலவா
பிச்சைத்தவமுடை யாரருளாற்பெற்ற பெண்குழந்தை
செச்சைப்புயநிரை மேற்கொங்கைதோய்தரச் சேர்வதற்கா
மிச்சைக்கடலுள் விழுந்ததெந்நாள்கரை யேறிடுமே. (௪௧௩)

உணர்வொடு மாழ்கல்.

கோல்லாமற்கொல்கொடுங் கூற்றுறழ்காமன் குவளைமல
ரல்லாதநான்குமெய் தாய்விட்டதின்ன மதையெடுப்பா
னெல்லார்வயற்செந்தில் வாழ்வாயுலக நிகழ்த்துவன
வெல்லாமறிந்த வுனக்கினிநான்சொல்வ தேதுளதே. (௪௧௪)

ஒப்புக்கேட்டல்.

மோகமின்னுரிடம் பொய்பேசலாமென முன்னைமறை
பாகமஞ்சொல்லி யதுபோலவென்ற னருமைமகள்
பாகமிர்தன்னசொற் கேட்டும்பல்வாறு பகர்ந்திலையோ
வேகசொரூபத்த னேசெந்தின்மேவு மிறையவனே. (௪௧௫)

ஏழைக்கிதஞ் சொல்வதேனெனல்.

மாழைக்குவடறழ் கொங்கைநல்லாளிடம் வந்துமுன்னை
யூழைத்தவிர்க்கும் வலியுமுள்ளேனென் றுறுதிசொல்லிக்
கீழைச்சிறிது முலைநோக்குமுன்னங்கு கிட்டல்விட்டி
ரேழைக்கிதஞ்சொல்ல லாமோசெந்தூரி லிருப்பவரே. (சகசு)

அலுப்பொடு சினத்தல்.

இத்தனைதூரந் தெருவீதிதன்னி லிழுத்தென்மகள்
பித்தடைந்தாரிற் றடுமாறத்தக்க பிரமைநல்கிப்
பத்தமில்லாத குறக்குணங்காட்டப் படாதுகண்டாய்
முத்தமிழ்த்தேசிக னேசெந்தில்வாழு முருகையனே. (சகஎ)

உறுத்திக்கூறல்.

காவாரும்பொன்னகர்க் காவல்கொள்வானைக் களிக்கவைத்த
தேவாதிதேவசெந் தூர்முருகாநின் றிரள்புயத்தின்
மேவாமகிழ விரும்புகின்றாளை வெறுத்தனையேன்
மூவாமறைமுழு தோர்ந்தாயென்றோதன் முழுப்பிழையே. (சகஅ)

இகழ்ச்சிகண்டிரங்கல்.

முப்பத்துமூன்று வகைக்கோடிதேவர்தம் மூதுணவிற்
செப்பத்தகுஞ்சொல் லுடையாளைக்கண்டு சிரித்தொருபாழ்ங்
கொப்பத்தில்யானையை வீழ்த்தலினீமுன் கொடுத்தமைய
றுப்பக்கழிவு படலாகுமோசெந்திற் சுந்தரனே. (சகசு)

புணர்ப்புரையென்றல்.

கொன்றைத்தொடையணி செஞ்சடையாருங் குரவனென
வன்றைக்குப்போற்ற வருங்குமராசெந்தி லாதிபனே
யின்றைக்குங்காமன் கணையாற்றளர்வுறு மென்மகளை
யென்றைக்குத்தான்புணர் வாயளவாவின்ப மெய்துறவே. (சஉ௦)

இழிவுனக்கென்றல்.

காலபயந்தவிர்த் தோர்வேதியற்குக் கருணைசெய்தார்
பாலனெனவந்து ளாய்செந்தில்வேலநின் பன்னிருதோட்
கோலநினைந்துமற் றெல்லாமிழந்து கொதிகொதிக்கு
மேலநெடுங்குழ லாடுன்பமெய்தி லிழிவுனக்கே. (சஉக)

நிசமொழி விழைதல்.

கன்மோகமங்கை யுருவாகச்செய்த கழற்பெருமான்
றன்மோகனமரு காசெந்தில்வாழுந் தமிழ்க்குகவென்
மின்மோகநின்மிசை கொண்டதுண்டந்த விளங்கிழைமே
னின்மோகஞ்சற்று மிலையோமுக்காறு நிசஞ்சொல்லிடே.

உடன்வர வழைத்தல்.

மன்றுவந்தாடும் பிரான்மைந்தரேசெந்தில் வாழ்கந்தரே
யொன்றுசொல்கின்றனன் றள்ளாதுகொள்ளு முமைக்கலந்த
வன்றுதொட்டின் றுமட் டுந்தினந்தேடி யழுங்குமவ
ளின்றுவந்தோர்மொழி நீர்சொல்லவேண்டி யெனைவிட்டதே. (சஉக)

மகவாசைகாட்டல்.

பற்றலர்தம்மையெல் லாமெமன்வாழ்நகர் பார்க்கவிடுங்
கொற்றவைவேற்குக னேசெந்தின்மேவுங் குணக்கொண்டலே
சிற்றனநேர்நடை யாள்சொனிட்டரேஞ் செவிவழிபோய்ப்
பெற்றவயிற்றை யுடனேதிருக்கிப் பிசைகின்றதே. (சஉச)

தன்றேடர் பொழிந்தல்.

தென்றமிழ்க்குன்றுடைத் தேசிகன்போற்றச் சிறந்தசெந்தூர்
மன்றகத்தாடுங் குகனேநின்மோக வலையிடைப்பட்
டென்றனைவைத் துணிந்தாளுக்கெய்துறு மின்பதுன்ப
முன்றனக்கேயல்ல வோவெனக்கேதுசொல் லுற்றுணர்ந்தே. (சஉரு)

---

பாங்கி பாங்கன்முற்கூறுவன.

பழித்தலிற்புகழ்தல்.

என்றலைவிக்கெதி ரானையைக்காட்டி யெழிற்புனத்தி
லன்றணைந்தானிச்சை யில்லானையிங்ங னடைதனன்றே
குன்றனைத்தும்புகுந் தாடிச்செந்தூர்வரு கொற்றவனை
முன்றலைவன்பொரு காமுகனாரு முலகிலின்றே. (சஉசு)

தலைவனைக்குறிப்பிற்றூழ்த்திக்கூறல்:

எங்கள்பிராட்டிதன் மேன்மதவேள்கணை யெய்தறியா
துங்கள்பிரானையு மெய்திலனேவிங் குரைக்குமிவர்
தங்களின்மேலெவர் தாழ்வாரெவர்பகர் தண்பனிநீர்ச்
செங்களபம்பொலி சீர்ச்செந்திலான் றுணைச் சேவகனே. (சஉஎ)

தலைவனிரக்கமிலானேன்றல்.

கன்னலம்பாகுறழ் சொற்குறப்பேதையைக் கள்ளுமன்று
பின்னடர்ந்தோர்களைக் கொன்றுனவளமும் பெற்றியினு
லன்னவருந்தனர் செந்தூரில்வாழு மறுமுகவ
வின்னருட்சிறுடை யானெனக்கூறுவ தெவ்விதமே. (சஉஅ)

தலைவனிளையானென்றல்.

மாடேறுமீசன்றன் மைந்தன்செந்தூரில் வருமடியா
ரீடேறச் செய்யவல் லானெங்கள்பாவைக் கிசைந்தவனோ
வாடேறிப்பார்ப்பதி தன்முலைப்பாலுண் டுளவின்மலை
காடேறியாடிக் களிகூரத்தக்கதோர் கான்முளையே. (சஉக)

ஒத்துரையயென்றல்.

தீயொருகையி லுடுக்கையொர்கையிற் செறித்தபிரான்
சேயொருமைப்புகழ்ச் செந்தூரன்மாலிற் சிறந்தமின்னு
டாயொருபாதகி செய்துயரான்மிகத் தட்டழிந்தா
ணீயொருவேளையென் னோடொத்துநின்று நிகழ்த்தினன்றே. (சகo)

சகிப்பரிதென்றல்

காயுங்கதிரயிற் கையான்செந்தூர்வளர் கந்தனன்பிற்
றோயுங்கொடியிடை யைக்கன்னல்வேளுந் தொனிக்கடலும்
பாயுந்தென்காலுங் குயிலாதியவும் பகைத்ததன்றித்
தாயும்பகைத்தனள் காணிதுபாவஞ் சகிப்பரிதே. (சகக)

தன்னுடன் சேர்த்துப்புகழ்தல்.

தாமக்கடம்பணி செந்தூர்க்குமரன் றனக்குமவ
ளுமக்கதிரயிற் றோள்வேட்கையாளுக்கு நாமிருவர்
சேமக்குறிப்புரைக் கின்றபண்பாலவர் சிந்தைகொண்ட
காமக்கடலின் கரைகாட்டும்வண்மைக் கலமொப்பமே. (சகஉ)

தாங்காமை கூறல்

நற்றேவர்கோன்முத லோர்தொழுதேத்த நவிலுஞ்செந்தூ
ருற்றேதந்தீர்க்கவல் லானுயிர்த்தோழமை யுள்ளவள்ளால்
பொற்றேரனையவல் குற்பெரும்போகம் புணர்த்துமவன்
சற்றேபிரியினுந் தாங்காளெனது தலைமகளே. (சகங)

செய்தி வினவல்.

கோலாகலமயி லூர்ந்துசெந்தூர்வளர் கொற்றவன்கை
வேலாயுதம்பொரு கண்ணுளென்றன்னை வெறுத்திகழ்வாண்
மாலானவர்க்குள்ள பண்பெனத்தேறி மகிழ்ந்துகொள்வேன்
சேலாருங்கேதனத் தானனையாயங்குன் செய்தியென்னே. (சகச)

கண்களைப்புகழ்தல்.

திண்கழற்காலுடைச் செந்தூர்க்குமரன் றினைப்புனத்துப்
பெண்கள்சிகாமணி யைத்தேவர்கோன்றரு பெய்வளையைப்
பண்கலுழ்செச்சைப் புயத்தாற்றொடுதலும் பார்க்குகந்தங்
கண்கள்செய்புண்ணியத் தைச்சேடனலுங் கழறரிதே. (சக௫)

குறையின்மைகூறல்.

அஞ்சியலக்கரத் தார்மைந்தனுறெழுத் தாள்செந்திலான்
விஞ்சியசிர்ச்சந்த வெற்புடையானிரு மெல்லியலார்
நெஞ்சியல்போர்க்கவர் தாமகிழ்ந்தேத்த நிதமணையிற்
கொஞ்சியவாழ்வுள்ள நாமைக்கேதுங் குறையில்லையே. (சஙௌ)

முற்றிற்று

---

நூற்பயன்

வெல்லுமருட்பெறு வார்செல்லுமாறு விடுத்தமைபோற்
சொல்லுமகப்பொரு ளீதுசெந்தூர்க்குகன் சூடியது
கல்லுமுருகக் கனிசுவைத்தாமெனக் கற்றுநித்த
மல்லும்பகலு முணர்வாருக்கில்லை யருவினையே.

---

வேலுமயிலுந்துணை.

---

# குருபாதமேகதி.



உ

முருகக்கடவுடுணை

# கௌமாரவிஜயம்.



காப்பு.

செக்கச் சிவந்தகழற் செந்திலான் சீரருட்கா
மிக்ககவு மார விசயத்தின் - றக்கதுணை
பாலுறழ்வெண் சேவலொடு பைங்கிளியும் பன்னிருகை
வேலுமயில் வாகனமு மே.

நூல்.

முதலாவது

## அவதாரம்.

வேதாகமம்பலவு மொழிவரியபொருளாகி மெய்த்தவர்க் கறிவுமயமாய்
விண்ணவர்தமக்கின்ப வெள்ளமாயரசர்க்கு வீரமொடுவென்றியாகித்
தாதார்மலர்த்தொகையின் மணமாகிவேதியர் தமக்கெலாம்பிதிர்களாகித்
தண்டமிழ்ப்புலமையுணர் கின்றவர்க்கெண்வகைச் சந்தங்களாகியெங்கும்
பூதாதிபௌதிக மனைத்துமாநிறையுநின் பூரணசொரூபமென்றன்
புந்தியினிலமையவிலை யாதலால்வேற்படை புனைந்தொளிருநின்சகளமே
யாதாரமெனநம்பி வாடுகின்றேன்விரைவி லவதாரமாகியருளே
யலைவளம்பொலிசெந்தி னகரில்வந்தமர்குமர வவதாரமாகியருளே. (க)

திருமகள்பிரானவன் கரமருவுமாழியைத் திதியுடனிழந்தகாலஞ்
செங்கமலமலர்வேத னவுணர்சொல்லியவாறு சிட்டிபுரிகின்றகாலந்
தருநிழலின்மகபதி தறைக்குளொருவேயாய்த் தயங்கித்தவித்தகாலந்
தவமுனிவரனைவருஞ் சாவினுக்கஞ்சித் தனித்தனியொளித்தகாலம்
பருமலர்த்தொடையமரர் பன்னியர்கடம்மொடும் பணிசெய்திடைந்தகாலம்
பரமனுதல்விழியினிடை வந்தாயெனப்பலர் பகர்ந்திடுவதுண்மையாகி
லருமறையுமாகமமு மழியாதவண்ணமோ ரவதாரமாகியருளே
யணிபொழிற்செந்தினக ராளுமுருகேசனே யவதாரமாகியருளே. (உ)

வளமிகுந்தென்மதுரை நகரிலொருவழுதிமகன் மதலையெனவடிவெடுத்து
மலயவரைதனினிலவு குவடினங்களின்மேய வருமுகிற்றனையிலிட்டுப்
பளபளபளீரென் றிலங்கும்வேலாற்பெருவில் பரவைநீரைக்குறைத்துப்
பைம்பொன்மகமேருவைச்செண்டாலடித்ததுபணிந்துதவுதிறைகொணர்ந்து

தளமலிபெரும்போர் வலாரியணி மகுடந் தனைத்தகர்த்துக்களித்துத்
தாங்கரியவாரந் தடம்புயத்திடைகொண்ட சாதமறைவுறலாகுமோ
வளவறுபெரும்புகழ் விழைந்திந்தநாளினுமொ ரவதாரமாகியருளே
யன்பர்பலர்சிந்தைமகிழ் செந்திநகர்வந்தருக வவதாரமாகியருளே. (ங)

காழிபிற்கவுணியன் புரிதவப்பயனுப கான்முளையெனப் பிறந்து
கமலமலர்வாவியரு கழுதுமைகொடுத்தபால் கனிவாய்மடுத்தவலியா[மாற்றி
லேழிசைக்களிமழை பொழிந்தமணர் தங்கொடுமை யென்னும்வெங்கோடை
யிரிருமறைக்குரிய மூவிருவகைச்சமய வினமெனும்பயிர்விளைத்துப்
பூழியனுடற்சுரங் கூனொடுதவிர்த்துவெண் பொடிநலம்பொலியவைத்துப்
பொருவருமணங்காண வருமவரெலாம்வீடு புகுதப்புரிந்ததுண்டே
லாழியைக்கலியா யணிந்தவள்விரும்புமோ ரவதாரமாகியருளே
யருளாடன்மலிசெந்தி னகர்மேவுகந்தனே யவதாரமாகியருளே. (ச)

கடிமலர்ப்பொழின்மருவு மலயமால்வரையில்வளர் கடவுண்மாமுனிவனுக்குங்
கானவலிமிகுவீணை நாரதற்குஞ்சிலைக் கைகொண்முசுகுந்தனுக்குந்
தொடியணிகரத்தொரு மடந்தைக்குமலகையாற் றுயருறும்புலவனுக்குஞ்
சோணசலத்தருகி லுறுகோபுரத்திற் றொழும்புபுரிதொண்டனுக்கும்
படியிலிப்படிமற்று முள்ளபலகோடிமெய்ப் பத்தர்க்கும்வர்மனத்தின்
பாவனைப்படிவந்து தீவினையகற்றிப் பதங்கொடுத்தருளனிசமே
லடியனேனுள்ளகத் தெண்ணுமவ்வண்ணமே யவதாரமாகியருளே
யலைவாயுகந்துதின மகிழ்செந்திலாதிபா வவதாரமாகியருளே. (ரு)

குருவடிவமாயிரங் கொண்டுபலசமையமுங் குன்றுது நிறுவியதுவுங்
கோலக்குறிஞ்சிதொறு மகலாமலாடல்புரி கொள்கைக்கிசைந்தபுதமுந்
திருவருள்வினோதங் குறித்துருகுகவுமாரர் சிந்தைதொறு நின்றநலமுந்
தெய்வங்களத்தனையு நானெனச்செவ்வாய் திறந்துரைவிளம்புதிறமுஞ்
சருவமந்திரசார மாகியசடாக்கரந் தன்னொடுகலந்தநிலையுந்
தமிழ்விரகனென்றுள்ள நாமமும்பிழையாது தமியனேன் விழிகள்காண
வருவென்னுமீராவி யாயதொருசகளமா யவதாரமாகியருளே
யந்தரர்குலம்பரவு செந்திநகர்வேலவா வவதாரமாகியருளே. (கூ)

வேறு.

பொடியார்தருவெண் ணிறத்தினராய்ப் புரைதீர்மணிப்பொற் பூணினராய்ப்
பொருந்தாதிகல்பன் னெறியோர்க்கும் பொதுவாகியகல் லாடையராய்ச்
செடியார்வேடக் குலமயிலைத் தெய்வக்களிற்றின் றிருமகளைச்
சினவேற்படையே முதலாய சின்னங்களைப்போற் றிசைப்பவராய்க்

கொடியார்சோலைக் குறிச்சிதொறுங் கும்பிட்டிறைஞ்சுங் குணத்தினராய்க்
கூடிக்களித்துப் பொருசேவற் கொடியேயுயர்வா மெனக்கூவு
மடியார்மறுகித் தவியாம லவதாரஞ்செய் தருள்வாயே
யழகார்செந்திற் பதிக்குகனே யவதாரஞ்செய் தருள்வாயே. (எ)

வெயிலார்பரிதி பலகூடி மிளிர்ந்தாங்கிலங்கு திருமேனி
வியனுங்கமல மலரேபோல் விளங்குமுகங்க ளிருமூன்றுஞ்
சயிலாகரம்போற் கடம்புசூழ்த் தழைத்தபுயங்க ளாறிரண்டுஞ்
சடிலப்பிறைப்புங் கவன்பணியுஞ் சரணத்துணையுந் தமநியச்சீர்
மயில்வாகனமுஞ் சிறையடித்து வானோர்மகிழப் பெரிதார்த்து
வருவாரணமுந் தமிழ்ப்பனுவல் வழங்குங்கனிவாய்ப் பசுங்கிளியு
மயிலாதியவு மறையாம லவதாரஞ்செய் தருள்வாயே
யலையார்கடற்செந் தூரரசே யவதாரஞ்செய் தருள்வாயே. (அ)

சீர்க்கந்தரமுண் டளிகூருந் திரைநீர்க்கடலுஞ் சினைச்சங்குஞ்
சேவற்றிரளு நடம்புரியுஞ் சிகண்டிக்குலமுஞ் செழும்பொழிற்பூ
வார்க்குமதுமாந் தருகானும் வன்னக்கிளியுங் கருங்குயிலு
மடற்பூம்பனைவா ழன்றில்களு மடவார்புணையு மணிச்சிலம்பும்
வேர்க்கும்புருவக் கடைசியர்கண் மிகுநீர்ப்பணையி லிடுங்குரவை
வியனும்புலவோர் தமிழ்த்துதியும் வேதாகமமும் விரவுமொலி
யார்க்குந்திருச்செந் தூர்க்குகனே யவதாரஞ்செய் தருள்வாயே
யடியார்பலருங் களிகூர வவதாரஞ்செய் தருள்வாயே. (௯)

## வேறு.

தனதனதந்தன தனதனதந்தன தனனாதந்தனனா

சுருதிவிளம்பிய நெறிவழிசென்றவர் துயர்கூர்கின்றனரே
துகளறுசெந்தமி ழுணர்பவர்தங்கவி தொலையாதுந்தியவே
மருமலர்சிந்தியும் வழிபடுமன்பர்கண் மனநோவொன்றினரே
வனசரரும்புலை யசுரர்களுங்களி மலிசிர்கொண்டனரே
யுருவைவணங்குதல் பிழையெனும்வண்டர்ப லுடலூனுண்டனரே
யுலகபரம்பரை யலதிலையென்றுசொ லுரையார்விஞ்சினரே
யருண்மலியுந்திரு வுளமுளதென்றிடி லவதாரம்புரியே
யழகியசெந்திலி லநுதினநின்றவ வவதாரம்புரியே (௧௦)

தந்தனதந்தன தந்தனதந்தன தனனாதந்தனனா

சந்தமொழிந்துவ ணங்கியதொண்டர்க டமையாரும்புகழ்வார்
சஞ்சலமின்றிய நெஞ்சமுறுந்தவர் தனிவீடொன்றிடுவார்
வெந்தறுகண்கொடி கழ்ந்திடும்வஞ்சகர் விறலார்வங்கெடுவார்
விந்தைமிகும்பல மந்திரதந்திரம் விழைவார்கண்குளிர்வார்

சுந்தரமங்கையர் கண்டுகலன்பல தொகுதோளும்புணர்வார்
துங்கவயம்பொலி யும்படைகொண்டுபர் சுரரேயின்புறவா
ரந்தணர்தங்கரு மந்தழையும்படி யவதாரம்புரியே
யங்கசனும்புகழ் செந்திலில்வந்தவ வவதாரம்புரியே. (கக)

தானனதந்தன தானனதந்தன தனனதந்தன

ஆரணமும்பல வாகமமும்பக ரவதாரம் புரியே
யாதியுமந்தமு மாகிவிளங்கிடு மவதாரம்புரியே
யாரணியுஞ்சடை யாரும்வியந்திடு மவதாரம்புரியே
யாழ்கடலுண்டுயர் மாமுனிவன்றொழு மவதாரம்புரியே
யாரகரும்பனி நீபமுடன்றிரு வவதாரம்புரியே
யாழியெனுங்கலை யாண்மகிழுந்தனி யவதாரம்புரியே
யாரமுதுண்டவ ரூர்தழையும்படி யவதாரம்புரியே
யாசறுசெந்திலில் வாழ்வுறுகங்குக வவதாரம்புரியே. (கஉ)

---

இரண்டாவது

## தெரிசனம்.

அத்திரமெனத்திகழ்வி ழிச்சிறுமியர்க்குருகி யாடகந்தனிலவாவுற்
றறுதினம்புல்லர்மனை தொறுமிரந்தலைவேனை யாண்டுகொண்டங்கைவேலின்
பத்தியிலமிழ்த்தித் தமிழ்க்கவிதைபாலவாறு பாடிடுந்திறமைநல்கிப்
பழையகதையுஞ்சில பகர்ந்தனைநினைந்துவகை பாராட்டிடாமலடியேன்
றத்திரமிகுத்துத் தவித்துத்துயர்ப்படுந் தன்மையறிகில்லாய்கொலோ
சரதமாகக்கனவில் வருவதெனநனவிலுந் தமரியக்குவடுபோலுஞ்
சித்திரமயிற்பரியின் முதுகிலொருதரம்வந்து தெரிசனந்தரவேணுமே
செந்திலம்பதிவாழ வந்தகுமரேசனே தெரிசனந்தரவேணுமே. (க)

அறுதியாகுமொரு மூவகையுமாகிநின் றகிலபுவனங்களெங்கு
மளவில்பலவிளையாடல் புரியுநின்திருவடிக் காசையுற்றவர்கள்போன்று
நாறுவேறுமொரு தெய்வமுண்டெனவம்பி னவில்கின்றநாருமேச
நானிலத்திற்றளரு நானினைத்திட்டபடி நடவுமெய்க்கருணையின்றேற்
கோறுதுவந்துவந் தொருமொழியையாயிரங் கோடிதரமொழிவதேனே
கூறியவைமுற்றும்பொ யென்பதல்லாதுண்மை கொஞ்சமாகிலுமிருந்தாற்
சேறுடருக்கும் பெறற்கரியதாயநின் றெரிசனந்தரவேணுமே
திருவருள்வளம்பெருகு செந்திநகர்வேலவா தெரிசனந்தரவேணுமே. (உ)

தந்திக்குலம்பெருகு பொதியைவரைதருபொருநை தன்னின்முன்சொன்ன
நடநிலவுதிருமலைக் குவடேறிவீழ்கையிற் சாகாதனித்தலமு [சொல்லுக்
மந்திப்பிறைச்சடில ரண்ணாமலைச்சிகரி யதனருகழைத்தவுறவு
மடியவர்தம்வடிவமொடு வந்திலைவிபூதியொன் றருளியதுமனையபிறவும்
பிந்திக்கடற்புவியி லுள்ளவரும்வானொடு பிலத்திற் பிறங்குவாரும்
பேசிக்களிப்புறச் செய்யுமெய்ப்பிரியநின் பெற்றியினிலுற்றதுண்டேற்
சிந்தித்தவண்ணமென் கனவினொடுநனவினுந் தெரிசனந்தரவேணுமே
திரைகடன்முழங்குந் திருச்செந்திலாதிபா தெரிசனந்தரவேணுமே. (௩)

அருமறைமுடிப்பிலோ வாகமப்பொருளிலோ வண்டபகிரண்டத்திலோ
வாறெழுத்தோதுமவர் நெஞ்சத்திலோமலைக ளளவிலாதனவற்றிலோ
கருமத்திலோவலது பாசனைப்பொலிவிலோ கழறரியஞானத்திலோ
கைக்கிளிநிகர்த்தபல கவிவாணர்நாவிலோ கடவுளர்தமவைதன்னிலோ
புருவமத்தியினிலோ கவுமாரநெறியாளர் புகலுமெத்தானத்திலோ
போர்வேல்பிடித்துநீ நின்றாடுகின்றதென் புந்தியினினைந்தவண்ணந்
திருவருட்பெருமையில கும்படிதினந்தொறுந் தெரிசனந்தரவேணுமே
செங்கண்மான்மருகனே செந்தில்வாழ்முருகனே தெரிசனந்தரவேணுமே.

பைந்தமிழ்ப்பனுவல்பல பாடியுனதம்புயப் பதமலர்க்கிடுவதற்கும்
பழையநெறியாறுஞ் சிறந்துபுலைமார்க்கங்கள் பாழ்படச்செய்வதற்குங்
கொந்தவிழ்மலர்ப்பொழிற் குவடுதோறுமடியார் குழாத்தொடுகுலாவுதற்குங்
கொதிதிரைக்கடலினொடு கனல்கவர்ந்துள்ளபொருள் குறையாதுகொள்வ
சிந்தனைப்படியெங்க ணுஞ்சென்றுபலவாறு சித்துவிளையாடுதற்குஞ் [தற்குஞ்
சேவலங்கொடியே செயஞ்செயமெனக்கூவு திறனுற்றுமகிழ்வதற்குஞ்
செந்தகைச்சிகியிற் றிருக்கைவேலுடன்வந்து தெரிசனந்தரவேணுமே
செந்திலம்பதிமகிழ வந்திலங்கியமுருக தெரிசனந்தரவேணுமே, (௫)

கந்திப்பொதும்பர்மட விடைதுயிலுமரியினங் கழனியிற்குவளைமலருங்
கமலமலருஞ்சொரியு மதுவருந்திக்களிகொள் கயலினம்பிறழ்வதஞ்சித்
தந்திக்குலம்பிளிறு மொலியையிடியேறெனத் தடமாதிமுகிலுலாவுந்
தண்டலைத்தேமாவி னிற்பலவினிற்பாய்ந்து தங்குணங்கொண்டுகனிகட்
சிந்திக்களிக்கவவை திருவருள்விரும்புமவர் செய்தவத்திற்குதவியாய்ச்
செம்பொனகரிற்புலவ ரமிழ்தினைவெறுத்திகழ் திறம்பெருக்குஞ்சிறப்பார்
செந்திற்பதிக்குமர குருபரகுகாவின்று தெரிசனந்தரவேணுமே
தெளிதமிழ்க்குறுமுனிக் கருள்புரியுமுருகனே தெரிசனந்தரவேணுமே. (௬)

## வேறு

அம்பொற்குடநேர் முலையணங்கார்க் கரசியொருபாற் றினைப்புனத்தி
னரிவையொருபாற் களிகூரு மழகார்குகனே யவுணேசன்
கொம்பொற்றையினு லாகுவுருக் கொள்ளப்பொருதார்க் கிளையோனே
குறிச்சிதோறு நடம்புரியுங் குளிர்தாமரைத்தாட் குருபரனே

பைம்பொற்குழைக்கா தாறிரண்டு படைத்தகருணைப் பரம்பொருளே
பங்கேருகத்தான் மறைநான்கும் பகர்வாய்கதறப் புடைத்தோனே
செம்பொற்சிலையார் தருமதலாய் சிகியிற்றருவாய் தெரிசனமே
சீரார்திருச்செந் தூராரசே சிகியிற்றருவாய் தெரிசனமே. (எ)

முற்றமுணையே கதியெனநான் முன்னித்துதிக்கை யறியாயோ
முன்னுளெனது கனவினிடை மொழிந்ததனைத்து முழுப்பிழையோ
பற்றுநலம்வே றுளதுகொலோ பலருமிகழ்தற் பார்த்திலையோ
பன்னீரிலையிற் றிருநீற்றைப் பரிந்தன்றளித்தோ னீயலையோ
வெற்றமுறுறற்கான் மாலியானைக் கிடைந்தநாளிற் புரந்தொருசொல்
வியம்புங்கருணை யிழந்தனையோ வினியெந்நாளி லிரங்குவையோ
சற்றுனருட்சீர் விழைந்துள்ளேன் றகரிற்றருவாய் தெரிசனமே
சந்தாசலச்செந் தூர்க்கிறைவா தகரிற்றருவாய் தெரிசனமே. (அ)

தங்கமலைபோற் பொலிவெய்தித் தவளநிறமும் பிறையினம்போற்
றழைத்தமருப்பு மருவியெனத் தட்டாதொழுகு மதங்களுங்கொண்
டங்கமசைத்துத் தலையுயர்த்தி யமுதகவள மிகப்பருகி
யதினுமடங்காப் பசியதனு லைந்துதருவி னடர்கிளையும்
பங்கப்படவே முறித்தருந்திப் பகைவாளவுணர் குலமழித்துப்
பைம்பொற்கிளிப்பா வலன்பகரும் பனுவற்கவிபோ னடைகாட்டுஞ்
செங்கட்களிற்றின் பிடரேறிச் செவ்வேதருவாய் தெரிசனமே
செந்தூர்க்குமர குருநாதா செவ்வேதருவாய் தெரிசனமே. (கூ)

## வேறு

தனதனதந்தன தனதனதந்தன தனதனதனதான

தவமுயல்கின்றவர் பதமலரின்புடை தருதுகள்புனையேனே
தமிழ்கொடுசந்தத முனதுபெரும்புகழ் தனைமிகமொழியேனே
கவலைதவிர்ந்துன தடியருடன்கிரி களின்மிசைவசியேனே
கனியிலைதின்பவர் தமையிகழ்வம்பர்செய் கலியறமுனியேனே
பவளநெடுங்கிரி நிகருனையன்பொடு பகலிரவுணரேனே
பழுதில்வரம்பெறு புலவர்களன்றுகொள் பலகையுமடையேனே
சிவனும்வணங்கிய குருபரனென்றெனிர் தெரிசனமருள்வாயே
திருவளர்செந்திலில் வருகுகவின்றொரு தெரிசனமருள்வாயே. (க0)

தனதானத்தன தனதானத்தன தனதனதனதான.

புலைமீறச்செயு மவராள்கைக்கிடை புவிமகளழுவாளோ
புரைதீர்பொற்பரு டிருநீறக்கொடு புனைபவர்மெலிவாரோ
கலைமாதொத்தொளிர் புலவோர்பற்பலர் கலியிடைதளர்வாரோ
கருகூலத்தமி ழுணராவற்பர்கள் களிமிகையுறுவாரோ

தலையாறக்கர மெனநேசிப்பவர் சலனமதடைவாரோ
தனிவேலைச்சிகி யினைநாடிப்புகழ் தவர்களும்வெருள்வாரோ
சிலைவேடக்கொடி புணர்தோளுற்றவ தெரிசனமருள்வாயே
திரையாழித்திர ளலைவாயுற்றவ தெரிசனமருள்வாயே. (கக)

தந்தனதந்தன தந்தனதந்தன தனதனதனதான.

திந்திமியென்றுசி கண்டிநடம்புரி தெரிசனமருள்வாயே
செங்கண்முகுந்தன யன்றினமும்புகழ் தெரிசனமருள்வாயே
செந்திருவுங்கலை மங்கையுமன்புறு தெரிசனமருள்வாயே
சிங்கமடுஞ்சர பன்சிவைகண்குளிர் தெரிசனமருள்வாயே
சிந்திசைவிண்டுதொ ழுஞ்சிலரும்பெறு தெரிசனமருள்வாயே
தென்றல்வளம்பொலி குன்றினனெஞ்சுணர் தெரிசனமருள்வாயே
செந்திலில்வந்துவி ளங்குமிளங்குக தெரிசனமருள்வாயே
செம்பொருள்கண்டுது ணிந்துகொளும்படி தெரிசனமருள்வாயே. (கஉ)

---

மூன்றாவது

## விளையாடல்

செஞ்சுடரைவெண்சுடரெ னச்செய்துதிங்களைத் திகழொளிப்பரிதியாக்கித்
திரைகடல்கலங்கக் கரத்தாற்கலக்கிச் சிலம்பினங்களையெடுத்து
நஞ்சுறுபணடவிச் சேடனெடுகரிகளு நடுக்குறப்பந்தடித்து
நறுமலர்க்கற்பகத் தருநிழற்புலவர்குல நாணுறப்பொருதுவென்று
கிஞ்சுகவிதழ்க்கவுரி மகிழ்கூரவிளையாடல் கேட்டகன்றிக்கண்டிலேங்
கீழவர்தலைப்பட்டு மேலவர்வருந்துறுங் கெடுதிகண்டேமாதலா
லஞ்சுறுமனத்தகத் தானந்தவெள்ளம்வந் தடையவிளையாடியருளே
யருள்வளம்பொலிசெந்தி னகர்வேலவாவிழைத லடையவிளையாடியருளே.

சைவமுதலாகத் தழைக்கின்றவருணெறிச் சமையங்கண்மூவிரண்டுந்
தன்கிளையெனக்கொண்ட கவுமாரசமையந் தழைத்துமற்றுள்ளசமையப்
பொய்வழக்கத்தனையு மழவிடுபஞ்செனப் போவதுகுறித்துநாளும்
புந்தியிலுன்வடிவங்குறித்துநாவிடையாறு பொறிகளும்புகலவல்ல
மெய்வலிக்குரவனொரு வனையுண்டுபண்ணியவன் வேட்கைகளனைத்துநல்கி
விண்ணவருமண்ணவரு மெச்சத்தகும்புகழ் விளைத்தருளவல்லையாகிற்
றெய்வச்சிலம்புதொறு மகலாதுநின்றுபல சித்துவிளையாடியருளே
தென்டிரைக்கடல்பரவு செந்தில்வளர்கந்தனே சித்துவிளையாடியருளே. (உ)

சிலமுறுவழுதிமகள் பரிமுகங்கறைபற்ற திங்கண்முகமாகியதுவுந்
திரைகடலிலீழத் திருந்தொருவன்விட்டபொருள் சிந்தாதுவந்தெய்தலு
ஞாலமிகழுமைக் குழந்தையொன்றதிவித நயம்பொலிதமிழ்ப்பாடலு
நாறிக்கிடந்ததொரு பூனையுயிர்பெற்றதுவு நம்பித்தொழும்புசெய்வார்

காலபயமெய்தாது கந்தலோகம்பெறக் கருணைபுரிவதுவுமுதலாக்
கழறுவனமுழுமையுஞ் சரதமேயாமெனிற் கலிவெருண்டயரும்வண்ண
மேலவர்பெரும்புடை விரும்புறமருட்சித்து மிகவும்விளையாடியருளே
வென்றிதருசெந்திநகர் வந்தகுமரேசனே மிகவும்விளையாடியருளே. (௩)

பத்தரைக்கொடுகனைய ராமெனக்கருதியிகழ் பாதகருவப்பெய்தலும்
பைம்புற்கறித்துநுகர் பசுமேடமாதியாம் பல்லுயிர்வதைத்துவெந்து
துய்த்தகல்புவிக்குச் சுமைப்பெருக்காயவர் துங்கமுறுவென்றிபெறலுஞ்
சுவையொலிதிறம்பொருள் வியப்பார்தமிழ்க்கவி தொடுப்பவர்கலிக்கடற்குட்
பித்தரெனமறுகுவது மிவைபலயபலகோடி பிழைகளுங்கண்டுகண்டுன்
பெய்கழலிறைஞ்சித் தினந்தோறுமுறையிடும் பெற்றியறிகில்லாய்கொலோ
சித்தமகிழ்வுற்றுலகொ டடியேனுமுய்யவொரு சிறிதுவிளையாடியருளே
திருவாழ்வுமலிசெந்தி னகராளுமுருகனே சிறிதுவிளையாடியருளே. (௪)

சாலிகதிர்திரு மலைத்தலத்திற்புதுவை தன்னிலருணைசலத்திற் [சொற்கள்
தமிழ்வரைதரும்பொருநை நதிநடுவின்மலைநாடு தன்னின்முன்சொன்ன
வாலியமனத்தேனை வருத்துவதுசகியாது வந்துனதுமுன்புநின்றேன்
மாதவர்பெரும்புடையி னடுவைத்தெனக்கினிய வாழ்வெலாமுதவிவழுவா
வேலியதெனப்புரந் தன்பருக்கமுதமென மேவலாரனைவருக்கு
மீட்சரியவிடமெனத் தக்கதிருவாக்கருளி விழைவுற்றழைக்குந்தொறும்
பிலிநிழலிற்றெரிச னத்தந்துசலியாது பெரிதுவிளையாடியருளே
பெருகியற்செந்தில்வள நகருடைக்கந்தனே பெரிதுவிளையாடியருளே. (௫)

அரனரிவிநாயகன் பரிதியம்பிகைகுரவ னுகியமுகங்களாறு
மபயவரதம்பாச மங்குசங்கொடியாழி யயிர்கேடகஞ்சுரிகைவிற்
சாம்வயிரமுவிலைச் சூலமயிலாதிய தழைத்தபன்னிருதோள்களுந்
தண்கடம் புங்குவ மணியுமகன்மார்பமுந் தமிழ்வரைக்குறுமுனிவனோர்
பிரபலர்தொழுஞ்சரண வாரிசத்துணையும் பிறங்குமணிமகுடமுதலாப்
பேசுறுகலன்றொகையு மிருமகளிருரிமையொடு பிரியாமருங்குமிலக
மரகதகலாபக் குடைச்சிகிப்பரிமீது வந்துவிளையாடியருளே
வளமிகுஞ் செந்தில்வளர் முருகவென்சிந்தைமிசை வந்துவிளையாடியருளே.

## வேறு

தெண்ணீர்ப்புலவர் பலர்கவிதைத் திறத்தாலுலகாள் பவர்தாமுந்
திடுக்குற்றிறைஞ்சும் புகழ்தோயச் சீரார் மதுரைத் திருவாவித்
தண்ணீரதனூ டமிழ்ப்பலகை தறையில்விளங்கித் தமிழ்வளர்க்கச்
சைவர்முதலோர் களிகூரச் சமணரனையர் தவிப்பெய்தப்
பண்ணீடியகான் மறைபாதிப் பலநூற்கொருதா ரகமாகப்
பகருமெழுத்தா றுணர்த்துமுழுப் பரமானந்தக் கடன்மூழ்கி
வெண்ணீறணிவார் புடைசூழ விரும்பிப்புரிவாய் விளையாட்டே
விரூர்திருச்செந் தூரானே விரும்பிப்புரிவாய் விளையாட்டே. (எ)

ஆழிப்புனலிற் பெரிதார்க்கு மலைகளொதுக்குஞ் சிலைச்சங்க
மனந்தஞ்சினந்து பிரிவார்போன் றதனுண்மறுத்தும் புகுதாமற்
பாழிக்கரையு மணற்குன்றும் படர்ந்துகருப்பஞ் சோலையிற்போய்ப்
பருமைமிகையால் வெடித்திழிநீர் பமரக்குழுவி னுடன்மாந்திக்
கூழிற்பொலியும் வயல்வரம்பிற் குளிர்தாமரையிற் பசுங்கமுகிற்
குலைவாழையிற்சேர் திருச்செந்தூர்க் குமராவருகிற் குலவிருவர்
விழிக்கனிவாய் மலருநலம் விரும்பிப்புரிவாய் விளையாட்டே
விதிர்வேன்முருகா தமியேனை விரும்பிப்புரிவாய் விளையாட்டே. (அ)

சளம்புதயிலக் குழன்மடவார் தந்தோதகமும் பலவாய
தன்மைப்பெருக்குஞ் சிறிதேனுந் தட்டாதொழுகுந் தனிநடையு
முளம்புக்குருக்கு மதிநயமு மோசைப்பொலிவு முயர்பொருளு
மொள்வேற்றிறமை முதலாக வுரைக்கும்பெருமை யுள்ளனவு
மிளம்புற்கறிக்கு மானுதவு மெழிற்கோகிலத்தைத் தினைப்புனத்தி
னிதணிற்புரியு மணச்சிறப்பு மியம்பும்பிறவு மேய்ந்துளதா
விளம்புமருமைத் திருப்புகழ்நூல் விரும்பிப்புரிவாய் விளையாட்டே
விண்ணோர்புகழ்செந் தூர்த்தலைவா விரும்பிப்புரிவாய் விளையாட்டே (௯)

வேறு

தந்தனதந்தன தந்தனதந்தன தனனாதத்தனனா

கங்கையணிந்தவிர் செஞ்சடிலம்பெறு கவினார்பக்கலில்வாழ்
கண்டுரைமங்கையு டன்பகர்கின்றதொர் களிமீறக்கொளமால்
பங்கயனிந்திர னண்டர்பயந்தரு பகைதீரப்புலவோர்
பங்கமொழிந்துசு கம்பெறவங்கத பணமீதுற்றொளிர்வாள்
சங்கையொழிந்தபெ ருஞ்சுமைகொண்டுயிர் தவியாதுத்தமரே
தங்குநலந்திக ழின்புறநஞ்சுறழ் நகைதோய்நற்சனராம்
வெங்கணர்சிந்தைந டுங்குறவின்றொரு விளையாடற்புரியே
மிஞ்செழில்கொண்டுள செந்திலில்வந்தவ விளையாடற்புரியே. (௧௦)

தானாதனதன தானாதனதன தனனாதத்தனனா

கோலாகலமயில் வீராமலைதரு குகைதோறுற்றவனே
கோடாதுயர்கவு மாராதியர்பணி குருவாமுத்தமனே
சேலார்விழியுமை யாள்பால்பருகிய திருவாய்மிக்குடையாய்
தேகாதியைமதி யாதாரறிவுணர் சிவஞானத்தலைவா
மாலாலொருபுன மீதேகியதுணை மலர்நேர்பொற்சரணா
வாதாடியமுது சூர்மாவறவடும் வலிமேவப்பெறுமோர்
வேலாயுதமணி தோளாலொருவித விளையாடற்புரியே
மேலோர்புகழலை வாயூடுறைகுக விளையாடற்புரியே. (௧௧)

தத்தனதந்தன தத்தனதந்தன தனனதத்தன

வித்தைமிகுஞ்சிலர் சுத்துநலம்புனை விளையாடற்புரியே
　மெய்க்குருவென்றுவ மூக்குநரின்புறும் விளையாடற்புரியே
வித்தெனநின்றபொ ருட்பகரும்பெரு விளையாடற்புரியே
　விட்டுணுவும்புக மூத்திகழிங்கித விளையாடற்புரியே
மித்தையொழிந்தசு கத்தைவிரைந்தருள் விளையாடற்புரியே
　வெற்பினமெங்குந டித்துவருந்திரு விளையாடற்புரியே
மெத்தவுகொந்தவெ ன்க்கெனவிங்கொரு விளையாடற்புரியே
　விற்பனர்நம்பும ருட்குகசெந்திலில் விளையாடற்புரியே. (கஉ)

---

நாலாவது

## கருணை.

தருநிழற்புலவர்குல மவுணருக்கஞ்சாது சந்தோடமிகுதிபெறவுந்
　தண்டமிழ்ப்பாவலவர் வம்பர்முற்சென்றுதுதி சாற்றுதகன்மையுறவு
மருமறைச்சிரியர்த மறுவகைத்தொழில்பிறழ்ந் தகிலநிலைபெயராமலு
　மாசரிமைசெய்யுமவர் கொண்டகோலதுகோடி யநியாயமீறுமலு
மருமலியுமுல்லையந் தார்வணிகர்வட்டிக்கும் வட்டிகொண்டிழியாமலும்
　வண்குவளைமாலிகைக் காரர்தந்தொழில்விட்டு மறுதொழிற்செய்யாமலுங்
கருநீலகண்டத்தி னர்க்குமுன்னருள்செய்த கண்கொண்டுகருணைபொழியே
　கந்திமலிசெந்திநகர் வந்தகுமரேசனே கண்கொண்டுகருணைபொழியே (க)

வலியவலியச்சிலர் மனைக்குட்புகுந்துபல வண்டமிழ்க்கவிதைபாடி
　வாயிலுளபற்கண்முப் பத்திரண்டுந்தெரிய மனமெலிவனைத்துமோதிப்
புலியனையவீரங்க ளத்தனையுமறையப் புதைத்திரந்தவர்கொடுக்கும் [வுசெய்
　புன்பொருட்சிறிதுகொண் டானையெதிர்சோளப் பொறிச்சிதறல்போற்செல
தொலிதருகடற்புவியி லோயாமலலைவுற் றழன்றதுயரினிவந்துரு
　துன்னைநம்பிப்பெரிது நாடுகின்றேனென் றுரைத்தபடிதவறுமலென்
கலிமுழுதொழிந்தளவி லானந்தமெய்தநின் கண்கொண்டுகருணைபொழியே
　கஞ்சமலர்வாவிமலி செந்திநகர்வாழ்முருக கண்கொண்டுகருணைபொழியே.

தேனருவிதழிச் சடைப்பரமனுள்ளந் தெளிந்திடச்சிறிதுநோக்கிச்
　செங்கணெடுமாயவ னிழந்தவாழிப்படை திருக்காஞ்சேரநாடி
யினமறுநான்மறைப் புத்தேள்சிறைப்பட் டிடைந்தமறுபடியுய்யவிட்
　டிந்திரன்காவிரிக் கரையருகில்வேயுரு வெடுத்தமைதவிர்த்தெண்ணிலா
வானவர்தலைச்சுமை வருத்தந்தொலைத்தருணை மாநகரிலொருவன்முதலோர்
　வண்டமிழ்க்கவிதைபல மொழியக்கடாட்சித்து மலிதிணைச்சாரலிதணின்
கானவப்பிடியினைக் கண்டுகளிகூருநின் கண்கொண்டுகருணைபொழியே
　கப்பமதந்தியலி செந்தில்வளர்கந்தனே கண்கொண்டுகருணைபொழியே.

ருட்டுடைக்கனுழனுரு வொடுவந்துவிண்ணிற் றுலங்கியொருவட்டமிட்டுத்
தூயகல்லாடைபுனை தொண்டருருவங்கொண்டு சுடர்வேலுடன்றுலங்கித்
தாட்டுணைக்கமலமலர் புவிமகடலைப்படத் தமியனென்முன்குதித்துச்
சற்றேனுமெற்கொரு சுதந்தரமிலாதுள்ள சாததந்திரம்விளக்கிக்
கேட்டுக்கொடுத்திட லெனப்பெயர்சுமத்தியொரு கிளரிலைவிபூதிநல்கிக்
கேடறுதிருச்செந்தின் மாநகரின்மெய்யருள் கிடைக்கப்பெறுங்குறிப்புக்
காட்டுவதுபொய்யாத வண்மையிப்போதுனது கண்கொண்டுகருணைபொழியே
கதிர்வேலெடுத்தெழிற் சிகியேறுமுருகனே கண்கொண்டுகருணைபொழியே.

தமரவருடன்சென்று கிரிகடொறுநின்னருட் டன்மையைவிளக்கவேண்டுஞ்
சந்தமொருநூறுயி ரஞ்சொற்றுநின்னடித் தாமரைக்கணியவேண்டுஞ்
சமரசசுபாவமுறு கவுமாரசமயமே சனமயமெனநிறுவவேண்டுஞ்
சலதியொடுகனல்கவரு முத்தமிழ்க்கவிகளைத் தரணிக்களிக்கவேண்டும்
பமரமுரல்குழல்வள்ளி தெய்வானையன்புமிகு பாலனெனமிளிரவேண்டும்
பைம்பொனுலகாதியினு மிந்தவுடலொடுசென்று பலபுகழ்விளக்கவேண்டுங்
கமலமலரொடுகுவளை மலருநாணுறுமுனது கண்கொண்டுகருணைபொழியே
கடல்வளம்பொலிசெந்தி னகர்புரந்தருள்கந்த கண்கொண்டுகருணைபொழியே.

இலகியதமிழ்ப்பலகை யேறுநக்கீரற் கிரங்கியொருகுகையிடித்தா
யென்னையாளும்பெயர் விழைந்ததொருபெய்வளைக் கெதிர்நின்றுகைகொடு
யலகில்வளமுறுமருணை நகரில்வருபத்தனுக் காகவொருதூணில்வந்தா [த்தா
யரியதமிழ்கொண்டுவரு மொருவனதுகலிதீர வம்பொற்கலன்கொடுத்தாய்
புலவனொருவன்சொன்ன பாதிக்கவிக்குவன் புளிமரக்கொம்பொடித்தாய்
போற்றுமற்றொருவனுக் காகமணிநாவரும் புதுமைமுதலாயசெய்தாய்
கலகமதனுதியர்க் கஞ்சுமென்மீதுனது கண்கொண்டுகருணைபொழியே
கதிர்வலம்புரிசிகரி திகழ்செந்திலாதிபா கண்கொண்டுகருணைபொழியே. (௬)

வேறு

செய்யார்குவளைக் களைகளையுஞ் சிறியமருங்குற் கடைசியர்தஞ்
செங்கேழரிக்கண் ணெழிற்கொதுங்குஞ் சேலின்றிரளிற் சிலபாய்ந்து
மொய்யார்மலர்ப்பைம் பொழிற்கமுகை முறித்துமுகிலைக் கிழித்துவரு
மூவாவளமைத் திருச்செந்தூர் முருகாவுலவா முனைக்கதிர்வே
லையாவுனையே யல்லான்மற் றடியேற்குதவி யாருளர்நீ
யறைந்தமொழிக ளனைத்துநினைத் தலமந்திடவுமறியாயோ
கையாற்றிருநீ றெடுத்தணிந்து கண்ணுற்கருணை புரிவாயே
கருதுநலமுற் றுறுமாறுன் கண்ணுற்கருணை புரிவாயே. (௭)

தாதுமலிதா மரைக்காடுந் தண்பூங்குவளைத் தனிவனமுந்
தாமேயொல்கப் பெரிதலர்ந்து தவளக்களிற்றூன் மகளழகும்
வாதுபொலியுங் குறவனிதை வனப்பும்பருகு மாண்பெய்தி
வானிற்றலத்திற் பிலத்திலுறு மடவார்பலர்க்கு மயலளித்துக்

கோதுதவிர்பன் னிருசமையக் குழுவும்புரந்து தமிழ்ப்பாடல்
கொழிக்கும்புலவோர் தமைநாடிக் கொல்லாவிரதத் தினர்க்குறவாய்க்
காதுங்கொடியோர் தமைக்கறுவுங் கன்னற்கருணை புரிவாயே
கலிதீர்புகழ்ச்செந் தூரா நின் கன்னற்கருணை புரிவாயே. (அ)

வந்தார்வினையும் பிணிபலவு மயலுந்தவிர்த்துச் சிவஞான
வாழ்வுமழியாச் சுகப்பெருக்கும் வண்மைத்தமிழும் வழங்கியெழிற்
சந்தாசலத்துப் பெருங்கோயி றன்னிற்குலவித் திருச்செந்தூர்
தனையப்புரந்து கடம்புபுனை தடந்தோளீரா றுடையானே
கொந்தாரிதழிச் சடைப்பரமர் குறைதீர்த்தருளுங் குருபரனே
குன்றுவலிமைத் திருமாலுங் கூறுந்திறமை கொளுங்கதிர்வேற்
கந்தாவுனைப்பெண் டருமதலாய் கன்னற்கருணை புரிவாயே
கானக்குறத்தி கணவா நின் கன்னற்கருணை புரிவாயே. (கூ)

## வேறு

தந்ததனன தந்ததனன தந்ததனன தனதன

எங்குமமரர் தங்குகொடுமை யின்றியொழிய வெகுளுமே
யின்பமதுர மிஞ்சுகவிக ளென்றுமொழிய வுதவுமே
சங்குபுனையு நம்பர்செவிய தன்கணொருசொ லுவலுமே
சண்டன்மதன னெஞ்கண்விதிசெய் சஞ்சலமற வொருவுமே
கொங்குமலர்க டுன்றுபொழில்கொள் குன்றமுழுது நிலவுமே
கும்பனீனய தொண்டருரிமை கொண்டுநினைய வணுகுமே
கங்குல்வயலில் செந்தின்மருவு கந்தனிணையில் கருணையே
கங்கையிடைமுன் வந்தகடவுள் கண்கள்விரவு கருணையே. (க0)

தானதந்த தானதந்த தானதந்த தனதன

மாரனம்பு யாதிசிந்து மால்பொருந்த விடுவையோ
வாதொழிந்த நூல்பகர்ந்த மாதவங்க ளருள்வையோ
கோரமிஞ்சு மேமன்வந்து கோறவம்பின் மடிவனோ
கோதில்கும்ப நாதனென்று கூறும்வென்றி பெறுவனோ
பூரமொன்று ளாள்புணர்ந்த போதனங்கை புகுவனோ
பூவில்வந்தி டாதகன்ற பூரணங்கொ டுயர்வனோ
காரணஞ்சொல் வானெனெஞ்சு காணவந்த கருணையே
காசில்செந்தி லூர்புரந்த காவலன்செய் கருணையே. (கக)

தனனதத்த தனனதந்த தனனதய்ப தானனா

வளமிகுத்த பொழிலடர்ந்த மலைகள்கொள்ளும் வானவா
மயிலுகைத்து விலகடம்ப மலரின்மல்கு தோளனே
யிளமைசற்று முதிர்வதின்றி யிலகுசெய்ப மேனியா
யிதணிடத்து மறமடந்தை யிணைமுன்வௌவு காமுகா

வளவில்வெற்றி மருவுதுங்க வயிலொடொல்லு மார்பனே
யலையொலித்த கடல்கொள்செந்தி லரசுசெய்யு மேலவா
களவொழித்த பெருமைதுன்று கருணைசெய்ய வேணுமே
கலிமுழுக்க வெருளவின்று கருணையெய்ய வேணுமே. (கஉ.)

---

ஐந்தாவது

## வென்றி

பாலைநிகர்வெண்பொடி மிகப்புனைந்திலகுசெம் பவளமேனிச்சிவபிரான்
பக்கத்துமரகதப் பாவைநிகர்வடிவம் பழுத்தனையபொன்மைமயமாய்ச்
சேலைநிகர்விழியர மடந்தையருமவர்மருவு தேவருந்துயருருமற்
செய்வதுகுறித்துன் திருக்கையின்மேவியெரி தெண்டனிட்டுப்பராவக்
கோலைவிடுகயமுகத் தாருகாசுரனையுங் கொடுமாயைபுரியவல்ல
குன்றத்தையும்பொடித் தண்டத்திலெட்டிக் கொழுந்துவிட்டுப்படர்ந்து
வேலைநடுநிற்குமுதுசூர்மாவறக்கொன்ற வேல்வென்றிவிழைகுவாயே
மிகுபுகழ்ச்செந்திநகர் மேவுகுமரேசனே வேல்வென்றிவிழைகுவாயே. (க)

வானத்துமகபதி முதற்றேவர்வழிபட மலர்த்தருவில்வைகியதுவும்
வாரணம்வளர்த்தமக ளுக்குருதுநேயமது மறையவைத்துற்றவிசமுங்
கானத்துமறமங்கை தருமாவருந்தியவள் கழறுமொழிவழிசெல்லலுங்
கரிமுகன்முதற்பகரு மூவகைத்தானவர் கடற்படையுழக்கியதுவு
மீனத்தனம்பெருகு சமணரைக்கழுமீ திருத்திவிளையாடியதுவு
மியலுடைப்புலவர்பலர் களிகூரவருளாட லெண்ணிலாதனசெய்தது
மீனக்கொடிச்செழிய னுடைதனின்மெய்யாக வேல்வென்றிவிழைகுவாயே
விந்தைமிகுசெந்திநகர் வந்தமருமைந்தனே வேல்வென்றிவிழைகுவாயே.

சதுமறையினூலெழு வகையாகமத்திற் றனித்தனிபகர்ந்தவாய
சமையங்களத்தனையு மற்றவைக்கஞ்சித் தவிக்கின்றகொடுமைதீரப்
புதுமையுறுகற்பனை யலங்காரவண்டமிழ்ப் புலவர்கவியான்மெலிந்து [ரக்
புல்லர்மனைவாயிலிற் சென்றுதுதிசெய்துபொய்ப் பொருள்கொடு புழுங்கறீ
கதுமெனச்சொன்னபடி நடவுதிறல்பெற்றுனது கவுமாரர்புடைவிளங்கக்
கடலேழுடுத்தபுவி மகளழுதுவாடாது காசின்மெய்க்களிபொருந்த
விதுவணிசடைப்பரம னுதியருமெச்சுகதிர் வேல்வென்றிவிழைகுவாயே
விரதபுங்கவர்பலர் வருஞ்செந்தில்வித்தகா வேல்வென்றிவிழைகுவாயே. (ந)

ஐந்துகைத்தமயனொடு தந்தையெதிர்மாங்கனிக் காகமிகவிகலிவெண்ணீற்
றணிகுலவுகவுமார முனிவேடமிட்டேகு மத்தினத்தினுமலர்ந்த
கொந்துமலிபைம்பொழிற் சாரலிதணிற்குலவு குறமடந்தைக்குமோகங்
கொண்டுமறுகோலஞ் சமைந்தவக்காளினுங் கொழிதமிழ்ப்புலவனொருவ

ஞெந்துறுமிடிக்கன லவித்திடப்பாலைவழி நோக்கிநடைகொண்டவன்று
நாறுநூறுயிரந் தொண்டர்தம்பாற்பல நுவன்றிடச்செல்லுந்தொறும் [யே
வெந்துறும்பகைவர்குடர் மாலையொடுகைக்கொண்ட வேல்வென்றிவிழைகுவா
விதானம்பொலிசெந்தி னகர்புரந்தருள்கந்த வேல்வென்றிவிழைகுவாயே.

ஞானநியதருவர் தம்மோடுபொருதுநின் றேணிரைசலிப்புற்றதோ [தோ
சுரவனிதைமறவர்தரு கொம்பென்னுமிருவரொடு தோய்வதேதொழிலாய
பாரவரும்வானவரு மிரவுபகன்முன்னின்று பரவுவதுகேட்டிலாயோ
பங்கேருகன்பகரு மறைவெறுத்தேனையர் படிற்றுக்கிசைந்துளாயோ
கோரமுடம்பெருத் துயிர்வதைத்துணுகர் குணுங்கர்தம்மாண்மைகண்டு
கொல்லாதவிரதர்தந் தமரோடுநெஞ்சகங் குலைகுலைந்தயர்வதேனோ
வீரவாகுத்தலைவன் முதலோர்தமுயிர்போலும் வேல்வென்றிவிழைகுவாயே
வேதாகமம்புகழ் வியன்செந்திலாதிபா வேல்வென்றிவிழைகுவாயே (௫)

கள்வழியுநறுமலர்க் கமலத்தடத்திற் கதிர்க்குலைச்செந்நெல்வயலிற்
கதலிமடலிற்பசிய கமுகமடலிற்செங் கரும்புக்குழாத்திலெண்ணில்
புள்வருகழிக்கரைப் புன்னையிற்றென்னையிற் பொங்குகட்பனைவனத்திற்
பூவைநல்லார்கைக் குடத்திலவருடியெறி பூணெறிக்கும்பன்மறுகி
லொள்வயிரவன்னப் பளிங்குமேடைத்தலையி லொருகோடிமனைமுன்றிலி
லுறுபுனற்சாலிடக் கினில்வயப்பூதகண ரொடுவீரர்தங்கள்வாயில்
வெள்வளைமுழங்குந் திருச்செந்திலாதிபா வேல்வென்றிவிழைகுவாயே
வேழமகள்வேடமகள் மேவியபுயாசலா வேல்வென்றிவிழைகுவாயே (௬)

வேறு

கற்பத்தினுமாய் வருஞ்சுருதிக் கணமுமவைதம்முடிவுழியிற்
கழறும்பொருளன் குணர்வாருங் கவிதைக்கடலே யனையதமிழ்
விற்பனருமா றெழுத்தோதி வெண்ணீறணிந்து தவம்புரியு
மிக்கோர்புடையு முறைதவறுவீரப்பெரும்போர் விழைவாரும்
பற்பல்விருகத் தூனருந்திப் பாழ்நெற்றியராய்த் திரிவார்க்குப்
பயந்துவணங்கத் தகுங்கொல்லோ பார்மாதுறுகண் பார்த்திலையோ
வெற்பைக்களிற்றைத் தடிந்துவரும் வேலால்வென்றி விளைத்தருளே
விளங்கும்புகழ்ச்செந் தூர்க்குகநின் வேலால்வென்றி விளைத்தருளே. (௭)

அம்போருகத்தான் சமைத்தவுட லணியிற்சிறிது குறைத்தன்முத
லாயகொடுமை மிகவுடையா ரனையசமயத் தினர்பலருஞ்
செம்போர்ப்பருந்து முதுகழுகுஞ் செறிந்துபறந்து வெயின்மறைக்குஞ்
சீரார்களத்திற் செருச்செய்து சிரங்கால்கரம்போய்க் குடர்சரிந்து
தம்போர்ஞமலி நரிபலகை தாமுண்டுவக்கு மிரையாகத்
தவளப்பொடியா திபுனையுஞ் சமையத்தினர்கண் களிகூர
வெம்போர்விரும்புந் திருக்கைவடி வேலால்வென்றி விளைத்தருளே
வியனார்செந்திற் பதிக்குகநின் வேலால்வென்றி விளைத்தருளே. (௮)

கலியென்றுரைக்குங் கொடும்பேய்க்குங் காமக்கவலைக் கடுங்கனற்குங்
கருணைமருவாக் கருத்தினர்க்குங் கனிசொல்லுணராக் கவிஞருக்கும்
பலியுண்டறியாத் தவத்தினர்க்கும் பழமைகுறியாப்புரவலர்க்கும்
பகருமிவைபோர் பலபகைக்கும் பயந்துபதறிப் பரதவித்துப்
புலிகண்டயரு மான்போன்றுன் பொற்றாமரைத்தாட் கடிமையெனப்
புகுந்தேனிருவ ரொடுமயின்மேற் புகலுந்தோறு மெதிர்தோன்றி
மெலிவின்றியதா னவர்க்கெமனும் வேலால்வெற்றி விளைத்தருளே
விண்ணோர்தொழுஞ்செந் தூர்க்குகநின் வேலால்வெற்றி விளைத்தருளே.

வேறு.

தனனாதனனா தனனாதனனா தந்தனதந்தனனா

கதிர்மாமதியா யிரமேரெழில்கூர் கந்தகடம்பலர்கார்
கமழ்சீர்தருமார் பினனேயிணைதீர் கங்கைதரும்புதல்வா
கொதிவாரிதிமா மரவேர்களைவாய் குன்றமனந்தமுளாய்
குகனேயுமையா தரவோடருள்பால் கொண்டுவளர்ந்தவனே
நிதியாய்நெறியாய் நிழலாதியவாய் நின்றபரம்பரனே
நினைவார்பணிவார் துதிகூறிடுவார் நெஞ்சுதொறுந்திரிவாய்
விதிர்கூரிலைநீ டியவேலதனால் வெற்றிவிழைந்தருளே
வியன்மேவியசீ ரலைவாய்முருகா வெற்றிவிழைந்தருளே (௧0)

தந்தனதத்தன தந்தனதத்தன தந்தனதத்தனனா.

தண்பொருநைக்கிடை யன்றெனிடத்துறை தந்ததுமெய்ப்படவே
தங்கண்முதற்குல வுஞ்சுருதிப்பொரு டஞ்சமெனத்துணிவார்
கண்பொழியப்பெரு கம்பொழியக்கறை கண்டமதிற்கொளுவார்
கங்குனிறத்தரி யம்புயனெப்பவர் கண்டுகளிப்புறமேல்
விண்பொனகர்க்கிறை யும்பர்தவிப்பற வெம்புகுணத்திகலோர்
வெந்துவிழப்புவி மங்கைதலைச்சுமை மிஞ்சலறப்பிழைதீர்
வெண்பொடிமிக்கணி யுந்தவர்நத்திய வெற்றிவிளைத்தருளே
விஞ்சைவனப்புறு செந்தினர்க்குக வெற்றிவிளைத்தருளே. (௧௧)

தந்ததனன தந்ததனன தந்ததனன தனதனா

கொண்டல்குமுறு கின்றபொழில்கொள் குன்றமுழுது முடையவா
கொஞ்சுமொழிசொ லம்பைமருவு கொன்கர்பரவு குரவனே
யண்டர்முனிவர் நெஞ்சினிறையு மன்பினிலவு சரணனே
யன்றோர்வணிக மங்கைகதற வங்கையுதவு முருகனே
வண்டர்தினமு மிங்குபுரியும் வம்புகருதி மறுகினேன்
வந்தெனறிவி லன்றுபகர்சொல் வஞ்சமெனவு மறிகிலேன்
விண்டுவனையர் கண்டுபுகழும் வெற்றிமிகவு மருளிடே
விஞ்சுபுகழ்கொள் செந்திநகரில் வெற்றிமிகவு மருளிடே. (௧௨)

ஆறவது

# உபதேசம்.

சகலபுவனங்களையு மங்கவற்றுடௌ சராசரங்களையுமீன்றுந்
தாழாதரும்புழலை மங்கைக்குமகமேரு தன்னிலுஞ்சனகன்முதலாப்
பகருமொருநால்வருக் காலநிழலினும்வழுதி பரியினங்கொள்ளவுதவும்
பைம்பொனெடு வந்தான்றனக்குக்குருந்தைப் பாரையருகினும்விரித்துப்
புகலரியபஞ்சாக் கரப்பொருளுரைத்தருள் புராந்தகன்செவியினுக்குட்
பூரணசொரூபமென வாரணமுகப்பிற் பொலிந்துள்ளபிரணவத்தி
னுகநிலைதவிர்ந்துயர் கலப்போதிவைத்தவா றுபதேசமுதவியருளே
யொலிகடற்செந்தூரின் மருவுகுருநாதனே யுபதேசமுதவியருளே. (க)

பொற்றடங்கிரிமீது மருவுபான்முதலாய புத்தேளிர்குலமுழுக்கப்
புணரியிற்குழாத வண்ணமங்காளெழிற் பொதியாசலத்தில்வந்து
கற்றவர்தமக்குந் தவத்தோர்புடைக்குமொரு காவலவனெனவிளங்கிக்
கதிரவன்செல்கின்ற வழிமறைத்தோங்குமொரு கனகுவடுதனையடக்கிப்
புற்றரவபடவல்கு லயிராணிமாலுடைப் போகியொருபோகியாகிப்
போகிடச்செய்துதன் போகியுருநீத்தருட் பொருகையொடுதமிழுநல்கி
யுற்றகுறுமாமுனிக் கங்கினிதளித்தவோ ருபதேசமுதவியருளே
யும்பர்புகழ்செந்திநகர் வந்தகுருநாதனே யுபதேசமுதவியருளே. (உ)

என்புபெண்ணுகிடத் தமிழ்பகர்ந்திட்டவனு மேத்துமருணைசலத்தி
லிரதியர்கள்பலர்மருவு மொருமதனனெனநிலவி யெண்ணிலாவன்னையன்ன
பொன்புரையுமேனித் தமக்கைமொழிசகியாது பொருவில்வல்லாளராயன் [ந்து
பொருண்மிகைசமைத்துள திருக்கோபுரத்தின்மிசை போய்நின்றுபுவியில்வீழ்
பின்புமுயிரொடுவாழ்ந்து வில்லிபுத்தூரில்வரு பிரபலனைவாதில்வென்று
பிரபுடன்முனொருவனை யடக்கியளவறுகவிதை பெய்தன்முதலாயசெய்தா
டுன்புயந்திற்கிளி யுருக்கொண்டுளானுணரு முபதேசமுதவியருளே
யுலகுபுகழ்செந்திநக ருடையகுருநாதனே யுபதேசமுதவியருளே. (௩)

வண்மையுறுபரமன்றி மற்றொன்றுமில்லையென வாதாடுகின்றபேரு
மாயையல்லாதில்லை யெனப்பேசுகின்றவரு மாறியிவைதோன்றுவதுவே
திண்மையெனவோதுகரு முப்பொருளநாதியவை திரிவுறுதனவென்னுநூற்
றேறுநருமுத்தியிற் றிரிவிதப்பொருள்களுஞ்சேர்ந்தொருமையாகுமென்னக்
கண்மையறநம்புநரு மவனவளதெனுநெறிக் காரர்களுமனையபிறருங்
கடையனேனுள்ளங் கலக்கப்படுத்துவது கண்டிருப்பதுநீதமோ
வுண்மைநிலையீதென் றுணர்ந்துகொள்ளும்படியோ ருபதேசமுதவியருளே
யூறுதவிர்செந்திநக ருற்றகுருநாதனே யுபதேசமுதவியருளே. (ச)

இமயவரைமலையமலை கந்தமாதனமேரு விரசிதக்குவடுமுதலா
மெண்ணிலாமலைதோறு மேகியங்கங்குள்ள விருடியர்கள்சித்தர்முனிவோர்
தமையடிவணங்கியவ ரனைவோரு நின்னடித் தாமரைக்கன்பனென்னச்
சாற்றுமெய்ப்புகழ்பொறுத் திந்திராதியருலகு தன்னிலுஞ்சென்றுமீண்டு
சமையமத்தனையுமுயிர் வகைபுரிந்துண்ணுத தருமங்கொளப்புரிந்து
தமிழ்மாரிபெய்தினிப் பிறவாதமுத்தியிற் சார்வதுகுறித்துவந்தே [ளே
னுமையவண்முலைப்பான் மணங்கமழும்வாய்கொண்டொ ருபதேசமுதவியரு
யுயர்செந்திநகர்வந் துறைந்தகுருநாதனே யுபதேசமுதவியருளே. (௫)

பாடியதமிழ்க்கவிதை முற்றுமவ்வண்ணமே பலிதமுற்றிடும்வண்மையும்
பஞ்சலோகங்களையு மொன்றையொன்றுகிடப் பண்ணன்முதலாயவித்தை
கோடியுமியற்றிவிண் வழிச்சென்றுவருகின்ற குளிகையுங்கொள்ளுநலமுங்
கும்பமாமுனிவனது சபையருகினின்றுகை குவித்துக்களிக்குமாண்பு
மாடியமயிற்பரியும் வேற்படையுமகலாம லறுதினங்குலவுபுகழு
மனையபிறவும்பெற்று மேலாயதனிவிடு மடைவதற்காசைகொண்டே
னேடியிச்செந்தூரி லெதிர்வந்தெனக்காமொ ருபதேசமுதவியருளே
யொண்சேவலங்கொடி யுயர்த்தகுருநாதனே யுபதேசமுதவியருளே. (௬)

## வேறு

தவளப்பொடிமிக் கணிகோலந் தன்னைக்காணிற் சகியாதார்
கமரோடழியக் கழுவேற்றுந் தமிழ்ப்பாவலவன் றனிப்புகழுங்
கவளக்களிற்றின் பிடரேறிக் கன்கநகராள் பவன்மகுடங்
கடல்சூழ்புவியின் மிசையுருளக் கண்டுமகிழ்வான் கைவலியு
மிவனுக்குளவென் றனைவோரு மேத்தல்விரும்பிப் பணிபுரியு
மெனக்குன்னடிமை யெனும்பெயர்மட் டீந்தாயவையு மீவதற்கா
முவகைப்பெருக்கோ டொருமாற்ற முபதேசஞ்செய் தருள்வாயே
யுலவாத்திருச்செந் தூரானே யுபதேசஞ்செய் தருள்வாயே. (௭)

புளிக்கும்பழங்கண் மிகமாந்திப் போதமறந்து தடுமாறும்
போரேறனைய வுழவர்குழாம் பூவார்கூந்தற் கடைசியர்தம்
மளிக்கண்வலையி னிடைப்படலா லவர்பாற்சிறிது விளையாடற்
காசித்தலரி நடுவருமுன் னவிழ்க்கும்பகட்டி னினங்குதித்துத்
துளிக்குநறைப்பூந் தடமுழக்கித் துகளர்தரளம் பொலிகருப்பஞ்
சோலைக்கிடும்வே லியைக்கடக்குந் தொலையாவளஞ்சேர் செந்தூரா
வொளிக்குங்குமவாய் திறந்தொருசொல் லுபதேசஞ்செய் தருள்வாயே
யுன்னைத்தமியே னறிவதற்கா முபதேசஞ்செய் தருள்வாயே. (அ)

பவளக்கொடியின் கிளைப்பெருக்கும் பங்கேருகமா தியமலரும்
பாசித்திரளின் பலவகையும் பணிலக்குழுவு மவைகான்ற
தவளமணியுங் கயலாதி தருமுத்தினமு மணுவளவுந்
தருமம்புரியார் மாக்கலங்க டம்மிற்செறிக்குந் தன்முழுதுந்

சிவனோர்மலையா மருணைநகர்ச் சிகரிப்புலவ னொடுநெல்லைச்
சிறுவன்விடுத்த செழுந்தமிழூர் திவலைப்பொலிவார் திரைக்கரத்தா
னுவரியொதுக்குஞ் செந்தூரா வுபதேசஞ்செய் தருள்வாயே
யுணராவுணர்வை யுணர்வதற்கோ ருபதேசஞ்செய் தருள்வாயே. (௯)

வேறு

தந்தனதானன தந்தனதானன தனதானத்தனனா

அம்பரபேரிகொ னாங்கிளிவாகன னமராடச்சகியா
தைந்தருநீழல ணங்கினர்போல்பவ ரடிபேணிக்கவியால்
வெம்பளுருமெலி கின்றவெனோடுமுன் வெகுவாய்மைக்கதைநீ
விண்டவெலாமுல குந்தெரிவான்மிக விழைநீரற்பமதோ
நம்படியாரைம றந்தனையேலது நலமோவெப்புறுபாழ்
நஞ்சயில்வானொடு மன்றொருவாசக நவில்சீர்விட்டனையோ
வும்பருமோதுபெ ரும்புகழ்தோய்தர வுபதேசித்தருளே
யொண்கதிர்சூழ்தரு செந்திலில்வேலவ வுபதேசித்தருளே. (௧௰)

தனதானத்தன தனதானத்தன தனதானத்தனனா

இமையாரைத்துயர் புரிசூரற்கெமனெனவேல்பற்றியவா
விருபாவைக்கிடை வளரோர்செக்கரி லெழில்காணத்திகழ்வாய்
கமைமீறப்பெறு மவர்நேயத்தொரு கணமோவற்கரியாய்
கயிலாயக்கிரி யுடையார்மெச்சிய கனிவாய்முத்தையனே
சமையாதுற்பவ முறுபூண்மிக்கவிர் தடமார்புக்குகனே
தனதானத்தன வெனுமோர்கைக்கிளி தமிழ்மாலைப்புயனே
யுமையாளொக்கலை யமர்வாய்மெய்ப்பொரு ளுபதேசித்தருளே
யுயர்வாழ்விற்பெரி தலைவாய்வெற்பினி லுபதேசித்தருளே. (௧௧)

தனனாதந்தன தனனாதந்தன தனதானத்தனனா

உருவேறும்படி முதலாமந்திர முபதேசித்தருளே
யுலகோர்கண்டிவ னவனேயென்றிட வுபதேசித்தருளே
யுருகாநெஞ்சமுன் மெழுகாகுந்திற முபதேசித்தருளே
யுடனானன்றென வுணர்சீலம்பெற வுபதேசித்தருளே
யுருளேயென்றக முழலாவென்றியை யுபதேசித்தருளே
யுரகேசன்றொழு மயின்மேல்வந்தினி துபதேசித்தருளே
யுகுவாகும்பழ வினைதிருந்தவ முபதேசித்தருளே
யொளிநீடுந்திரு மதில்சூழ்செந்திலி லுபதேசித்தருளே. (௧௨)

---

ஏழாவது

# ஈகை.

வாசவன்பிரமனரி யாதியெத்தேவரும் வருந்துறச்செய்யவென்று
மாதவம்புரிசூர னிரணியன்முதற்பகரும் வல்லவுணர்தங்களுக்கும்
பேசரியபலகோடி வரமுதவியன்னவர் பிழைத்தொகைபொறுக்குமதனாற்
பித்தனென்றேதுமொரு பெயர்புனைந்தின்பப்பெருக்கருள்பிராட்டிகண்முன்
னுசகல்பதஞ்சலி புலிப்பாதனுதியர்க் களவில்பேருவகைபொங்க
வம்பலத்தைந்தொழிற் பயிலுநடனம்புரிந் தாலநீழலிலிருந்த
வீசன்மகனுங்குருவு மாகியதுபொய்யாம லீகைநலமெய்துவாயே
யெழில்வலம்புரிமுழங் கியசெந்திவ்வேலனே யீகைநலமெய்துவாயே. (க)

சமையகோடிகடோறு மங்கங்குநின்றவை தழைக்கப்புரந்துமூவர்
தம்மைப்பயந்தவர் தமக்குமனைவியராய்த் தனித்தனியுருக்கொண்டுபின்
னமையனையதோளிரதி கேள்வனுக்கைங்கணை யளித்துலகம் வாழவைத்திட்
டநியாயமிகுதக்கன் மகளாயும்வந்தற மடங்கலும்வளர்த்ததன்றிச்
சிமையநிகர்கொங்கைத் திருப்பாலொர்கவுணியச் சேயுண்ணவுங்கொடுத்துத்
தெளிதமிழ்ப்புலவனொரு வற்கடிசிலிட்டவன் சேறும்வழிதோறுமேகு
மிமையமகடருமதலை யென்னுமொழிபொய்யாம லீகைநலமெய்துவாயே
யிலகுசெந்தமிழ்வளம் பொலிதிருச்செந்திலா யீகைநலமெய்துவாயே. (உ)

பத்தமிகுமைவர்விடு தூதாகியவரிலொரு பார்த்தனதுசூதனுகிப்
படியளந்துயிர்கண்முழு தும்புரந்தருளருட் பகவனதுமருகனுைப்
முத்தமிழ்க்கிழவிமன மெலியாமலிருவர்க்கு முந்தியொருகயிலைவரைமேன்
முதிர்களிப்புடனுறப் புரிதுதிக்கையுடைய முன்னவற்கிளவலாகு
யுத்தமப்புலவர்குலம் வாழவுடல்விட்டவற் குரிமைமைத்துனனுமாகு
யொண்புகழ்ச்சங்கத் தமிழ்ப்புலவர்கலகமற வொருசெட்டிமகனுமாகு
யித்தனைபுகழ்ச்சிக்கு மிசையவொருசிறிதேனு மீகைநலமெய்துவாயே
யெண்ணில்பலதொண்டர்வரு புண்ணியச்செந்திலா யீகைநலமெய்துவாயே.

பாற்படுநிறத்தினொரு வெள்ளிமலையும்பொருவில் பைம்பொன்மலையுங்கொடுள்ள
பரமனுகியதந்தை யோடுகொண்டேற்றுண்டு பசிதவிர்ந்தானவன்றன்
மேற்பழுதிலாவலுறு கவுரியாகியவன்னைவெற்பரசன்மகளாகியும்
வேதியன்புதல்வியென வடிவெடுத்தவனுண்டு மிஞ்சியவனம்புசித்தா
ளாற்பசுந்தளிர்மீது துயின்மாயனுமாம னகிலமுழுதும்புரந்து
மவுணேசனிடமூன் றடிப்புவியிரந்தானி தன்னபலதன்மையாலு
மேற்பதுன்குலவளமை யானுலுநீயேனு மீகைநலமெய்துவாயே
யெம்பரும்பெரிதுபுகழ் செந்திலம்பதிமுருக வீகைநலமெய்துவாயே. (ச)

பரமனுக்குங்குறு முனிக்குங்கிளிக்குமொரு பரமரகசியமுரைத்தாய்
பகடுமலையொடுபொடிய வென்றரிக்காழிப் படைத்திதியுறக்கொடுத்தாய்
பிரமனதகங்கார வேர்களைந்தருளறிவு பெற்றுமகிழப்புரிந்தாய்
பெய்வளைச்சசிகணவ னரசுரிமைசெய்யப் பிறங்குபொன்னகரளித்தாய்
விரகமுறுதெய்வானை வள்ளிமுதலாமகளிர் மிக்குவகையுறவணைந்தாய்
மேவுமயிலுந் துணை யெனத்தினந்துதிகூறு மெய்ப்பத்தியுற்றபின்னு
மிரவலனெனும்பெயர் பொறுத்தலையுமென்னளவி லீகைநலமெய்துவாயே
யிந்திரன்புகழ்செந்தில் வந்தசுந்தரமுருக வீகைநலமெய்துவாயே. (ரு)

தலையணைய பேரெழிற் கொள்ளுமொருமாதுகைதறையில்விழவொருவன்வெட்டுந்
தருணத்தின்மற்றொருகையுதவவருபெருமையுந்தமிழ்வலானொருவனந்நாள்
வினைநிகர்பெரும்பேய்வசப்பட்டதாலயிலைவெற்பிடியவிட்டவீறு
மேலவர்குழாமருவுசோணகிரியிற்சிகரிமீதேறிவீழ்ந்துய்ந்துளான்
வளையுமுத்தமிழ்மாலைசூடியவனைக்கிள்ளைவடிவுறச்செய்துதோளில்
வைத்ததுவுமென்கனவிலொருமொழியைவெகுதடவைவந்துவந்துரைசெய்
மினையனவனந்தமும்பிழைபடாவண்ணமின்றீகைநலமெய்துவாயே [தது
யெங்கணும்பெருகுபுகழ்கொண்டசெந்தூரனேயீகைநலமெய்துவாயே. (சு)

வேறு

யானுங்களிறுந் தருமடவார் மதலையாமென் றிறுமாந்துன்
மலர்த்தாள்விரும்புங் கவுமாரர் மலயக்குவட்டில் வருந்தமிழாற்
றேனுமமுதுங் கலந்தாங்கு செப்புமதுரக் கவிமாலைச்
சிறப்பேநாடித் தெரிந்தளவிற் சிறிதுபாடித் திறலவுண
ரூனுநிணமு மொழுகியவேற் குரிமைமிகவைத் தாறெழுத்தா
லுன்னைக்கருதிப் புறச்சமய முள்ளார்பலர்க்கு மொருபகையாம்
யானுன்னடிமை யெனிலின்னே யேதாயினுஞ்சற் றீந்தருளே
யிலங்கும்புகழ்ச்செந் தூர்க்கிறைவா வேதாயினுஞ்சற் றீந்தருளே. (எ)

கயம்போனடக்குங் கவிமாலைக் கவுமாரருக்கோர் கான்முளையாய்க்
கடல்சூழ்புவியும் வானகமுங் கழறும்புகழ்வேட் டுழல்வேன்றன்
பயம்பேணியபுன் மனத்தூடு பலவாறிலகித் திருநெல்லைப்
பதியிற்பொருநை நதிநடுவிற் பைம்பொற்பொழில்சூழ் திருமலையி
லயன்றாமரைக்கண் ணரியிகலு மருணைச்சிகரி வடவருகி
லணிக்கேரளத்திற் புதுவைநக ரதனிற்பகர்ந்த தன்றியிங்கு
மியம்புமொழிகள் சரதமெனி லேதாயினுஞ்சற் றீந்தருளே
யிமையார்வழுத்துஞ் செந்தூரா வேதாயினுஞ்சற் றீந்தருளே (அ)

காடிவருவார் வினையறக்கு நலத்தாற்குரங்கி னினங்களிக்கு
நளிர்பூம்பொழிலா லிசைபயிலு நறைவண்டினத்தா னடமாடுங்
கோடிமயிலால் வாரணப்புட் குலங்கூவொலியாற் றிரையெறியுங்
குளிர்வாரிதியாற் சந்தவரைக் குவட்டின்பொலிவாற் குலவுதமிழ்ப்

பாடிமகிழ்வார் பெரும்புடையாற் பணிலமுலவும் பலமறுகாற்
பங்கேருகப்பூ வாவிகளாற் பைம்பொற்குவையாற் பகர்வதற்கோ
ரீடில்வளஞ்சேர் செந்தூரா வேதாயினுஞ்சற் றீந்தருளே
யெழில்வேற்குகனே யெனக்கிந்நா ளேதாயினுஞ்சற் றீந்தருளே. (கூ)

வேறு

தானனதந்தன தானனதந்தன தானனதந்ததனா

வாசவனம்புயன் மாயனெனுஞ்சிலர் வாழ்வையிகழ்ந்ததனுன்
மாரன்விடுங்கணை யான்மனநொந்துழன் மாயைகடந்ததனா
லாசகல்செந்தமிழ் பாடியணிந்துன தாவன்மிகுந்ததனா
லாறிருதிண்புய மேதுணையென்பவ ராசிமொழிந்ததனா
லீசனுடன்கூறு மாமுனிவன்பெறு மீடுவிழைந்ததனா
லியாவையுநின்செய லேயெனநம்பிடு மீரமலிந்ததனா
லேசறுதொண்டரெ லாமகிழும்படி யீகைமுயன்றருளே
யேதமில்செங்கில்வி சாக விரைந்தினி யீகைமுயன்றருளே. (கο)

தனனதனதன தனனதனதன தானனதந்தனனா

கலையாவையுமுணர் புலவாவுமையவள் காதன்மிகும்புதல்வா
களிறீனியமக ளுழைபால்வருகொடி காவல்கொளுங்கணவா
மலைதோறநுதின நடமாடிடுமிருவாரிசமென்சரணா
வளைவாகியநக மதனுலமர்செயும் வாரணமொன்றுடையாய்
புலைமீறியகொடி யவர்மேன்முனிவுறு போதகர்தங்குரவா
புகழ்தோய்தருகவி நுவல்வாரறிவுணர் பூரணசுந்தரனே
யிலைநீடியவயின் முருகாவினியரு ளீகைமுயன்றருளே
யிணைதீர்வளமுறு மலைவாய்நகரிடை யீகைமுயன்றருளே. (கக)

தானனதத்தன தானனதத்தன தானனதந்தனனா.

யாவருமெச்சிய சீலமுடைக்குக வீகைமுயன்றருளே
யேழுவகைப்பவ நோய்விலகத்தகு மீகைமுயன்றருளே
யீவகைமொய்த்துள நீபமலர்த்தொடை யீகைமுயன்றருளே
யேனமருப்பற மோதுமடற்புய வீகைமுயன்றருளே
யேவலர்பற்றிய மாரன்வெருக்கொளு மீகைமுயன்றருளே
யேசறுபொற்சிகி மீதுநடித்தரு ளீகைமுயன்றருளே
யீவதுநத்திய பேருமுவப்புறு மீகைமுயன்றருளே
யீடில்வளத்தலை வாய்நகருற்றவ வீகைமுயன்றருளே. (கஉ)

———

எட்டாவது

# அபிமானம்.

முன்னையுளகற்பங்க ளிற்பிறந்தழிவுற்ற முதுமறைத்தொகுதிகட்கு
மூவுலகினூடுமிக் கற்பத்தின்மிளிர்கின்ற மூவாதசுருதிகட்கும்
பின்னைவருவேதங்க ளுக்குமொருதுணையாய பெரியதேவாகுமுன்னைப் [வே
பேதமிகுபௌராணி கத்தர்மொழிகொண்டுசிறு பிள்ளையெனவுஞ்சொல்லு
னென்னையிகழேனுன்னை யன்றிமற்றொருதஞ்ச மியானறிகிலேனையகோ
விதுசாதமியாவையு மறிந்துள்ளநீசிறிய வென்னெஞ்சமறிகிலாயோ
வன்னைதன்மதலைமேற் கொள்வதிற்கோடிபங் கபிமானமுறவேணுமே
யலைமுழங்கியசெந்தி னகரில்வந்தமர்கந்த வபிமானமுறவேணுமே. (௧)

கழகப்பெரும்புலவ ரனையவர்குழாத்தினிடை கவிமாரிபொழிபோதினுங்
காட்டிடைவனத்தினிடை பருவதத்திடைசென்று கால்வருந்துறுபோதினு
மழலைக்கிளிப்பரித் தென்றலந்தேரிவரு மதன்வந்துபொருபோதினு
மலர்வந்தநான்முகக் கிழவனென்றலைதொட்டு வரையநாடியபோதினுந்
தழலெரிந்தாங்கவிர் சடைத்தலைக்கூற்றுவன் றண்டமுடனெதிர்போதினுஞ்
சாற்றுமிவையனையபல தருணத்திலுந்தினந் தனிவேல்பிடித்தகையோ
டழகியகலாபமயின் மீதேறியென்முன்வரு மபிமானமுறவேணுமே
யம்பரமுழங்கொலிச் செந்தில்வளர்கந்தனே யபிமானமுறவேணுமே. (௨)

கருணைப்பெருங்கடற் கரைபிறழ்ந்தொழுகுநின் கண்களைப்பெரிதுநம்பிக்
கதிர்வேலிலங்குபன் னிருதோளிலளவற்ற கவிமாலைபுனைவதன்றிக்
குருவுற்றசமயங்க ளத்தனையுமுட்கொண்டு குலவுகவுமாரநெறியைக்
குவலயத்தினர்களுஞ் சித்தகோடிகளெனக் கொள்ளப்புரிந்துவக்கும்
பெருமைக்கவாவுற்றும் வாடுகின்றேனிதென் பெற்றியாயினுமல்லதுன்
பேராண்மையின்றிவலை யானுமென்மீது பிரபுடன்றனைவணக்கு
மருணகிரிநாதன்மேல் வைத்ததினுமதிகமா மபிமானமுறவேணுமே
யஞ்சுகஞ்சுருதிபகர் செந்தில்வளர்கந்தவுன தபிமானமுறவேணுமே. (௩)

தேனைநிகர்பொருநையிடை யறுவகையிலக்கணஞ் செப்பிடச்சென்றபோதுஞ்
சென்னையிற்பிள்ளைக் கவிப்பானுவல்வாதஞ் சிறப்புறச்செய்தபோது
மானையனையார்நடம் புரிகோயிலிற்புதுவை மறமுரைத்திட்டபோது
மலைநாடதின்பெரு வனத்திற்பசிக்கொடுமை வாய்விட்டுரைத்தபோதும்
வானையளவுந்திரு மலைக்குவட்டினிலேறி மண்ணிடையுருண்டபோதும்
வஞ்சனொருவன்செய்த மந்திரத்தாற்கனவின் மதவாரிபொழியுமுகில்போ
லானைவருபோதுமென் மேல்வைத்தபடியென்று மபிமானமுறவேணுமே
யந்தருமுனிவரும் வந்துபுகழ்செந்திலா யபிமானமுறவேணுமே. (௪)

என்னபடிவைபினுங் கோபஞ்செயேனென் றியம்பியதுமுற்பிறப்பி
னியல்பினைப்பலவிசை யெடுத்தெடுத்தோதியது மீரிருமறைக்குமாமும்
பன்னரியவாகமப் பகுதியுஞ்சொல்லிய பயன்றெருக்குத்துரைசெய்ததும்
பரவைநீரிற்கனலில் விட்ட தமிழ்முழுமையும் படியிடைவிளங்குமென்னச்
சொன்னதுவுமூவேழு தொண்டருலகினில்வந்து தோன்றியுள்ளார்களென்றுந்
தூலவுடல்கொண்டதொரு காரணத்தென்றுந் துலக்கியதுமன்றிமற்று
மன்னவிளையாடல்பல செய்தனவுமெய்யாக வபிமானமுறவேணுமே
யணிபொழிற்செந்தில்வள நகருடைக்கந்தவன தபிமானமுறவேணுமே. (ரு)

செங்கனல்பொருந்துவரும் வெண்டாளமுந்தரு திரைப்புனற்சாகரத்திற்
றேனினமுமோதிமமும் வால்வளையுமார்தரு செழுங்கமலவாவிதன்னிற்
கங்கணமணிந்தகர மங்கையர்தம்விரலிற் கணைக்கால்களிற்கண்களிற்
கன்னலுஞ்செந்நெலுங் கழுநீருநெய்தலுங் கமழ்கின்றகழனிநிரையிற்
புங்கமிகுவேதியர் புராணிகர்கவிப்புலவர் போர்வீரரனையர்செவியிற்
புரவலர்தொழுஞ்செழிய னுங்கிளிப்பரியில்வரு புத்தேளுமிச்சைகொள்ளு
மங்கயற்குலநிலவு செந்திலிற்குயாவுன தபிமானமுறவேணுமே
யருணகிரிநாதனிகர் சிலர்பெற்றுமகிழ்வதா மபிமானமுறவேணுமே. (சு)

வேறு.

கொலையாதியபுன் றொழில்புரிவார் கோலாகலங்கண் டுளமிகவுங்
கோதித்துத்தவித்துன் னெழுத்தாறுங் கூறித்துதிக்குங் குணத்தேனுக்
கிலையாற்பொதிந்த வெண்ணீறீந் தியம்புமொருசொற் சரதமென
வெண்ணுமனத்தூ டையமுறு திங்காள்புரியி லிழிவாமோ
சிலைவேடுவர்தங் குலக்குயிலுந் தேவர்க்கிறைவன் றருமகளுஞ்
சிகிவாகனத்தி லருகிருக்கச் செவ்வேல்பிடித்துத் திருச்செந்தூ
ரலைவாயுகந்த பெருமாளே யபிமானஞ்சற் றருள்வாயே
யருமைத்தமிழ்மா முனிக்குதவு மபிமானஞ்சற் றருள்வாயே. (எ)

பூசைபுரிந்து திருப்புகழே புகன்றுன்புயத்தின் மிசைபுனைந்து
புனிதமலியுங் கவுமாரர் புடையினடுவுற் றநுதினமுங்
காசைமலர்த்தண் குறிஞ்சிதொறுங் கவினுங்கமலக் கழல்கருதிக்
கதிர்வேற்படையு மயிற்பரியுங் காக்கும்பெருமை பெறவிழைந்தே
னேசைமிகுமா மணிக்களிறு முரங்கூர்தகரு மிவர்வானே
யோராயிரங்கட் புரந்தரன்ற னூர்க்கோர்துணையா முமைமதலா
யாசையெனும்பாழ் விலங்கறவுன் னபிமானஞ்சற் றருள்வாயே
யலைவாரிதிச்செந் தூர்முருகா வபிமானஞ்சற் றருள்வாயே. (அ)

இயலாதியமுத் தமிழ்தொடுத்துன் னிருதாட்கமலத் தினிலணிந்து
மீரெண்வகைத்தா முனதருவத் தேற்றமுணர்ந்து மிகநினைந்து
மயல்வேர்களையு மாறெழுத்தின் வகையூடுயர்வ தறிந்துரைத்து
மயில்வாகனத்தி லொருக்காலும் வந்தோர்மாற்றம் வழங்கிலையே

கயமாமுகனுக் கிளையானே கருணைக்கவுரி தரும்புதல்வா
கைவேன்முருகா கவின்றிகழ்பாற் கடலிற்றுயில்வான் றிருமருகா
வையனர்பதறப் புடைத்தாய்நின் னபிமானஞ்சற் றருள்வாயே
யலைவாய்த்திருச்செந் தூராசே யபிமானஞ்சற் றருள்வாயே. (௯)

## வேறு

தனதனதானன தனதனதானன தனனதத்தன

பொடியுடனேயரன் விழிதருமாமணி புனைசிருற்றணியார்
பொதியையின்மாமுனி நிகர்கவுமாரர்கள் புகழ்பேசித்தமிழா
லிடியுறழ்ப்பேரொலி மருவியபாடல்க ளினிதோதிக்கிரிதோ
றிமையவர்சூழ்தர நடமிடுதாள்களி லிடும்வாழ்வைக்கொடுநாள்
விடிவதனுதர வெனமிளிர்சேவலை மிகநேசித்தவிர்கூர்
விதிரிலைவேன்மிசை பலமலர்தூவிநின் வியனடித்தொழுலா
லடியவர்போலொளிர் தருமெனைநேசிற தபிமானித்தருளே
யணியலைவாயுறை குருபரனேயெனை யபிமானித்தருளே. (௰)

தனதனதந்தன தனதனதந்தன தனனதத்தனன

சயிலவினங்கொறு நடமுயலுஞ்சிறு சரணதற்பரனர்
தமதழலம்பக முமிழ்பொறியென்றொரு தடநீருற்றுருவாம்
வெயிலுமிழ்செங்கதிர் வடிவமுறுங்குக விளையாடச்சலியாய்
விதரணசுந்தர முருகமகந்தரும் வியன்மேடத்திவர்வாய்
குயில்புரையுங்குற மகண்முலையின்சமர் கொளுமார்பத்திறைவா
குறுமுனிவன்பொரு பெரியர்வணங்கிய குரவாகொற்றமரு
வயிலணியும்புய வலிமைகொடென்றனை யபிமானித்தருளே
யருண்மிகுசெந்திலில் வருமெனையன்புட னபிமானித்தருளே. (௧௧)

தனனதனதன தனனதனதன தனனதத்தனன

அருளாடலைமிக விழைவேன்மகிழ்வுற வபிமானித்தருளே
யரவாபரணனெ டினிதோதிபகல மபிமானித்தருளே
யருவாயளவறு முருவாகியபொரு ளபிமானித்தருளே
யயில்வேலினைமயி லினைநாடிடுமறி வபிமானித்தருளே
யருளைபுரிவரு மவனேரிசைபெற வபிமானித்தருளே
யழலோடறலிடை விடுநான்முழுமையு மபிமானித்தருளே
யருகாதியர்வெரு ளுறுமாண்மையைவலி தபிமானித்தருளே
யலைவாய்நகருறை குகனேயெனைமிக வபிமானித்தருளே. (௧௨)

———

ஒன்பதாவது

# ஐயமறுத்தல்.

நன்றுமுத்தமிழன்றி யில்லையெனவேலூரி னடுவர்முற்சொல்லியதினு
நானிலத்தரியென்ன வானகத்தரனென்ன நனிவாழ்வையென்றதினுமியான்
பொன்றுவதுகாணவிழை வுற்றவன்சாகப் புரிந்ததினுமருணையூரின்
பொற்கிரிதன்னில்வரு கென்றழைத்ததினுமென் புனிதமாதவவேடம்வி
னொன்றுசிலரேசவொரு தந்திரம்புதுவையி லியற்றியதினுங்கலந்துற்
றென்னைப்படுத்துவது மல்லாதுன்மடிமீ திருந்திடவிருத்தியன்பா
லன்றுபகர்வாய்மையினும் வந்துசிறிதொன்றிவள ரையமறவருள்செய்வாயே
யதிகவளமுறுசெந்தி னகரில்வளர்குகனேயெ னையமறவருள்செய்வாயே. (௧)

பாதிமதியன்னநுதன் மாதரார்கொங்கைப் பகட்டிடைமயங்குமயலும்
பாவமொடுபுண்ணியத் திற்குமொருதுணையாய பைம்பொற்பணத்தவாவு
நீதிமுறைதவறுத மன்னருதிரமுறுகரு நீணிலத்தினநாசையு
நெட்டுயிர்த்துப்புந்தி தடுமாறவருபெரு நெருப்பனையகோபநோயுங்
காதியளவறுமூ னருந்திக்களிக்கின்ற கயவரைப்புகழ்தீமையுங்
கவிமதுரசாரமெள் ளளவுமறியாமூடர் களிவிழைந்துழலுமிழிவு
மாதியாகியபிழை யனந்தத்துமேலாய வையமறவருள்செய்வாயே
யகிலமெங்கும்பெரிது புகழ்செந்திலாதிபா வையமறவருள்செய்வாயே. (௨)

போதவுலகிற்றிகழு மெவ்வகைநிகழ்ச்சியும் புரிவதுன்னருள்வன்மையோ
பொதுமறைச்சுருதிக்கு மமையாதுவிரிவுற்ற பொல்லாதமாயைதானோ
நாதவிந்தாதியா கப்பரமயோகியர்க ணவில்கின்றபேதங்களோ
நானென்றவாணவங் கொண்டுசுழல்கின்றவா நால்வகையுயிர்ப்பெருக்கோ
சீதமலராதனத் துறைபிரமனுதியாந் தேவரொருமூவர்தாமோ
தீராதவாதமுறு சமையத்தினோர்கள்பகர் தெய்வங்களத்தனையுமோ
வாதவன்முதற்குலவு கிரகங்களோவென்னு மையமறவருள்செய்வாயே
வற்புதமிகுத்துயர் திருச்செந்தின்முருகாவெ னையமறவருள்செய்வாயே. (௩)

வேதாவிதித்தவரு மறைகளிற்சிவபிரான் விண்டருளுமாகமத்தின்
மேலவர்விளம்புபல நூல்களிற்குருவா விளங்கிநீசொன்னசொல்லில்
வாதாடுமறுவகைச் சமையசித்தாந்தத்தின் மன்னுசரிதங்கள்பலவின்
மங்கைநல்லார்பெருங் கற்புவலியிற்புலவர் வாய்க்கவிபலிக்குமியல்பிற்
பூதாதிகளிலளவில் பேதாதிபேதம் பொலிந்திலகுதோற்றங்களிற்
புனிதமந்திரதந்தி ரப்பகுதிகளிலகம் புறமென்னுமிருவிதத்தி
லாதாரமாயபுண் ணியபாவநிலையில்வரு மையமறவருள்செய்வாயே
யகளங்கவிரதங்க டருசெந்தின்முருகாவெ னையமறவருள்செய்வாயே. (௪)

காயிரும்பனையதிரு மேனிப்பிரான்மருவு காழியிற்புலவனொருவன்
கனலில்வெந்துள்ளதிரு நீற்றையிகழ்வார்தமைக் கழுவேறவிட்டஞாயம்
போயிளங்கற்றுவை யும்புசிக்கின்றவர்கள் புவிபுரக்கின்றதாலும்
புல்லியகவிப்புலவர் சொல்லியபடிக்கும் புரிந்தகலைவாணியிங்ஙான்
மாயிருஞ்சீர்க்கவிஞர் சொற்படிக்குஞ்செய்ய வாராதிருப்பதாலும்
வஞ்சமும்பொய்யுமுடை யார்தமைக்கண்டுமெய் வழக்காஞ்சுறலாதியா
மாயிரம்விதத்தாலும் வந்தெனைச்சூழ்ந்துள்ள வையமறவருள்செய்வாயே
யைந்தருப்புலவர்புகழ் செந்திலிற்குமரனே யையமறவருள்செய்வாயே. (ரு)

பெருகுபுனல்வாரியிற் கழுகுமலைவாவியிற் பிடிமிகுபொருநைநதியிற்
பிறிதினையினெல்லைக ளருகில்வருகான்முதற் பின்னுமுளபுனலிலனலிற்
றருநிழற்புலவர்களு மேங்குறவிடுத்தமுத் தமிழனைத்தையுமெடுத்துத்
தாணியில்விளக்கியுயிர் வதையாதிபுரிகின்ற சமையமுழுமையுமழித்துக்
கருணைமலிவுறுசமைய மத்தனைக்கும்பொதுக் காவலவனெனநிலாவிக்
கவுமாரசமையத் தகண்டவநுபூதியைக்கண்ணுளார்கொள்ளநல்கி
யருள்விளைக்கும்பெருமை விழைதலறியாய்கொலோ வைய மறவருள்செய்வாயே
யணிபொழிற்செந்திநக ராளுமுருகையாவெ னையமறவருள்செய்வாயே.

## வேறு.

கலந்துபிரிந்த மடவார்போற் கண்ணீர்சொரிந்து மனமிகவுங்
கலங்கியுனது திருவுருவக் கவினைகருதிக் கருதிமெலிந்
துலர்ந்தவிதழு மவிழ்முடியு முலைந்தவுடையுங் கிடையுமணைந்
தொவ்வோர்கனவிற் களித்துவிழித் துறங்காமையுமுற் றுழல்வேனைப்
புலர்ந்துதவியா வணம்புரக்கும் பொருவில்கருணை யுடையான்போற்
புகன்றவாறு நடவியருள் புரியாமையினாற் பூதலத்தி
லலந்துபோன தறியாயோ வையமறுத்தாண் டருள்வாயே
யலைவாரிதிச்செந் தூராவென் னையமறுத்தாண் டருள்வாயே. (எ)

கொடியார்தொழிலி லருவருப்புங் கொல்லாவிரதத் தினிலுரித்துங்
குலவுந்திருவே டமும்பெரிது கொண்டுமகிழாத் தவத்தினரும்
பொடியார்மேனிக் குறுமுனியைப் பொதியைவரையத் தினந்தொழுது
புகன்றவாறு நடவும்வலி பொருந்தக்குறியாப் புலவர்களும்
வடிவாளேந்தி யிகலாளுர் வருந்தப்பொருஞ்சீர் வாகையுடன்
மாறுக்கொடையுங் கொடுநீதி வழுவாதியற்று மன்னர்களு
மடியேனுளத்தி விறைத்துளதா மையமறுத்தாண் டருள்வாயே
யழகார்செந்திற் பதியிலென தையமறுத்தாண் டருள்வாயே. (அ)

வடமடவா ரதுதிர்ந்துள் ளுவகைமலிவால் வலிகணையு
மொன்றேநலமென் றநுதினமு முருகுமயற்பே யுடையார்போற்
காடுமலையும் பொருடேடிக் கானேந்துழன்ற வினைதீர்த்துன்
கமலக்கழலென் முடிமீது கவினப்புனைவா யெனவடைந்தேன்

பாடும்புலவர் திருநாவிற் பைம்பொற்பொழிலிற் சினைமுகின்முற்
பழையமறைபா கமத்தலையிற் பத்தரொருவன் பகர்நூணி
லாடுமயில்வா கனந்தரசே யையமறுத்தாண் டருள்வாயே
யருள்கூர்திருச்செந் தூரிலென தையமறுத்தாண் டருள்வாயே. (௯)

## வேறு

தந்தத்தன்னன தந்தத்தன்னன தய்யனதத்தனனா

கொம்புச்செம்மலை யென்கதுன்னெழில் கொள்ளுமடற்றகராய்
குன்றைக்கைம்முக வன்றுட்டன்னொடு கொல்லுமயிற்படையாய்
வம்புக்கொம்மைய கொங்கைப்புண்ணிய வல்லிமடிப்புதல்வா
வஞ்சத்தம்மனர் தந்தூர்க்கண்ணெதிர் வையுமருட்புலவா
செம்புற்றன்னத ளொன்றைத்தன்னது செய்யவரைக்கணிவார்
சிந்தைக்குண்மகிழ் வொன்றப்பன்னிய தெய்வமொழிக்குரவா
வம்புக்கண்ணியர் தொந்தத்தின்முதி ரையமறுத்தருளே
யன்பர்க்குண்மைசொல் செந்திற்சண்முக வையமறுத்தருளே. (௧௦)

தய்யத்தந்தன தய்யத்தந்தன தய்யனதத்தனனா

வல்லொக்குஞ்சிறு தொய்யிற்கொங்கையர் மையல்வலைப்படலால்
வர்மச்சிந்தையர் கையிற்புன்பொருள் வெளவியிளைப்பதனா
லில்லத்துன்பினர் கைசுற்றுங்கலி யெய்தியிளைத்திடலா
லெள்ளற்கொண்டிரு னைவுற்றுன்றனை யில்லையெனத்தளர்கேன்
வெல்லத்தின்சுவை யொல்கச்செந்தமிழ் விள்ளுமவர்க்கெளியாய்
வெள்ளைச்சங்கர னுள்ளத்கண்டருண் மெய்பகர்சற்குரவா
வல்லற்றொந்தர வைதிற்சிந்திய னையமறுத்தருளே
யையர்க்கின்பருள் செல்வச்செந்திலி லையமறுத்தருளே. (௧௧)

தந்தாதந்தன தந்தாதந்தன தய்யனதத்தனனா

ஐந்தாகும்பொறி கொண்டார்தஞ்சுத வையமறுத்தருளே
யம்போசன்றனை வென்றுடுக்குக வையமறுத்தருளே
யந்தோவென்றழல் கண்டாய்வந்தினி யையமறுத்தருளே
யஞ்சேலென்றுமுன் விண்டாயின்றென தையமறுத்தருளே
யந்தார்கின்றகெ லென்றாய்துன்புட னையமறுத்தருளே
யன்றேநம்பின னன்றேமிஞ்சிடு மையமறுத்தருளே
யந்தாவென்றுசொல் வம்பேன்வன்புறு மையமறுத்தருளே
யன்பேர்வந்தமர் செந்தூரந்தனை வையமறுத்தருளே. (௧௨)

---

பத்தாவது

# திருவாய்மலர்தல்

கொம்பனையகொங்கையுமை யுங்கிர்த்திகையருங் கொடுத்தபான்மிகவருந்திக்
குஞ்சரமுகத்தொரு முதற்றமையனொடுமிகக் கொஞ்சிபிகலிக்குலாவி
யம்பரகடம்பயில் பிரானுக்குமுத்தமி ழகத்தியமகாமுனிக்கு
மருணகிரிநாதன்முத லாயசிலருக்குமறி வரியபிரணவமுணர்த்திச்
செம்பதுமவேதனைச் சிறிதுவினவிச்சமணர் திறலழியவாதுவென்று
தினைவனச்சிறுமிதரு சிற்றுண்டிமிகவுண்டு சிறியனேன்சிந்தைதன்னிற்
றெம்படையவந்தொரு விதம்பலதாஞ்சொன்ன திருவாய்மலர்ந்தருள்வையே
செந்திநகரந்தனில்வ ருங்குமரகுருபரா திருவாய்மலர்ந்தருள்வையே. (க)

மங்குனிகர்குழல்வாணி நாவினின்றநுதினமு மழையெனக்கவிபொழியவும்
வனசமலரிற்குலவு திருமாதுவறுமைநோய் மருவாதுகருணைசெயவும்
பொங்குமணமலர்வாளி யைந்துடையமதனவேள் பொருதுமயல்விளையாமலும்
புனிதமறைநான்குடைய வேதியனெனக்கெனப் புதியவுடல்சமையாமலுங்
கங்குனிகர்பெருடற் கூற்றுவனெனைக்கண்டு கறுவுதொழில்விழையாமலுங்
கதிர்வேலுமயிலும்வென் சேவலுமெனைச்சுற்று காவல்சற்றகலாமலுஞ்
செங்குமுதமலர்நிரை யெனக்குலவுமிருமூன்று திருவாய்மலர்ந்தருள்வையே
செந்தமிழ்வளம்பெருகு செந்தில்வளர்கந்தனே திருவாய்மலர்ந்தருள்வையே.

இந்துநிகர்வதனங்க ளாறுமணிமுடியாறு மிலகுமங்கதநிரைத்தோ
ளீராறுமுவிலைச் சூலம்வச்சிரமுத லியம்புபடையாவுநீபக்
கொந்துலவுமார்பமும் பனிவரைக்குமரியுங் குன்றவிற்கையுளானுங்
குழலினுஞ்சடையினுங் கண்களினுமணிசரண கோகனகமுந்துலங்க
வந்துசரபம்பொருவு சேவற்பதாகைமிக வாழியெனவோதுகின்ற
வலிபெறுங்கவுமார சமயசித்தாந்தமுணர் மாதவருளென்னைவைத்துச்
செந்துவர்க்கின்னங்க ளென்னச்சிறந்துள்ள திருவாய்மலர்ந்தருள்வையே
செயமலிந்துயர்செந்தி நகரில்வந்தமர்கந்த திருவாய்மலர்ந்தருள்வையே.

பரசமையமத்தனையு நடுநடுங்கப்பொருது பாமாலைகோடிபாடிப்
பரவையிற்பொருநையிற் கனலில்விட்டுள்ளபல பனுவலையும்வரவழைத்துப்
புரவலர்முதற்குலவு மனிதருங்குலிசப் புந்தரன்முதற்றேவரும்
போற்றுமெய்ப்புகழ்பொறுத் தெண்ணியபடிக்கெலாம் புரிகின்றபேறுபெற்று
மரகதநெடுங்கிரி யெனக்குலவுதோகைமயில் வாகனத்தெந்தவேளை [தேன்
வாவென்றழைப்பினுமென் முன்வந்துநீயருள் வழங்கும்வாழ்வுறவிழைந்
திடமிகுசடாக்கரத் துள்ளபொருளீதெனத் திருவாய்மலர்ந்தருள்வையே
சேவலங்கொடிகுலவு செந்தில்வடிவேலவா திருவாய்மலர்ந்தருள்வையே. (ச)

வெம்பூதகணநாதர் பலர்பாவுபுகழ்கொண்ட வீரவாகாதியாய
வில்லாளிகளிலிவனு மொருவனேனவென் றுலகு மெச்சுமுயர்வென்றி துன்றிக்
கொம்பூதுவார்தமக் கஞ்சுமொருநால்வகைக் குலமுமகிழ்வெய்தல்கண்டு
கொல்லாதவிரதமெங் கெங்குநிலவச்செயல் குறித்துவழிபடவறிகுவாய்
வம்பூமையாகியெழின் மதுரையின்சங்கத்து வைகுமக்கபடமென்றன்
மட்டுக்கும்வேண்டா மலர்ப்பிரமன்மனைவியுமென் மாமியுமெனக்குலாவுஞ்
செம்பூரவாகனத் தினளோடுபேசலிற் றிருவாய்மலர்ந்தருள்வையே
தெய்வப்பெரும்புகழ்ச்செந்திின்முருகையனே திருவாய்மலர்ந்தருள்வையே.

ஆதியம்பரனை பரமனுஞ்சிவைபுநின் னருண்மொழிச்சுவை விரும்பி
யடல்விடையிலேறுமப் போதுமகலாதுவைத் தளிகூருமந்தவுண்மை
நீதிகருதிடிலென்சொல் வினவுதற்கதியாசை நீயுநின்மனைவிமாரு [யோ
நித்தமுங்கொள்ளன்முறை யாமன்றியடியனே னின்மொழிவிரும்பன்முறை
கோதினின்றந்தைதா யாகுமவர்நின்மழலை கொள்ளின்மறுமாற்றமொன் றுங்
கூறார்களோவென்னை நீயுமவர்போலநின் குலமயிலில்லைத்துளாயோ
தீதில்பிரணவமணங் கமழ்கின்றதாயநின் றிருவாய்மலர்ந்தருள்வையே [யே
செம்பொன்மதில்சூழ்திருச் செந்திலெந்தாய்சிறிது திருவாய்மலர்ந்தருள்வை

வேறு

சைவமுதலா மாறுவகைச் சமையப்பயிர்வா டுதல்சிறிதுஞ்
சகியாதுழன்றுன் ஞெறெழுத்தே தஞ்சமெனநம் புறவேன்முன்
பொய்வக்கணைச்சொற் பலகூறிப் புலையாடுதலே தொழிலாக்கொள்
புன்மைச்சமைய மெனுங்களையின் பொலிவுங்காட்டப் புகுந்தாயே
யைவர்க்கொருதா யாவாளை யயில்வேலாக்கிப் பிரகிருதி
யதனைமயிலாச் சமைத்தேறி யசலந்தொறுஞ்சென் றருள்விளக்குந்
தெய்வக்குகனே யின்றுனது திருவாய்மலர்ந்தாண் டருள்வாயே
செந்தூர்க்குமர குருபரநின் றிருவாய்மலர்ந்தாண் டருள்வாயே. (எ)

ஆராதனஞ்செய் தெழுத்தாறு மருட்டாயெனத்தேர்ந் தநுதினநின்
னணியார்கோலங் கருதுமெனக் கானபெரும்பே றருளாமற்
காரார்குழலார் மையலெனுங் கடலூடமிழ்த்திப் பொருளாசைக்
கனலால்வெதுப்பி வருத்துவதுன் கருணைப்பொலிவிற் கழகேயோ
போராடவுணர் தலையிடலாற் புழுங்குமமரர் குலம்வாழப்
புரியக்கருதுங் குறிப்பதனைப் போகியுதவும் புதல்வவது
சீரார்கனவிற் றெரித்தபுகழ்த் திருவாய்மலர்ந்தாண் டருள்வாயே
செந்தூர்க்குமரப் பெருமானின் றிருவாய்மலர்ந்தாண் டருள்வாயே (அ)

கொங்கேய்ந்தலரு மலர்க்கடம்பிற் கொழிக்குந்தமிழ்நா வலர்கவியிற்
கொற்றம்பொலியுங் கோலவேலிற் கூவுஞ்சேவற் கொடித்தலையிற்
பங்கேருகப்பூந் தடஞ்சுனையிற் பாவையனையார் கரங்காலிற்
பலபூணெறிக்குந் திருமார்பிற் பவளமெறிநீர்க் கடற்கரையிற்

றங்கேளிரும்வாழ் வதுகருதுங் தவத்தோர்கருத்தின் மணிகுயிற்றுங்
தகைசானுறுப்பின் ற:டமதிளிற் சந்தாசலத்திற் றழல்விழையுஞ்
செங்கேழ்பிறங்குஞ் செந்துரா திருவாய்மலர்ந்தாண் டருள்வாயே
சிறியேனுய்யும்பொருட்டொருக்காற் றிருவாய்மலர்ந்தாண் டருள்வாயே (கூ)

## வேறு

தனதனதந்தன தனதனதந்தன தனனுதனதானு

அணிகொள்குறிஞ்சியி னடமுயனுந்துணை யடியேகருதேனே
வதிநயவிங்கித மதுராமுறுந்தமி முதனுன்மொழியேனே
பணிலமுறுங்கா முாகரியென்றகல் படிமீதவிரேனே
பாமனறிந்துயர் பொருளறியுந்தவர் பலருடுறையேனே
கணிபெனநின்றொரு குறமின்மணம்புணர் கனகாமுகவேளே
கருணைமலிந்துள கடவுளெனுந்தொனி கடல்போலொலியாதோ
திணிபெறும்வென்றிகொ டௌமகிழும்படி திருவாய்மலர்வாயே
செயபதிசெந்திலில் வருகுகவன்பொடு திருவாய்மலர்வாயே. (கo)

தந்தத்தந்தன தந்தத்கந்தன தனனுதனதானு

தந்திக்குந்தக ரொன்றிற்குஞ்சிகி தனேரேர்புகழிவாய்
சந்தப்பைங்கிளி யின்சொற்கின்புற தகைசால்குகவேளே
பந்திச்செந்தகை துன்றத்தன்றிரு வருளால்வளர்பாலா
வன்பிற்கெஞ்சின னுய்ந்திட்டம்பெற வயில்வேல்விடுதோளா
வந்திக்கின்றவர் துன்றச்சந்தத மலேதோறமர்வோனே
வஞ்சச்சிந்தைகொள் வண்டர்க்கந்தகன் வடிவாமுருகோனே
சிந்திக்கும்புகழ் தந்தத்தங்கமழ் திருவாய்மலர்வாயே
செந்திற்புங்கவ வென்றற்கென்றொரு திருவாய்மலர்வாயே. (கக)

தத்தத்தந்தன தத்தத்தந்தன தனனுதனதானு

சித்தர்க்கன்றொரு சொற்செப்புங்குக திருவாய்மலர்வாயே
செச்சைத்தொங்கல்வ னப்புத்திண்புய திருவாய்மலர்வாயே
சிந்தத்தன்புறு பத்தர்க்கின்பரு டிருவாய்மலர்வாயே
செக்கர்ச்செந்தகர் பற்றிக்கொண்டவ திருவாய்மலர்வாயே
சித்திக்கும்பா முத்திக்குந்தகு திருவாய்மலர்வாயே
திக்கெட்டும்புகழ் மெய்ச்சத்தங்கமழ் திருவாய்மலர்வாயே
தித்திக்கின்றதி னேச்சிற்றுண்டிகொ டிருவாய்மலர்வாயே
செப்பச்செந்தின கர்க்கோற்றம்பொரு திருவாய்மலர்வாயே. (கஉ)

---

பதினோராவது

# சத்தியம்

செந்தகையகல்லாடை யுந்தவளநீறுஞ் சிறந்தகண்டிகையுமாய
திருவேடமுள்ளபல முனிவரெனநான்மறைத் திரிசுதந்தராதியா
மந்தணர்களெனமன்ன ரெனவணிகரெனவுழு மலப்படைக்காரரென்ன
வயிலணியுமறவேட ரென்னமடமாதருட னுடல்புரிகூத்தரென்னக்
கந்தன்முருகன்குமர னெனலாதியாம்பெயர்க் காரரெனமழலைதவிராக்
கான்முளையினங்களென வுள்ளபடிசிந்தையிற் கருதுகுருவடிவமென்னச்
சந்ததமுமென்கனவில் வந்துநீபகர்கின்ற சத்தியந்தவறொணாதே
சந்தவரைதிகழ்செந்தில் வந்தகுகனேயுனது சத்தியந்தவறொணாதே. (௧)

விண்முகப்புலவர்களு மேதினிப்புலவர்களும் வெண்ணீறுமிகவணிந்து
மெய்த்தவம்புரிவாரும் வேடமட்டிட்டென்னில் வீணாட்கழித்துளாரும்
பண்முகச்சுருதியுணர் பனவர்முதலாமெனப் பகர்கின்றகுலினர்தாமும்
பசுமேடமாதியவு மளவறுந்துயர்கொண்டு பரதவித்திடலறிந்து
மண்முகத்தொருகுரவ னாகிவிளையாடாத வன்மையுன்றன்மைகொல்லோ
மதுரையிற்சமணரைக் கழுவேற்றவர்தபுகழ் மறையாமலருளநினைவாய்
சண்முகக்குமரகுரு பரமுருகனேயுனது சத்தியந்தவறொணாதே
தமிழ்வளம்பொலிசெந்தி னகர்புரந்தருள்கந்த சத்தியந்தவறொணாதே. (௨)

பொதுமுதலெனக்குலவு நாதநாதாந்தபரி பூரணசொரூபமொன்று
பொன்றுமலென்றென்று முள்ளபடியுள்ளதும் போதாதுபரமெரித்து
விதுவணிசடைப்பரம னாதியைவருமாகி வேறுமிந்திரனாதியாம்
விபுதர்களுமேனைய சராசரங்களுமாகி வெல்லரியசூரைவென்று
பதுமகோமளைமங் கலங்களைந்தயிராணி பைம்பொன்மங்கலமுற்றநூல்
பழுதின்றியிலகப் புரந்தருளமடுவிலொரு பவளவடிவஞ்சமைந்தாய்
சதுமறையிலாகம புராணங்களிற்சொன்ன சத்தியந்தவறொணாதே
சரவணபவாசெந்தி னகர்வளர்குகாமுன்சொல்சத்தியந்தவறொணாதே. (௩)

ஆக்கிடலளித்திட லொழித்திடன்மறைத்திட லநுக்கிரகமெய்தவிடலா
மைவகைத்தொழிலுமவை யின்றியதனிப்பதமு மானநினெழுத்தாறுமே
பாக்கியமெனக்கருதி நீறுபூத்தொளிர்கின்ற பவளமேனியைவெற்றிவேற்
படையினைத்தோகைமென் குடைநிலவுபிணிமுகப் பரியினைப்பதாகத்தாற்
றுக்கியமரிடுசேவ லங்கொடியைமுத்தமிழ்ச் சந்தப்பசுங்கிள்ளையைச்
சற்றுமறவாமற் றியானித்திருக்குமச் சமையத்துதிப்பதான
சாக்கிரக்கனவினிடை வந்துவந்துரைசெய்த சத்தியந்தவறொணாதே
சருவதந்திரயோகர் வருசெந்திலாயுனது சத்தியந்தவறொணாதே. (௪)

வெள்ளைமலரிருபோது முப்போதுநல்கியதும் விண்ணிலசரீரியாக
வெருவிதஞ்சொல்லியது முலகத்துளார்பலர் விளம்பிடச்செய்தவிதமுங்
கிள்ளையெனவாயிரந் தரமெனதுகனவிற் கிளத்தியதுமையமுற்றுக்
கேட்டபடிசீட்டளவில் விசையளித்ததுவுங் கிரீடாதிபரையுமதியாக்
கொள்ளைமதம்வலியக் கொடுத்ததுவுமுத்தமிழ் கொழிக்குநலமுதவிவினவிக்
கொண்டாடியதுவுமிப் போதுநாவிடைநின்று கூறுவதுவுங்குறிக்கிற்
றள்ளைமுதலாயபொரு ளொன்றுமேயாகியதோர் சத்தியந்தவறொணாதே
சருவசமையங்களும் பாவுசெந்தூரநின் சத்தியந்தவறொணாதே. (௫)

குமரகுருபரனை நானேயுனைக்கவிதை கூறிடச்செய்தேனெனக்
கொற்றமிகுமார்பினிற் றட்டிமுக்காலுமுன் கூறவிலையோவொருக்காற்
பமரமுரனீபங் குராவெட்சிபோலுநின் பாமாலையென்கவிலையோ
பைம்பொற்பெருஞ்சிவிகைமீதுவந்தொருசொலைப்பலதரஞ்சொல்லவிலையோ
சமரமிகுசேவலங் கொடிவந்தென்மொழிகொண்டு சத்தமிடவிடவில்லையோ
தனிவீரவாகுவைக் கொண்டுபலவசனங்கள் சாற்றிடச்செய்யவிலையோ
தமரவர்களானகவு மாரர்சிலரறியச்சொல் சத்தியந்தவறொணாதே
தண்டமிழ்ச்செந்திநகர் கொண்டகுருநாதனே சத்தியந்தவறொணாதே. (௬)

வேறு

மானேர்விழியார் மொழிவிளக்கு மையல்வலையி னிடைப்பட்டு
மதவேள்கணையாற் றுளைப்புண்டு மறுகுந்துயரின் மலிவறிந்து
மேனேனிரங்கா திருக்கின்றா யென்னையுனதாளெனவுலகு
மிசைக்கப்புரிந்தோ னெவன்கொல்லோ யாதுன்செயலுக் கயலியம்பா
யூனேயுயிரே யுயிர்க்குயிரே யொன்றாய்ப்பலவா யுயர்பொருளே
யுலவாப்புகழ்ச்செந் தூர்ப்பெருவாழ் வுடையகுகனே யுமைமதலாய்
தானேவலியத் தடுத்தாண்டாய் தமியேற்கருளாய் சத்தியமே
சந்தாசலத்துன் றனையடைந்தேன் றமியேற்கருளாய் சத்தியமே. (௭

கோதுதவிர்சீர்த் திருமலையின் குவட்டிற்கழுகு மலைத்தூணிற்
குலவுமருணை கிரிக்குகையிற் கொச்சிக்கழியி னாவாயி
லோதுமிவைநேர் பலதலத்தி லுறுகணுறும்போ துனதருள்வந்
துய்யப்புரிந்த விதஞ்சிறிது முலகோருணரத் தக்கனவோ
காதுமுனைவேற் படைப்பூசைக் களிப்பொன்றளித்தாய் பயன்சிறிதுங்
காட்டாதிருக்கத் தகுங்கொல்லோ கழறன்முழுதும் பிழையாமோ
தாதுமலிபூங் கடம்பணிவாய் தமியேற்கருளாய் சத்தியமே
சந்தாசலத்துச் செந்தூரா தமியேற்கருளாய் சத்தியமே. (௮)

நந்தப்பொலிவை மணிக்குவையை நாறுமலர்ப்பூம் பொழிலினத்தை
நந்தாவனத்தை வயற்றொழிலை நாற்றுநடுவார் தமைநகுவெண்
டந்தக்களிற்றைக் கமலமலர்த் தடத்தைக்கதலி தனைக்கரும்பைச்
சாலிப்பயிரைப் புகழ்வதற்குச் சலிப்புற்றுனக்கே தமிழ்பகர்வேன்

கந்தக்கடம்ப மலர்மார்பா கதிர்வேற்படைக்கைக் காவலவா
கண்களாறுமுன் றுடையானே கருணைக்கடலே கதித்துணையே
சந்தப்புலவர்க் கெளியானே தமியேற்கருளாய் சத்தியமே
சந்தாசலத்துச் செந்திலெந்தாய் தமியேற்கருளாய் சத்தியமே. (கூ)

## வேறு

*தந்தனதானு தந்தனதானு தத்தனதனதானு*

பங்கயமாணு ரென்றுளிர்சேர்தோய் பற்பலர்மயலாலே
பங்கமதானே னென்கினுமேலோர் பத்தியைவிடுவேனே
புங்கவராவா ருந்தளர்நோய்சேர் பொய்ப்பொருணசையாலே
பொங்கருள்வாழ்வே தஞ்சமெனுவாழ் புத்தியையிகழ்வேனே
சங்காணர்பே ணுங்கழலானே சற்குருவெனவோதார்
தம்புடையூடே சென்றவரோடே தக்கமுமிடுவேனே
தங்கமயூரா செங்கதிர்வேலா சத்தியமறிவாயே
தண்டமிழோர்சூழ் செந்தில்விசாகா சத்தியமறிவாயே. (கo)

*தந்தத்தனதன தந்தத்தனதன தத்தனதனதானு*

பண்டைக்கொடுவினை துஞ்சப்புரிவது பற்றிடல்பிழையாமோ
பஞ்சத்தயர்பவ ரஞ்சக்கறுவுகர் பட்சமுநலமேயோ
சண்டைப்பகடிவர் துங்கச்சமன்வலி தட்டிடலரிதேயோ
சங்கப்பலகையி லின்றுற்றிடவல தத்துவரிலையேயோ
கெண்டைக்கயல்பொரு கண்பெற்றுளவறு கிர்த்திகைமகிழ்பாலா
கெஞ்சச்சிலர்சிலர் கொஞ்சக்கலைகவர் கிட்டிணன் மருகோனே
தண்டைக்கழல்கொடு குன்றிற்றிரிகுக சத்தியமறிவாயே
சந்தக்குவடொளிர் செந்திற்குருபர சத்தியமறிவாயே. (கக)

*தத்தனதனனு தத்தனதனனு தத்தனதனதானு.*

தத்தறவடிவேல் விட்டருள்குகனே சத்தியமறிவாயே
தற்பரன்விழியான் முற்றருபுதல்வா சத்தியமறிவாயே
தத்துவமுடிமீ துற்றசண்முகனே சத்தியமறிவாயே
சட்டியின்முதரு ரைக்கொலைபுரிவாய் சத்தியமறிவாயே
சத்துமுதலவா முப்பொருளுடையாய் சத்தியமறிவாயே
தட்டறுமநபூ திக்கொருதுணைவா சத்தியமறிவாயே
சத்துவகுணர்சூழ் சற்குருபரனே சத்தியமறிவாயே
சத்தியொடலைவா யிற்றிகழ்முருகா சத்தியமறிவாயே. (கஉ)

---

பன்னிரண்டாவது

# செவிகொடுவினவல்.

பருப்பதத்தெதிரொரு பருக்கைக்கலுறுவதிற் பரிதியெதிரொருமின்மினிப்
பறவையுறலிற்பரவை நீர்க்கெதிரிலானடி பதிந்தகுழிநீர்நிற்றலின்
மருப்பொலிசெழுங்கமல மலரினெதிர்நெய்தலு மலர்ந்திடலின்மும்மதத்து
வாரணத்தெதிரேன மாரவாரஞ்செயலின் மயிலெதிரில்வான்கோழியும்
விருப்புடனடித்திடலின் விதுவினெதிரிற்குலவும் வெண்சங்கமணியிலருணை
மேவியகிளிப்புலவ னோதியதிருப்புகழின் வியனெண்ணிவெட்குறுமற்
றிருப்புகழெனச்சிறிய னேனும்பிதற்றலைச் செவிகொண்டுவினவியருளே
செஞ்சொல்வளமிஞ்சிய திருச்செந்திலாயுனது செவிகொண்டுவினவியருளே.

கொற்றமழுவாளியொடும் வாதமிடுகீரனொரு குன்றிற்பகர்ந்தகவியுங்
குலவருணைநகரிலுள சிகரியிற்கிளியொன்று கூறியதமிழ்ப்பாடலுஞ்
சொற்றகைச்சூதனின் கவியொன்றுகொண்டுபின் சொன்னபிள்ளைக்கவிதையுந்
துயருறுந்தாய்தந்தை களிகூரவூமைச் சுதன்சொன்னசொன்மாலையுங்
கற்றவர்தொழும்புகழ்ப் பொருநராறுதியர் கணக்கிலார்கவிதைபலவுங்
கதிர்வேலிலங்குபுய மீதணிந்தவரவர்கள் கருதுநலமருளனிசமேற்
சிற்றறிவினேன்றொடுக் கின்றகவிகளையுநின் செவிகொண்டுவினவியருளே
செம்பொனுந்தமிழூட்டலி செந்திலம்பதிமுருக செவிகொண்டுவினவியருளே.

அஞ்சொற்கிளிப்புலவ னீயேயெனச்சொன்ன வாச்சரியமொன்றுபோது
மப்படியிருக்கிலெனை யிப்படிவருத்துவ தடாதடாதையகோகோ [ய்
வெஞ்சொற்புறச்சமையர் தங்கண்முன்னுனிமன மேனியொடுமெலியவிட்டா
விபரீதகெம்பீர வுற்சாகமெய்தப்பல் விதமுரைத்தேங்கவைத்தா
யெஞ்சொற்பனத்தோடு நனவினுமிருந்தவறி வேகமேயன்றியிலையே [டோ
யிப்பொருளமைந்தகவி யொன்றொருதொழும்பற் கியம்பியதின்மறதியுண்
செஞ்சொற்றமிழ்ப்புலமை தந்தநீயென்சொலைச் செவிகொண்டுவினவியருளே
சித்தர்புகழ்செந்திநக ரத்தில்வளர்கந்தனே செவிகொண்டுவினவியருளே.

புவிபடைத்தவனைப் புடைத்தநாளிற்றந்தை போற்றற்பொறுத்துமகிழும்
புதியநெறியாளனென் றொருபெயரெடுத்தாய் பொறுமையாற்போர்விளைத்த
கவிஞர்தங்கழகத் திருந்தநாளூமையங் கனிவாயனெனநிகழ்ந்தாய்
ககனத்திலொருகுற மடந்தையுறுநாளையிற் காமுகத்தன்மையுற்றாய்
பவிழ்மலர்ப்பொழினீடு மருணைநகரிற்புலவ னங்கத்தையமணனீற்று
மப்பொழுதுகண்ணிலா னெனவிருந்தாயென்னை யாளாததகைமையதனாற்
செவிடனென்றொருபெயரு மெய்தேல்விரைந்தினிச் செவிகொண்டுவினவியருளே
செந்திலம்பதியில்வளர் கந்தவென்சொற்களைச் செவிகொண்டுவினவியருளே.

கந்திப்பசுங்காய் நிகர்த்தமுலைமங்கைக்கோர் கையுதவிமுன்னின்றதுங்
கற்கிமுகவேதாள முங்கிரியுமிருகூறு காணவடிவேல்விட்டதும்
புந்தித்திறங்குலவு மருணகிரிநாதன் புகன்றதுணிடைவந்ததும்
புளிமரக்கொம்பொடித் திடலாதியாயபல புலவருக்காச்செய்தது
மந்திக்குணங்கொண்ட தமியேனையிவ்வணம் வணக்கியதுமொவ்வொருக்கால்
வலியவந்திந்திரா தியருக்குமெய்தரிய வார்த்தைகள்பகர்ந்தேகனுஞ்
சிந்தித்துநல்கெனக் கேட்டபொருளியாவையுஞ் செவிகொண்டுவினவியருளே
செந்திற்பதிக்குமர குருவேயென்மொழிகளைச் செவிகொண்டுவினவியருளே.

மும்மணிக்கோவைபல மாலைபலவந்தாதி மூவகையபலவின்னவா
முதுநெறிப்பனுவல்பல புதுநெறிப்பனுவல்பல முத்தமிழ்ச்சுவைவழாம
விம்மணிப்புலவர்பலர் மகிழ்வுறமொழிந்துளே னிப்போதுநுவலுகின்றே
னின்னமும்பகருவே னின்னருளுரித்தெனக் கிந்தமட்டினிலிருந்துங்
கைம்மணிச்சம்பந்த ஞதியர்க்குந்தையருள் கருணையிற்சிறிதுநல்கக்
கருதுகில்லாயிதுன் பெருமைக்கிசைந்ததோ கனகத்தினிடைபதிந்த
செம்மணிக்குண்டல மசைந்தாடுமீராறு செவிகொண்டுவினவியருளே
செந்திற்பதிக்குமர குருநாதனேயுனது செவிகொண்டுவினவியருளே. (சு)

## வேறு

வெப்புமலியுங் கனற்போலு மிடியின்றுயரா லிருளாய
வேழமேற்கொண் டமர்செயும்வேள் விறற்பூங்கணையான் மெலிவெய்தி
யெய்ப்புமுதலாம் பிணிபலநோய்ந் திறவாவண்ண முனைக்கருதி
யெழுத்தோராறு மிகக்கூறி யியலாதியமுத் தமிழ்பகர்வேன்
றுப்புவரையோர் மரகதப்பைந் தோகைவரைமேற் றிகழ்ந்தாங்கு
துலங்கியிமையா விழிப்பெருக்காற் றூயகருணை மிகச்சொரிந்தியான்
செப்புமொழிக ளனைத்தையுநின் செவியால்வினவி யருள்வாயே
செந்தூர்க்குகனேயுனதுதிருச்செவியால்வினவியருள்வாயே. (எ)

கன்றையிழந்த புனிற்றாவுங் காலியிழந்த பசுங்கன்றுங்
கதறுந்துயருஞ் சகித்தவற்றைக் காதியருந்திக் களிகூர்ந்து
நன்றையிகழ்ந்து பிழைபலவு நடவாநிறுமாப் பதுகண்டு
நானுமெனைச்சார்ந் துள்ளாரு நலிதற்றவிர்ப்பா யெனநம்பிக்
குன்றைமுழுதும் புரந்துவப்பாய் கொற்றவடிவேற் படையேந்திக்
கோலாகலமா மயிலூர்வாய் குறமாதுறையுங் குளிர்புனத்துஞ்
சென்றையெனப்போற் றிசைத்திடுஞ்சொற் செவியால்வினவியருள்வாயே
செந்தூர்க்குமர குருபரநின் செவியால்வினவி யருள்வாயே (அ)

எவ்வேளையுநின் றிருவுருவ மிதயத்தவிரு மியற்சிறு
மீனச்சமையத் தினர்பலரு மிரியக்கறுவு மிறுமாப்பு
மவ்வேமுதலாம் பொறிமூன்றுஞ் றூயவெழுத்தி னரும்பொருளோர்த்
தகிலத்தினிவந் துழலாவீ டடையுஞ்சுகமும் பெறவிழைந்தேன்

தெய்வேந்திரன்றன் றுயர்களைந்து தேவர்பலர்தஞ் சிறைநீக்கித்
திறற்சூர்மாவைக் கடலோடுஞ் சிலம்பினோடுஞ் செகுத்துவருஞ்
செவ்வேற்குமா குருபானே செவியால்வினவி யருள்வாயே
செந்தூர்முருகப் பெருமானின் செவியால்வினவி யருள்வாயே. (கூ)

வேறு

தனதனதனன தனதனதனன தனதனதனதான

பவமருள்வினையான் மெலிவுறுமெளியோர் பகர்துதியினியாதோ
பழமையிலுளகா வலர்கவிகளினீ படர்மயலுறலேனோ
வவனவனருகா னெனவெகுவிதமா யறைவதுதவிராதோ
வயனரியானு மியர்தொழுமுனதா ளமர்நிலையறிவேனோ
கவளமுமதவா ரணமுகனெடுநீ கலகமுனிடல்வீணோ
கடல்களைநிகர்வே தமுமளவறுமா கமவகைகளும்வேறோ
சிவகுருபானே சரவணபவனே செவிகொடுவினவாயே
திருமலியலைவாய் நகருறைமுருகா செவிகொடுவினவாயே. (கo)

தனதனதனதன தனதனதனதன தனதனதனதான

அறிவினையறிவது பொருளெனுமொருமொழி யதனநுபவமோரே
னழகியமாகத மயின்மிசையெனதெதி ரவிர்தரநினையாயோ
மறியொடுமழுவணி தருபரசிவனெனை வழிபடுநெறிகாணேன்
மலிபொழிலருணையில் வருகிளியொடுமொழி மறைமுடிவுரையாயோ
பறிதலையமணர்கள் முதலியகொடியவர் பகைதவிர்கிலன்மேனாள்
பனிவரைமகண்முலை யமுதயில்கவிநிகர் பரிசுறவருளாயோ
சிறியவரிடையொரு சிறியவனுவல்வன செவிகொடுவினவாயே
திரைகடல்பொருமண மலைமிசையுறைகுக செவிகொடுவினவாயே.(கக)

தனதனதந்தன தனதனதந்தன தனதனதனதானா.

சிரவணமந்திர புனிதர்தொழுங்குக செவிகொடுவினவாயே
திருமகள்பங்கினன் மருமகபுங்கவ செவிகொடுவினவாயே
சிரகமுனந்தர வருமுனியன்புசெய் செவிகொடுவினவாயே
தெளிதமிழுஞ்சுக மிகவுநெருங்கிய செவிகொடுவினவாயே
திரமிகுதிண்புய மிசையுலவும்பல செவிகொடுவினவாயே
செடிமலியுங்குற மகளுரைகன்குணர் செவிகொடுவினவாயே
திரளையனக்கொளு மெனதுபெருங்குறை செவிகொடுவினவாயே
செயமுறுசெந்திலில் வருமெனிளங்கவி செவிகொடுவினவாயே. (கஉ)

---

பதின்மூன்றாவது

# வல்லபம்வேண்டல்

கற்றைவார்சடைமீது கங்கைமதிகொன்றையங் கண்ணியணியண்ணலாருங்
கருநிறத்துத்திப் பணுடைவிப்பாயன்மிசை கடலிடந்துயிலுமாலும்
பற்றைவென்றுளமுனிவர் பரவுபேரவையுடைப் பங்கயாதனவேதனும்
பலமலைச்சிறகரிந் துங்கதுமைகுன்றாத படையொன்றுபற்றுவானு
மொற்றையாழிப்பெருந் தேருடைப்பரிதிமுதலுள்ளபலதேவர்தாமு
முலகினுளமாதவரு மன்னரும்புலவோரு முத்தமத்தன்மையுள்ளார்
மற்றையோர்களுமென்னை மெச்சுதற்கானபெரு வல்லபந்தரவேணுமே
மயில்வாகனசெந்தின் முருகேசனேயின்றோர் வல்லபந்தரவேணுமே. (க)

வானுலகினுள்ளவரு மெச்சிக்கொளும்பெருமை மன்னியபுசண்டமுனியை
மலயமால்வரைமுகடு தன்னினுற்றுப்பொருநை வரவிடுக்கின்றமுனியைத்
தேனுவிற்காகவிசு வாமித்திரன்கைவிற் றிறலழித்திட்டமுனியைச்
சீரியபுராணங்க ளீரொன்பதாதியவை செப்பிச்சிறந்தமுனியைத்
தானுரைசெய்கின்றபடி யசரங்களுஞ்சொலுந் தனிஞானமுற்றமுனியைச்
சமையங்களாறுக்கு மொருபொதுவனநின்று சங்கரப்பெயர்கொண்முனியை
மானுமுனியென்றென்னை யுலகமுஞ்சொல்லவொரு வல்லபந்தரவேணுமே
மந்தரம்பொருசந்த வரைகுலவுசெந்திலாய் வல்லபந்தரவேணுமே. (உ)

மண்டலத்திற்பகவ னென்னுமந்தணனருளில் வருமாதிமக்களைப்போன்
மதியணிசடைக்காட்டு முக்கட்பிரான்கருணை மருவுமொருநால்வரைப்போற்
கொண்டல்வண்ணம்பெறுமு குந்தனுக்காளெனக்குலவுமொருபதின்மரைப்போ
குன்றத்தினுறுகுகையு டைந்தொருபசாசுரங் கூறுபடல்கண்டவன்போற்[ற்
றண்டலைச்சோணகிரி தன்னிலொருசிகரியைச் சார்ந்துய்ந்ததவசியைப்போற்
றமனியமணிப்பதக் கம்பெற்றுளான்முதற் சாற்றளவில்புலவரைப்போல்
வண்டமிழ்க்கவிதைகொடு மாறாதபுகழ்நிறுவும் வல்லபந்தரவேணுமே
வையகம்புகழ்செந்தி லையனேயான்விழையும் வல்லபந்தரவேணுமே. (ங)

கையம்பையேவிக் கணத்திலொருதுட்டனைக் காதியதும்வீரவாகு
கட்டமுதுடன்சென்று வீரபாண்டியன்மரும கனையழைத்திடவிட்டதுஞ்
செய்யதமிழ் மதுரமொரு சிறிதுமறியார்புடை செறிந்தமலைநாட்டுமன்னன்
செம்பொனொருவற்குதவ வோதிடுநூறெனச் சென்றமீண்டதுமெய்சொல்லென்
றையமுறுவாருவகை யெய்தவெண்ணீறுமுத லாயமுப்பொருளுமேலென்
றூரணங்களுமாக மங்களுஞ்சொன்னவித மவிர்தரச்செயல்விழைந்தேன்
வையகத்தியாவர்களு மறியவிளையாடுமொரு வல்லபந்தரவேணுமே
மங்களம்பொலிசெந்தில் வந்தகந்தாவுனது வல்லபந்தரவேணுமே. (ச)

பூரணப்பொருளாய நின்வதனமாறுமே புனிதமிகுசமையமாறுப்
புகலுமறையாகம புராணங்களாதியவை புவியுள்ளநாள்வரைக்குஞ்
சீரணப்படலின்றி மிளிர்தருநிமித்தஞ் செருச்செய்யுமன்னர்புடையின்
றேசிகனெனக்குலவு பேராண்மையெய்தியொரு தெரிசனத்தன்றுரைத்த
காரணப்பயனடைந் திந்திராதியர்மருவு கனககிராதியிற்போய்க்
கவுமாரசமையப் பயிர்க்கினியதாமருட் கவிமாரிபெய்துகளியால்
வாரணக்கொடியே செயஞ்செயமெனக்கூவும் வல்லபந்தரவேணுமே
மகிதலம்புகழ்செந்தி னகர்புரந்தருள்கந்த வல்லபந்தரவேணுமே. (டு)

ஓயாதுவாதமிட் டுழல்கின்றசமையங்க ளுள்ளவர்கள்பலருமஞ்ச
வுடலிழந்தோர்சிலர்பி னதனோடுபூமியி லுலாவவுருவங்கண்மாறப்
பாயாதுபுலிகாடி யாதியவைபசுவெனப் பழகமுனிறந்தபாடற்
பனுவன்முற்றும்புவியி லொலிதரக்கற்பங்கள் பலகோடிநிமிடமாக
வாயாதுரைக்குமுன் றெலேயுமொருகணநேர மாவூழிகாலமாக
மற்றுமணிமாவாதி யாயவெண்ணெண்வகையும் வந்தேவல்செய்துநிற்க
மாயாவிலாசத் தருட்சித்துவிளையாடும் வல்லபந்தரவேணுமே
மருவார்பொழிற்செந்தின் முருகாவெனக்கென்றோர் வல்லபந்தரவேணுமே.

## வேறு

தறுகட்கொடுங்கூற் றுவன்பகையாற் றண்பூங்கணையான் சமர்ப்பெருக்காற்
சலசாதனத்தான் றரும்பவத்தாற் றழலிற்கொடிய மிடிநோயா
லறுவரிகழும் வசைப்பொலிவா லாசைக்கடலா லானவப்பே
ரழுக்காலருளோ டறந்தவிரு மசடருறவா லனையவற்றாற்
கறுவுஞ்சினமட் டமைந்துவிடங் கலுழ்பற்றவிர்ந்த மாசுணம்போற்
கைவாளிழந்த வீரனைப்போற் கரியமுகில்சூழ் கலைமதிபோன்
மறுகுந்தமியேன் களிகூர வழங்கியருளாய் வல்லபமே
மணமால்வரைச்செந் தூர்முருகா வழங்கியருளாய் வல்லபமே. (எ)

ஏற்றமருவு செல்வேலி யிடத்திற்பொருநை நதிநடுவி
லிலங்குமருணைச் சிகரியினி லெழில்வானகத்து மெய்தருநெய்
யாற்றங்கரையிற் புதுவைநக ரதனிற்றிருவா வினன்குடியி
லனந்தாபுரியி லனையநக ரளவில்பலவி லவிர்தருங்கூர்
வேற்றங்கிபகை யுடனொருக்கால் வேடக்கொடியோ டொருக்காற்பொன்
மிளிருஞ்சிவிகை மிசையொருக்கால் விளங்கிவிளங்கி மிகவுரைத்த
மாற்றமனைத்து மெய்யானல் வழங்கியருளாய் வல்லபமே
வளஞ்சேர் செந்திற்பதிவாழ்வே வழங்கியருளாய் வல்லபமே. (அ)

தருமமுதனாற் பொருள்விரிக்குந் தகுரான்மறையா தியநூல்கள்
சாற்றுநெறியிற் சிறிதேனுந் தழுவிநடக்குந் தகைமையிலேன்
கருமங்கடந்து சிவயோகக் காட்சிபெறுவார் தமையுமிகழ்
கசட்டுமனத்தே னருகனவிற் கவின்றபலசொற் கழறியதால்

வருமம்பெருக்கி யிறுமாந்து மயின்மேன்வலிய விழியெதிர்நீ
வருவாயெனவே நினைகின்றேன் மாலைக்கடப்ப மலர்கமழு
மருமக்குமர குருநாதா வழங்கியருளாய் வல்லபமே
மஞ்சார்பொழிற்செந் தூர்க்கிறைவா வழங்கியருளாய் வல்லபமே. (௯)

## வேறு.

*தந்தனதந்தன தந்தனதந்தன தய்யனதனதான*

மந்தரமென்றொளிர் கொங்கைமடந்தையர் மையலிலமிழாதே
வஞ்சகநெஞ்சுறு குண்டரையெங்கணும் வைதலின்மெலியாதே
கந்தரமென்றுத வுந்தொழில்கொண்டவர் கைகளையிகழாதே
கன்றியடைந்தவர் நொந்துகொளும்படி கைதவமுயலாதே
செந்தமிழின்சுவை கண்டுகொளுஞ்சிலர் செய்பிழைகருதாதே
சிங்கமுகன்குறு கும்படிவிண்டுள செவ்வியைமறவாதே
வந்தனைகொண்டுனை நம்பிவணங்கிடும் வல்லபமருள்வாயே
மன்பதைமிஞ்சிய செந்திலில்வந்தவ வல்லபமருள்வாயே. (க௦)

*தந்தாதத்தன தந்தாதத்தன தய்யனதனதான*

கந்தாகற்றவர் கொண்டாடத்திகழ் கையயிலுடையானே
கங்காளத்தரர் தம்பாலத்தருள் கல்விமைவுறுபாலா
திந்தாதித்திமி யென்றூடற்பயில் செவ்வியமயில்வீரா
செங்கேழ்முற்றிய குன்றேயொத்தொளிர் திவ்யமுருகோனே
கொந்தார்வெட்சிய ணிந்தாய்நத்திய கொள்கையினிருமானூர்
கொண்காசத்துரு சங்காரக்குக கொய்யினுமிதழ்வாடா
மந்தாரத்தொடை மொய்ம்பாமெச்சிடும் வல்லபமருள்வாயே
மஞ்சார்வெற்பவிர் செந்தூரிற்றனி வல்லபமருள்வாயே. (கக)

*தனதனதந்தன தனதனதந்தன தய்யனதனதான*

மாவடிவங்கொளு மவுணனைவென்றவ வல்லபமருள்வாயே
மகபதிதன்குல முடனுயவந்தவ வல்லபமருள்வாயே
மாரகதமென்றொளிர் மயிலிவர்புங்கவ வல்லபமருள்வாயே
வனசரமங்கைத னடிபணியுங்குக வல்லபமருள்வாயே
வரதமுடன்றனி யபயமுணர்ந்துகொள் வல்லபமருள்வாயே
மகிதலமெங்கணு மறியுநலஞ்செயும் வல்லபமருள்வாயே
வரமுனிவன்றமிழ் கொடுபலவென்றிபுல் வல்லபமருள்வாயே
வளையெறியுங்கட லலைமலிசெந்திலில் வல்லபமருள்வாயே (க௨)

---

பதினான்காவது

# புகழ்வேண்டல்.

பாமிகவினைந்துனது பங்கேருகப்பொற் பதங்களுக்கேயணிகுவேன்
பகைவென்றுபரஞான மிகைதருஞ் சத்திப்படைப்பூசையாசைதவிரே
னேமியங்கைக்கடவு ளாமெனவிதஞ்செய்து நின்னருள்விளக்கமுணர்வே
னித்திரைசெயினுமுன தெழுத்தாறுமறவாது நித்தநித்தம்புகலுவேன்
காமியமும்வீடும் பெறத்தக்கவண்மையுறு கவுமாரர் புடையினடுவிற்
கனகமயின்மீதேறி வந்தென்முனின்றுனது கைப்பனிரிலைநீறதாற்
பூமியொடுவானகமு முள்ளமட்டழியாத புகழெனக்குதவியருளே
பொன்றுதசித்தர்புகழ் செந்தூரிடத்திலொரு புகழெனக்குதவியருளே (க)

காரூர்பொழிற்பொதியை முனிவனுநறுந்தமிழ்க் கழகத்திலுறுகீரனுங்
கனல்வரைச்சாரலஞ் சிகரிவருபுலவனுங் களிமலிந்துளபோகனும்
பாரூர்பெருந்தகை படைத்துயர்திறற்புலிப் பாணியும்பாலையனும்
பாடலபுரத்தொருவ னுந்திருக்கோவலூர்ப் பரமயோகியுமுருங்கை
தேரூர்தருங்காளி விழவில்வெட்டுண்டுள தினத்தில்விளையாடியவனுந்
திருமலையிலாளிரை புரந்திருந்தவனுந் திருந்துரைவிளம்புதன்மைப்
போரூரனுதியர்க ளளவிலார்களுமுற்ற புகழெனக்குதவியருளே
பொங்குதண்கடலொலிகொள்செந்திலம்பதிமுருக புகழெனக்குதவியருளே.

விதிரிலைகுலாவுதனி வேலாயுதப்பூசை மேலுமேலும்புரிந்து
மெய்யருட்பேறுகொடு கவுமாரர்புடையோடு வெற்பினந்தோறுமேகிப்
பதிதருமமாதியவை யொருமூன்றுமளவற்ற பலகோடிவிதமியற்றிப்
பாவங்களத்தனையும் வேரோடறக்கொன்று பரசமையமுழுதும்வென்று
மதிபுனையும்வச்சிரக் கையன்முதலாமெண்மர் வாழுநகரங்கடோறு
மலரவன்றிருமா லரன்குடிகொளுலகுதொறும் வலிதுபோய்மீள்வதன்றிப்
பொதியைமுனிநாதனம ரவையினுஞ்சென்றுவரு புகழெனக்குதவியருளே
புளினம்பொதிசந்த வரைநிலவுசெந்திலாய் புகழெனக்குதவியருளே (௩)

ஆதவனையேபரம் பொருளென்றுளார்பலரு மரியசவுரவனென்னநீ
ரணிசடைச்சிவனன்ப ரைந்தாமெழுத்தினுக் கணியாகினனென்னநால்
வேதமுதலானபரை தன்னன்பரனைவோரு மிக்கசாத்தேயனென்ன [வோர்
விண்டுவைத்தெண்டனிடு கின்றவர்களனைவோரும் வீரவயிணவனென்ன
மாதரசிவைக்கயிலை மீதுவிட்டானன்பர் மன்னுதம்மினமென்னநின்
மலரடிகளைப்பரவு கவுமாரரனைவோரு மனமறியுமென்னவுண்மைப்
போதபரமானந்த மயமானபொருட் புகழெனக்குதவியருளே
புலவர்மிஞ்சியசெந்தி லகாறிர்ந்திடவின்றோர் புகழெனக்குதவியருளே. (ச)

இத்தேகமாதியவை மூன்றையுமுனக்கீந் தெழிற்சரிதையாதிநான்கு
மேகமாகியபத்தி நெறியினுக்கயலன் றெனத்தெளிந்தெந்தநாளுஞ்
சத்தேயிருப்பதென வாதாடும்வேதாந்த சாத்திரக்காரருக்குஞ்
சமயவாதிகளுக்கு மொருபொதுவனாகித் தவம்புரியுமவர்களன்றிச்
சித்தேதுநானேது சிவலோகமேதெனச் செப்பியுழல்கின்றபேருந்
தெய்வங்கள்கோடாது கோடியுண்டென்னுந் திருட்டுக்கருத்துளாரும்
புத்தேளிர்தாமும் பெறற்கரியதானமெய்ப் புகழெனக்குதவியருளே
பொன்பரவுசெந்தில்வளர் போர்வேலவாவுனது புகழெனக்குதவியருளே.

பொற்புமிகுமரகத கலாபச்சிகண்டியிற் பொன்னகர்க்கிறைவன்மகளும்
புனவேடர்தருமகளு மருகினுறவேன்முதற் புகல்படைகளாதியாய
வற்புதக்கோலமுழு மையுமிலகநால்விதத் தாரவாரங்களெய்த
வமர்விளக்குங்கொடிச் சேவல்குக்கூகுவென் றண்டமிசைநின்றுகூவக்
கற்புமிகுபலகோடி கவுமாரர்சென்னியிற் கைகுவித்துத்துதிக்கக்
காட்சிதந்தொருசருவ பிரசாதமுந்தந்து கனவுநனவாதல்செய்து
புற்புதமெனப்புவியில் வந்துவந்தழியாத புகழெனக்குதவியருளே
புலையொழிந்துயர்சில மருவுசெந்திலில்வேல புகழெனக்குதவியருளே. (சு)

### வேறு

பேசுமருமைத் தவத்தோரும் பெருகுமதூரத் தமிழ்ச்சுவையும்
பிறங்குநிறமா தியபிறவும் பேணிக்கொளுஞ்சீர்ப் பெரியோருங்
காசுதவிர்மெய் யருளாய கடலாரமுதிற் றிகழ்பெருமைக்
கருத்துள்ளாருந் தினந்தினமுங் காணும்புகழாற் களித்தில்லே
னேசுந்திறமைப் பொலிவெய்தி யெரியிற்சுடுமா ணவத்தோரு
மேமங்குலமா தியகருதி யியற்சீர்மறக்கு மிழிவினரு
மாசுமலியுந் தொழிலோரு மறியும்புகழ்ச்சி யருள்வாயே
யயில்வேற்குமாா வெனேச்செந்தூ ரறியும்புகழ்ச்சியருள்வாயே. (எ)

கரவில்பெரியோர் தமைச்சேர்ந்துன் கழலேகருதிப் பணிபுரியேன்
கடுவேடமிழ்து நிகர்விழியார் காமக்கடலி னிடைகுளிப்பேன்
பரவைநீரில் விடுத்ததமிழ்ப் பனுவல்விரும்பித் தவஞ்செய்யேன்
படியினுளவூர் தொறுமேகிப் பாழுக்குழைத்துப் பரிசழிவே
னிரவுபகலா றெழுத்தோதி யிடைவிடாதுன் றனைக்கருதி
யிளகுமனத்துக் கவுமாரர்க் கிசையுந்திருப்பே ரேனளித்தா
யரவினரசு முரைக்கரிதா மருமைப்புகழ்ச்சி யருள்வாயே
யலைவாரிதிச்செந் தூரானே யருமைப்புகழ்ச்சி யருள்வாயே. (அ)

கோழியெழுதுங் கொடிவாழி குலவேல்வாழி மயில்வாழி
கொல்லாவிரதக் கவுமாரர் குழூவும்வாழி யெனக்கூறிக்
காழிநகரிக் கவுணியனுங் கடலேச்சினவும் வழுதியுமோர்
கவினுருடலிற் புகுந்தாங்கு காணும்புதுமை பலவிழைந்தேன்

விழியிதழ்வாய்க் குறமடந்தை விரும்புமழகா திருச்செந்தூர்
மேவுமிறைவா மலைதோறும் விளங்கும்விகிர்தா விரிதிரைநீ
ராழியுடுத்த புவிமீது மளவில்புகழ்ச்சி யருள்வாயே
யந்தவுலகத் தினுந்தமியேற் களவில்புகழ்ச்சி யருள்வாயே. (௯)

வேறு

தானனதானன தானனதானன தனதன தனதான

வேதமுமாகம நூன்முதலாயவும் விழைதரு மிருபாதா
வேடுவர்பேதைகு லாவியகானக மிசையொருகணியான
யாதவராதிரு பேர்களுநாணுற வவிர்தருகுழையானே
யானைமுனொளொரு வாவியினூடுகொ ளமரமின்மணவாளா
சிதளநீபநி லாவியமார்புறு சிவசரவணநாதா
தேகமுமாவியும் வேறெனவோர்கிலர் தெரிவருநிலையானே
பூதகணாதிபர் சூழ்குகனேயுயர் புகழ்மிகையருள்வாயே
பூசுரர்வாழலை வாய்நகர்பேசிய புகழ்மிகையருள்வாயே. (௧௦)

தனதனதானன தனதனதானன தனதனதனதான

கரையறுபேரரு ளுததியின்மூழ்கிய களிகொடுநிலவேனோ
கனவினினிமொழி தருபலவாய்மைகள் களவிலதொளிராவோ
மரைநுகர்வேடுவ ரிதண்மிசைமேவிய மகள்குறிபலியாதோ
வகுளம்விடாதணி தருமதவேள்கணை மலரடிபணியாதோ
விரைகமழ்தாமரை மலருறைவானிடும் விதிவழிதவறாதோ
வெகுமுகமாநதி மருவியகோடிர விமலர்கனருள்பாலா
புரைதவிர்மேலவர் புடையினுமார்தரு புகழ்மிகையருள்வாயே
பொருதிரைவாரிதி தொழவளர்வேலவ புகழ்மிகையருள்வாயே. (௧௧)

தனனத்தந்தத் தனனத்தந்தந் தனதனதனதான

கருணைச்சிந்தைத் தவருக்கின்பக் கடலருண்முருகோனே
கயிலைக்குன்றத் திறைவர்க்கொன்றைக் கழறியகுருநாதா
பருவப்பெண்கட் குவகைப்பொங்கப் பரிசுறவருசீலா
பணிலச்செங்கைக் கடவுட்கஞ்சப் பகர்தருகனிவாயா
திருவைச்சங்கப் பலகைக்கொம்பைச் சிவகதியுடனீவாய்
செவிவிற்பைம்பொற் கிளிசொற்சந்தத் தெளிசுவைபுகவாழ்வாய்
புருடச்சிங்கத் திரள்செப்புஞ்சொற் புகழ்மிகையருள்வாயே
புனிதச்செந்திற் பதியிற்றங்கப் புகழ்மிகையருள்வாயே. (௧௨)

———

